> “தமது எதிர்பார்ப்புகளுக்கும் திட்டங்களுக்கும் ஏற்றபடி 2001-ன் நடுப் பகுதியிலோ அல்லது இறுதியிலோ நிச்சயம் பி.ஜே.பி. ஆட்சி கவிழ்ந்து இடைத்தேர்தல் வரும் என்றும் நம்புகிறார் சோனியா!”





# நேரு குடும்பம் தேர்தலுக்குப் பின்...



தனது சரித்திரத்திலேயே இதுவரை கண்டிராத தோல்வியைத் தழுவியிருக்கிறது காங்கிரஸ். மக்கள் செல்வாக்கு இல்லாத தலைவர்களான நரசிம்மராவ், சீதாராம் கேசரி தலைமைகளில் கூட 149 மற்றும் 141 இடங்களைப் பெற்றது காங்கிரஸ். அதற்காகவே தலைமைப் பதவியிலிருந்து அவர்கள் தூக்கியெறியப்பட்டனர்.







சோனியா காந்தி தலைமைப் பொறுப் பேற்றால்தான் கட்சி பழையபடி தலை நிமிரும்–நேரு குடும்ப வாரிசுகள் தலைமைப் பொறுப்பில் இல்லாவிட்டால் மக்கள் காங்கிரஸை ஏற்றுக் கொள்ள மாட்டார்கள் என்றெல்லாம் பிரசாரம் செய்யப்பட்டது.

சோனியாவும் தலைமைப் பொறுப்புக்கு வந்தார். வந்து என்ன பயன்? வெறும் 112 இடங்களில் மட்டுமே வெற்றி பெற்றிருக்கிற அவலம்தான் கட்சிக்கு நேர்ந்திருக்கிறது. இதனால், 'நேரு குடும்பத் தலைமை' என்பது வெறும் மாயைதானா என்கிற கேள்வியும் கட்சிக்குள் பலமாக அலசப்படுகிறது. இதற்கான முதல் கல்லை எறிந்திருப்பவர் முன்னாள் மத்திய அமைச்சர் கமல்நாத்.

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

இவர், மத்திய பிரதேசம் சிந்த்வாடா தொகுதியில் வென்றிருக்கும் காங்கிரஸ் தலைவர். தொடர்ந்து ஏழாவது முறையாக வென்றிருப்பவர். "சோனியா இமேஜ் என்பது ஒரு பொய்த் தோற்றமே தவிர வேறில்லை! எனவே 'காமராஜ் திட்டம்' கொண்டு வரப்படவேண்டும்'' என்று அறிக்கை விட்டார். ராஜஸ்தானிலிருந்து ஜெயித்து வந்திருக்கும் ராஜேஷ் பைலட்டும் காங்கிரஸ் நாடாளுமன்றத் தலைவர் பதவிக்குத் தாம் போட்டியிடப் போவதாக அறிக்கை வெளியிட்டார்.

இவையெல்லாம், குறைந்த இடங்களில் வென்றதற்காக, ராவும் கேசரியும் தலைவர் பதவிகளிலிருந்து தூக்கியெறியப்பட்டது போல், இப்போது சோனியாவும் தூக்கியெறியப்பட வேண்டும் என்கிற எண்ணத்தின் வெளிப்பாடுகள்தான்.

இந்த நிலையில் சோனியா, பிரியங்கா, ராகுல் ஆகிய நேரு குலக்கொழுந்துகளின் அரசியல் எதிர்காலம் என்னவாகும் என்பதுதான் பெரிய கேள்விக்குறியாகப் பேசப்படுகிறது.

இதை சோனியா முன்பே உணர்ந்ததால்தான் கட்சி தோல்வியைத் தழுவிக் கொண்டிருந்த வியாழன் மாலை, தமது வீட்டின் சமையலறை அமைச்சகக் கூட்டத்தை அவசரமாகக் கூட்டி விவாதித்தார். அதில் அர்ஜுன் சிங், பிரணாப் குமார் முகர்ஜி, குலாம் நபி ஆசாத் ஆகியோருடன் பிரியங்கா, ராகுலும் முக்கிய இடம் பெற்றிருந்தனர்.

அக் கூட்டத்தில் தமது தலைமைக்கு யார் யாரெல்லாம் எதிர்ப்புத் தெரிவிப்பார்கள் என்பதை அலசினார் சோனியா. அப்போது கமல்நாத் வெளியிட்ட 'காமராஜ் திட்டம்' பற்றியும் அலசப்பட்டது. காமராஜ் திட்டம் என்பது கட்சி ஆலோசனைகள் போன்ற முக்கியமான விஷயங்களுக்கு மட்டும் 'பெரிசு'களை வைத்துக் கொண்டு இளைய தலைமுறையைக் கட்சியில் வளர்ப்பது. இந்தத் திட்டம்தான் இந்திரா காந்தியை கட்சியில் ஓர் உயர்ந்த நிலைக்குக் கொண்டு வந்தது.

இதைப் பிடித்துக் கொண்ட சோனியாவின் ஜால்ராக்கள், விஜயபாஸ்கர் ரெட்டி, மீரா குமார்(ஜெகஜீவன் ராமின் மகள்), ஆர். கே. தவன், மோதிலால் வோரா, மன்மோகன் சிங் போன்ற வேர்களில்லாத, அதாவது மக்கள் செல்வாக்கில்லாத தலைவர்களை வீட்டுக்கனுப்புவது; அதன் மூலம் சோனியாவுக்கு எதிராகக் குரல் கொடுப்பவர்களுக்கு ஓர் எச்சரிக்கையும் கொடுப்பது என்கிற ரீதியில் பேசலாயினர். இப்படிச் செய்தால் நேரு குடும்ப வாரிசுகளுக்கு எதிரானவர்களை மௌனமாக்கி விடலாம் என்பது அனுமானம். இதன் மூலம், கட்சியின் படுதோல்விக்கு சோனியா காரணமல்ல; கட்சியிலுள்ள பிற தலைவர்கள்தான் என்கிற தோற்றத்தை ஏற்படுத்தி விடலாம் என்பதும் அவர்களது எண்ணம்.

ஆனால், இந்தத் திட்டத்தை அத்தனை சுலபமாக நிறைவேற்ற முடியுமா என்பதும் மிகப் பெரிய கேள்வியாகவே எழுந்துள்ளது. 77-ல் பெரும் தோல்வியைத் தழுவிய இந்திரா காந்தியை எதிர்த்தே கட்சிக்குள் பெரும் கலகம் உருவானது. அதையெல்லாம் சமாளித்த இந்திரா, மீண்டும் 80-ல் ஜெயித்துக் காட்டி, தாம் ஒரு வலுவான தலைவர் தாம் என்பதை நிரூபித்துக் காட்டினார். "இந்திராவின் ஆளுமையில் ஆயிரத்தில் ஒரு பங்கு கூடப் பெற்றிராத சோனியாவால், அவர்போல எதிர்ப்புகளை மீறி வருவது கடினம்!" என்றார் கட்சியின் காரியக் கமிட்டி உறுப்பினர் ஒருவர்.

89-ம் ஆண்டு ராஜீவ் தலைமையிலான காங்கிரஸும் தோல்வியைத் தழுவியது என்றாலும் இப்படியல்ல. ஆளுங்கட்சியாக வருமளவுக்குப் பெரும்பான்மை பெறாவிட்டாலும் தனிப்பெரும்பான்மை பெற்ற கட்சி என்கிற அந்தஸ்திலாவது இருந்தது. இப்போதோ அது பி.ஜே.பிக்குப் போய்விட்டது!

எனவே, "தோல்விக்கான காரணம் பற்றிய உள்விவாதம் நிச்சயம் நடக்கும். சோனியாவே அந்த விவாதத்துக்கு ஏற்பாடு



''கல்யாணப் பொண்ணோட அப்பா, காய்கறிக் கடை வெச்சிருக்கார்னு எப்படி கண்டுபிடிச்ச?''

''கல்யாணப் பத்திரிக்கையில 'சௌ.பவானி'னு போடறதுக்குப் பதிலா, 'சௌ சௌ பவானி'னு போட்டிருக்காரே!''

– மதுரை என். உஷாதேவி

செய்வார்!'' என்று நம்மிடம் சொன்னார் கட்சியின் பத்திரிகைத் தொடர்பாளர் கபில்சிபல். அந்த உள்விவாதத்தில் சோனியாவின் தலைமை நிச்சயமாகக் கேள்விக்குள்ளாக்கப்படும் என்றே பலரும் நம்மிடம் சொன்னார்கள்.

கட்சியின் நாடாளுமன்றத் தலைவர் பதவிக்குப் போட்டியேற்பட்டு, ஒருவேளை சோனியா தோற்கடிக்கப்பட்டால் அப்போது கட்சி மீண்டும் இரண்டாகப் பிளவு படும் என்றும் சொல்கிறார்கள். அப்படி பிளவு படுகிறபோது-நேரு குடும்பத்தைச் சேராத ஒருவர் நாடாளுமன்றத் தலைவராகிறபோது, அவரால் பிளவுபட்ட தமது கட்சியின் உள் குழப்பங்களைச் சமாளிக்க முடியுமா என்பதும் பெரிய கேள்விதான். ஏனெனில் நேரு குடும்ப வாரிசு இல்லாத கட்சியில் எல்லோருமே தங்களைத் தலைவர்களாகப் பாவித்துக் கொள்வதுதான் காங்கிரஸின் கலாசாரம்!

உள் விவாதங்கள் நடைபெற்றாலும் இது போன்றதொரு பிளவு நிலைமை ஏற்படாது என்றும் நம்மிடம் சிலர் சொன்னார்கள். ''அனைத்திந்திய அளவில் கட்சி தோற்றாலும், உத்தரபிரதேசத்தில் அதன் மீட்சி, கர்நாடகத்தில் வெற்றி, தவிர, இரு தொகுதிகளிலும் சோனியா வென்றது ஆகியவையெல்லாம் சோனியாவின் தலைமையை மக்கள் ஆதரிக்கிறார்கள் என்பதைத்தானே காட்டுகின்றன!'' என்றார் கபில்சிபல்.

இந்த எண்ணத்தையும் சோனியா எதிர்ப்பாளர்களால் முற்றிலுமாக விலக்கி வைக்க முடியவில்லை. அதனால்தான் ராஜேஷ் பைலட்டிடம் நாம் கேட்டபோது, "எங்கள் கட்சி அமைப்பின்படி கட்சியின் நாடாளுமன்றத் தலைவர், தேர்தல் மூலம் தான் தேர்ந்தெடுக்கப்படுவார். இப்படித்தானே நான் அறிக்கை விட்டேன்!'' என்று, தமது சோனியா எதிர்ப்பைத் தந்திரமாக அடக்கி வாசித்தார்.

இந்த நிலையில், சோனியாவிடம் இன்னொரு எண்ணமும் எழுந்திருப்பதாகத் தெரிகிறது. அமேதியில் தாம் ராஜினாமா செய்வதால் வரும் இடைத்தேர்தலில் பிரியங்காவைப் போட்டியிட வைப்பது. அவர் ஜெயித்து வரும்போது, கட்சியின் நாடாளுமன்றத் தலைவராக அவரையே நியமிப்பது என்பதுதான் அந்த எண்ணம்.

ஆனால், காங்கிரஸின் நாடாளுமன்றத் தலைவர் என்பவர் எதிர்க்கட்சித் தலைவர். அவர் கேபினட் அமைச்சர் அந்தஸ்து பெற்றவர். அப்படிப்பட்ட ஒரு பெரிய பொறுப்பை இப்போது பிரியங்காவிடம் ஒப்படைக்க முடியுமா? அது அத்தனை சுலபமல்ல. எனவே, பிரியங்கா அதற்குத் தயாராகும்வரை தாமே அதை வகிப்பது. அவர் தயாரானவுடன் அவரிடம் அதை ஒப்படைப்பது. பிரியங்காவுக்கு உறுதுணையாக ராகுலையும் வளர்ப்பது என்பதுதான் சோனியாவின் இப்போதைய திட்டம். தமது இந்த எதிர்பார்ப்புகளுக்கும் திட்டங்களுக்கும் ஏற்றபடி 2001-ன் நடுப்பகுதியிலோ அல்லது இறுதியிலோ நிச்சயம் பி.ஜே.பி. ஆட்சி கவிழ்ந்து இடைத் தேர்தல் வரும் என்றும் நம்புகிறார். இதற்காகவே, தமது லண்டன் வேலையை ராஜினாமா செய்து விட்டு வந்திருக்கிறார் ராகுல்.

ஆக, தேர்தலில் காங்கிரஸ் கட்சி தோற்றாலும், நேரு குடும்பம் எப்போதும் போல் கட்சிக்குள் ஜெயித்துக் கொண்டே தான் இருக்கும் என்பதுதான் யதார்த்தம்!

தில்லியிலிருந்து: **வெங்கட்**

## கிறிஸ்துவர் வடிவமைத்த லிங்கம்!



**படத்தில் உள்ளது, நவபாஷாணத்தால் உருவாக்கப்பட்ட லிங்கம். சென்னையை அடுத்த திருமழிசையில் 'சித்தர் தோட்டம்' என்ற இடத்தில் கோயில் கொள்ளப் போகும் இந்த லிங்கம், ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளால் பிரதிஷ்டை செய்யப்படவுள்ளது. இதனை வடிவமைத்தவர் பெயர் டாக்டர் பி.ஜே. 'தோட்டம்'. இவர் ஒரு கிறிஸ்துவர்!**

# மூன்றாவது

● சோனியாவின் இப்போதைய பிரச்னை பெல்லாரியை ராஜினாமா செய்வதா, அமேதியை ராஜினாமா செய்வதா என்பதுதான். அமேதியை ராஜிநாமா செய்தால் வரும் இடைத் தேர்தலில் பிரியங்காவை நிறுத்துவதா ராகுலை நிறுத்துவதா என்பது அதைவிட முக்கியப் பிரச்னையாக இருக்கிறது. இந்தத் தேர்தலிலேயே ராகுலை ரேபரேலியில் நிறுத்தியிருக்கலாம் என்பது பிரியங்காவின் எண்ணம். அமேதியை ராஜிநாமா செய்து, அதில் பிரியங்காவை நிறுத்தினால், ரேபரேலி தொகுதியில் ராகுல் போட்டியிட சதீஷ் ஷர்மாவும் விட்டுக் கொடுப்பார் என்று பேசப்படுகிறது.

● பி.ஜே.பி. விருந்துகளில் அசைவ உணவு என்பது சுத்தமாகக் கிடையாது. காலங்காலமாகவே பத்திரிகையாளர் சந்திப்புகளில் கூட வேகவைத்த பருப்பு, ஓரிரு காய்கறிகள் என்று சுத்த சைவம்தான் பரிமாறப்படும். அதனால் பத்திரிகையாளர்கள் கூட்டமும் குறைவாகத்தான் இருக்கும். இதை மாற்ற நினைத்தார் வெங்கய்ய நாயுடு. அதற்காகவே முஸ்லிம் பாணி ஹைதராபாத் பிரியாணி, மீன், கோழி வகைகள் என்று ஹைதராபாதி விருந்து ஸ்பெஷலாக வரவழைத்துப் பரிமாறி அசத்தினார். இதைக் கண்ட அத்வானியும் தமது மதிய உணவுப் பத்திரிகையாளர் சந்திப்பில் கோழிக்கறியை அறிமுகப்படுத்தினார். 'இது சரியா? இதற்காக வழக்குப் போட வாய்ப்பிருக்கிறதா?' என்று கோழிக் கறியைச் சுவைத்துக் கொண்டே கேட்டார் ஒரு பத்திரிகையாளர். காரணம்,

> "முரசொலி மாறனுக்கு நிதியமைச்சர் பதவி வேண்டுமென்று தி.மு.க. தலைமை வாஜ்பாயிடம் கோரியிருக்கிறது. அப்போதுதான் ஜெ. கோஷ்டி வழக்குகளைத் தொய்வில்லாமல் நடத்த முடியும் என்பது தி.மு.க.வின் எண்ணமாம்."

அன்று அக்டோபர் 2 – காந்தி ஜெயந்தி!

● உடல்நலம் குன்றி லண்டனில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்த வி.பி. சிங், தேர்தல் முடிவுகளைக் கேட்டதும் உடனடியாகத் தில்லி திரும்பியிருப்பது பரபரப்பாகப் பேசப்படுகிறது. காரணம், மூன்றாவது அணிக்குச் சாத்தியமாகத்தான் தேர்தல் முடிவுகள் அமைந்திருக்கின்றன என்று அவர் அதற்கான முயற்சிகளில் இறங்கியிருப்பதுதான். சாத்தியம்தானா என்றால், கருணாநிதி, சந்திரபாபு நாயுடு மற்றும் பலர் இப்போது வாஜ்பாய் பக்கம் இருந்தாலும் அவர்கள் வி.பி. சிங்கின் நண்பர்கள்தானே



• அத்வானி

என்கிறார்கள்! இதோடு இந்த 24 கட்சிக் கூட்டணியில் உள்ளவர்களுக்கு அமைச்சர் பதவிகளைப் பிரித்துக் கொடுப்பதில் வாஜ்பாய் காட்டும் சாமர்த்தியத்தைப் பொறுத்துத்தான் அவரது அரசின் ஸ்திரத் தன்மை இருக்கிறது என்றும் சொல்கிறார்கள்.

● லாலு ஏன் தோற்றுப் போனார்? பீஹார் அரசியல்வாதி ஒருவர் சொன்னார் : "போடப்பட்ட வோட்டுகளின் எண்ணிக்கை அடிப்படையில், 'எனது வெற்றிக்கு இதுவே போதும்! இனியும் போட வேண்டாம். நிறுத்திக் கொள்ளுங்கள்!' என்று தமது அடியாட்களுக்குத் தவறாக உத்தரவிட்டு விட்டார். அதனால்தான் தோற்று விட்டார்!" இது ஒருபுறமிருக்க, தமது தலைமையில் இல்லாத தமது கட்சி எம்.பிக்கள் ஏழு பேரும்

பி.ஜே.பிக்குத் தாவ வாய்ப் பிருக்கிறதே என்கிற கவ லையிலும்


• லாலு

இருக்கிறாராம் லாலு.

● முரசொலி மாறனுக்கு நிதியமைச்சர் பதவி வேண்டுமென்று தி.மு.க. தலைமை வாஜ்பாயிடம் கோரியிருக்கிறது. சிதம்பரத்துக்குப் பிறகு, தமிழ்நாட்டிலிருந்து ஒரு நிதியமைச்சர் என்பது மட்டுமல்ல; அப்போதுதான் ஜெ. கோஷ்டி வழக்குகளைத் தொய்வில்லாமல் நடத்த முடியும் என்பது தி.மு.க.வின் எண்ணமாம். சௌதாலா 'டீசல் விலையைக் குறை!' என்கிறார். இதற்கு அர்த்தம், டீசல் விலையைக் குறைக்க வேண்டும் என்பதல்ல. தமது கட்சிக்கு முக்கிய பொறுப்புகளைக் கொண்ட இலாகாக்களை ஒதுக்க வேண்டும் என்பதாம்!

● பி.ஜே.பியிலிருந்து வெளியேற்றப்பட்டால், முலாயம் சிங்குடன் சேர்ந்து உ.பியில் ஒரு மாநிலக் கட்சியை ஆரம்பிப்பார் கல்யாண் சிங் என்கிறார்கள்.

● தேர்தல் முடிவுகள் வெளியாகிக் கொண்டிருந்தபோது, சோனியாவின் தரிசனத்துக்காக அவரது வீட்டின் முன்னால் தவங்கிடந்தனர் தொண்டர்கள். 'தயவுசெய்து திரும்பிச் செல்லுங்கள்!' என்று கேட்டுக் கொள்ளப்பட்டனர். காரணம், குறிப்பிட்ட சிலருடனும் மகள், மகனுடனும் சேர்ந்து தேர்தல் முடிவுகளைக் கேட்டுக் குமைந்து கொண்டிருந்தார் சோனியா என்பதுதான்.

● உ.பி. கொடுத்த அதிர்ச்சி காரணமாக, வாஜ் பாய், அத்வானி வீடுகளிலும் அவ்வளவாக உற்சாகம் காணப்படவில்லை. அதே போல் ஆர்.எஸ்.எஸ். அலுவலகத்திலும் அத்தனை உற்சாகம் இல்லை. அதன் காரணமாகவே, அங்கு செல்லவிருந்த வாஜ்பாய் தமது விசிட்டை கேன்சல் செய்து விட்டார். சம்பந்தப்பட்ட பரிவாரங்களின் தலைவர்களைத் தமது இல்லத்துக்கு வரவழைத்து ஆலோசனை செய்தார்!

# அணிக்கு முயலும் வி.பி. சிங்!


• வி.பி. சிங்

● டெல்லியிலுள்ள பல்வேறு அரசியல்வாதிகளுக்கும் ஆலோசனைகள் சொல்ல, பல்வேறு வகையான பத்திரிகையாளர்கள் இருக்கிறார்கள். அவர்கள் அவரவர் சித்தாந்தங்களுக்கு ஏற்ப, மண்டல் ஜர்னலிஸ்ட், கமண்டல் ஜர்னலிஸ்ட், சோஷியல் ஜஸ்டிஸ் ஜர்னலிஸ்ட், தலித் சித்தாந்த ஜர்னலிஸ்ட், செக்யுலர் ஜர்னலிஸ்ட், நிக்கர் வாலா ஜர்னலிஸ்ட் என்று அழைக்கப்படுகிறார்கள்.

— இந்த்ரப்ரஸ்தன்

# "வெட்கப்பட்டுக் கொண்டு

"சட்ட விரோதமாகக் கோவில் சொத்துக்களை ஆக்கிரமித்துள்ளோர் பற்றிய பட்டியலையும் குத்தகை பாக்கி வைத்துள்ளோர் பட்டியலையும்கூட ஒவ்வொரு கோவிலிலும் எழுதி வைக்க இருக்கிறோம்."

திருவல்லிக்கேணி பார்த்தசாரதி பெருமாள் கோவிலில் அர்ச்சனை சீட்டுகள் கொடுக்கும் கவுண்டருக்கு முன்னர், வருவோர் போவோர் பார்வையில் நன்றாகப்படும் விதமாக ஓர் அறிவிப்புப் பலகையை வைத்திருக்கிறார்கள். கோவிலுக்குச் சொந்தமான வீடுகள், கடைகள் ஆகியவற்றில் வாடகைக்கு இருப்பவர்களில் பதினெட்டுப் பேர் சுமார் மூன்று லட்ச ரூபாய் பாக்கி வைத்துள்ளதைப் பட்டியலாக அந்தப் பலகையில் எழுதி வைத்திருக்கிறார்கள்.



• படம்: யோகா

ஆச்சர்யம் நம்மைப் பிடித்துக் கொள்ள நிர்வாக அதிகாரியான ஏ. குப்புசாமியைச் சந்தித்து அதன் பின்னணியைக் கேட்டோம்.

"நாங்களும் எவ்வளவோ முறை நோட்டீஸ் அனுப்பிப் பார்த்து விட்டோம். பாக்கி வசூலாகவில்லை. தமிழ்நாடு முழுவதும் இது போன்ற வாடகை பாக்கி கோடிக் கணக்கில் வசூலாகாமல் இருந்தது. இதனால், 'பாக்கி வைத்துள்ளோர் பட்டியலை பகிரங்கமாக கோவிலில் அறிவிப்புப் பலகையாக வைத்தாலென்ன' என்ற ஒரு யோசனை அறநிலையத் துறை அமைச்சருக்குத் தோன்றியது. அப்படி எழுதி வைத்தாலாவது சம்பந்தப்பட்டவர்கள் வெட்கப்பட்டுக் கொண்டு, தங்களது தன்மானத்தைக் காப்பாற்றிக் கொள்ள கோயில் பாக்கியை உடனே கட்டி விட மாட்டார்களா என்பதுதான் அவரது நோக்கம்.

"அவரது ஐடியா ஒர்க் அவுட் ஆகிவிட்டது என்று சொல்லலாம். எங்கள் கோயிலில் உள்ள அறிவிப்புப் பலகையில் சில நாட்களுக்கு முன்னர் பாக்கி வைத்துள்ளோர் பட்டியலில் 25 பெயர்கள் இருந்தன. இப்போது 18 பெயர்கள்தான் உள்ளன. ஏழு பேர் தங்கள் பாக்கியைக் கட்டி விட்டார்கள். மீதம் உள்ளோரும் விரைவில் கட்டி விடுவார்கள்" என்ற நம்பிக்கையுடன் கூறினார் நிர்வாகி அதிகாரி.

பாக்கி வைத்துள்ளவர்கள் இந்த அதிரடி ஐடியா பற்றி என்ன நினைக்கிறார்கள் என்று தெரிந்து கொள்ள பட்டியலில் உள்ள ஒருவரைச் சந்தித்தோம். 'பெயரைப் போட வேண்டாம்' என்ற கண்டிஷனுடன் பேசினார் அவர். "இது போன்று என் பெயரை எழுதி வைத்துள்ளதை நினைத்தால் கொஞ்சம் அவமானமாகத்தான் இருக்கிறது. ஆனால் நான் பாக்கி வைத்துள்ளது சுமார் ஐயாயிரம் ரூபாய்தான். ஆனால் அரசியல்வாதிகளும், தொழிலதிபர்களும் வங்கிகளிலும், நிதி நிறுவனங்களிலும் கோடிக்கணக்கில் பாக்கி வைத்திருக்கிறார்களே! அவர்களைப் பார்த்து அரசாங்கம் பயந்து ஒதுங்கிக் கொள்கிறதே! அவர்களை ஒப்பிடும்போது எங்களது பாக்கித் தொகைகள் ஒன்றுமேயில்லை!" என்ற அவர், "கூடிய விரைவில் நான் கட்டி விடுவேன்!" என்று முடித்துக்கொண்டார்.

தமிழகம் முழுவதும் இந்த ஐடியா எப்படி பயனடைந்துள்ளது என்பதை அறிய அறநிலையத்துறை அமைச்சர் தமிழ்க்குடிமகனிடம் கேட்டோம். உற்சாகமாகப் பேசினார் அமைச்சர்.

"இது போன்று பாக்கிப் பட்டியல்களை பகிரங்கமாக

# பாக்கியைச் செலுத்துகிறார்கள்!''

• அறிவிப்புப் பலகை
(படம்: சௌந்தர்ராஜன்)

வைத்ததற்கு நல்ல பலன் இருக்கிறது. பாக்கி வைத்துள்ள பலரும் அவமானம் தாங்காமல் பாக்கியைக் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். இதன் வெற்றியைத் தொடர்ந்து சட்ட விரோதமாகக் கோவில் சொத்துக்களை ஆக்கிரமித்துள்ளோர் பற்றிய பட்டியலையும் குத்தகை பாக்கி வைத்துள்ளோர் பட்டியலையும்கூட ஒவ்வொரு கோவிலிலும் எழுதி வைக்க இருக்கிறோம்.

"இந்த வகையில் கிட்டத்தட்ட 90 கோடி ரூபாய் கோவில்களுக்கு பாக்கியாக நிற்கிறது. சட்ட விரோதமாக ஆக்கிரமித்துள்ளோரை அதிரடியாக வெளியேற்ற சட்டத் திருத்தங்கள் செய் இருக்கிறோம். நிலவரியை வசூலிக்கும் அதிகாரம் மாவட்ட ஆட்சித் தலைவருக்கு உள்ளதைப் போல, கோயில் குத்தகை பாக்கியை வசூலிக்கும் அதிகாரமும் அறநிலையத் துறை அதிகாரிகளுக்கு வழங்கப்பட்டிருக்கிறது. வருவாய் நீதிமன்றம் மூலமாக, வழக்குகள் போடப்பட்டு நிலுவை வசூல் விரைவாகச் செய்யப்படும். இது போன்ற நடவடிக்கைகளின் மூலம் கோடிக்கணக்கான ரூபாய்கள் வசூல் செய்யப்படும் என்று உறுதியாக நம்புகிறேன். விளைச்சல் நன்றாக இருக்கும்போதும் குத்தகைப் பணத்தைச் செலுத்தாமல் இருப்பதுதான் வேதனை!''

"அரசியல்வாதிகள் மற்றும் தொழிலதிபர்கள் கோடிக் கணக்கில் வங்கிகளில் கடன் வாங்கி, பாக்கி வைத்திருக்கிறார்கள். அப்படியிருக்க சொற்ப பாக்கி வைத்திருக்கும் எங்களைப் போன்றோரை அவமானப்படுத்துவது சரியா என்று பாக்கி வைத்துள்ளவர்கள் கேட்கிறார்களே?''

"இது போன்ற மோசமான உதாரணத்தைக் காட்டுவது மகா தவறு. 'முதலில் உன் மேலுள்ள கறையை நீ போக்கிக் கொள். அப்புறம் மற்றதைப் பற்றிப் பேசலாம்' என்பதுதான் இதுபோன்ற வாதங்களுக்கு பதிலாக இருக்க முடியும்!''

"இந்த ஐடியா உதித்த பின்னணியைச் சொல்லுங்களேன்!''

"'எந்தப் பணியைச் செய்தாலும் செவ்வனே செய்ய வேண்டும்' என்ற எண்ணத்தின் வெளிப்பாடுதான் இது போன்ற உத்தி. வேறொன்றும் பெரிதாகச் சொல்வதற்கு இல்லை.''

"ஆலயங்களில் நடைபெற்றுள்ள வேறு பணிகளைப் பற்றிச் சொல்லுங்களேன்?''

''கலைஞர் தலைமையிலுள்ள இந்த ஆட்சிக் காலம் அறநிலையத் துறையின் பொற்காலம் என்று கூறலாம். ஒவ்வொரு கோவிலுக்கும் எவ்வளவு சொத்து உள்ளது என்பதைத் தெரிவிக்கும் சொத்துப் பதிவேடு பல கோவில்களுக்குக் கிடையாது. இந்த ஆட்சியில்தான் 2974 கோவில்களுக்கு சொத்துப் பதிவேடு தயார் செய்து, அவற்றை வருமானத்திற்கேற்றபடி பிரித்துப் பட்டியல் போட்டிருக்கிறோம். 70 ஆண்டுகளாக இது போன்ற பணி மேற்கொள்ளப்படவில்லை. பன்னிரண்டு ஆண்டுகள் ஆகி விட்ட கோவில்களில் உடனடியாகக் கும்பாபிஷேகம் நடத்த உத்தரவிட்டுள்ளோம். கோயில் தேர்களுக்குப் பாதுகாப்பாக தகரக் கொட்டகைகள் போடப்பட்டுள்ளது. நிறைய கோவில் குளங்கள் சீரமைக்கப்பட்டிருக்கின்றன. கோயில் பாதுகாப்புப் பணியில் முன்னாள் ராணுவத்தினர் ஈடுபடுத்தப் பட்டிருக்கிறார்கள். கோயில் ஊழியர்களுக்கு ஊதிய உயர்வு அளிக்கப்பட்டுள்ளது. அறநிலையத்துறை செய்துள்ள பணிகளை இப்படிச் சொல்லிக் கொண்டே போகலாம்'' என்றார் அமைச்சர்.

சந்திப்பு: ப்ரியன்

சென்னையைச் சுற்றியுள்ள புறநகர்ப் பகுதிகளைச் சேர்ந்த நகராட்சிகள், ஊராட்சிகள் ஆகியவற்றில் பாதாளச் சாக்கடை வசதி கிடையாது. அதனால் வீடுகளிலும் அடுக்கு மாடிக் குடியிருப்புகளிலும் உள்ள 'செப்டிக் டாங்க்' கழிவுநீரை அவ்வப்போது லாரிகளைக் கொண்டு சுத்தப்படுத்துகிறார்கள்.




எங்கே கொண்டு போய்க் கொட்டுவது? கழிவுநீர் சுத்திகரிப்பு நிலையங்களுக்குத்தான் எடுத்துச் செல்ல வேண்டும். ஆனால் யாரும் அப்படிச் செய்வதேயில்லை.





# இந்த அசிங்கத்தைக் கேட்பாரில்லையா?

இதற்கென நகராட்சிகளில் கழிவுநீர் லாரிகள் உண்டு. என்றாலும் அவை பெரும்பாலும் இயங்காது. எனவே அனைவரும் தனியார் லாரிகளைக் கொண்டுதான் ஆயிரம் இரண்டாயிரம் என்று செலவு செய்து சுத்தப்படுத்துகிறார்கள்.

இப்படி லாரிகளில் எடுத்துச் செல்லப்படும் கழிவுநீரை



அங்கங்கே மனம் போன படி கழிவுநீரைத் திறந்து விட்டு விடுகிறார்கள்.

சக்காடுதாங்கலில் உள்ள அடையாறில் தினசரி ஐந்தாறு லாரிகளாவது வந்து கழிவு நீரைக் கொட்டி விட்டுச் செல்கின்றன. அதற்கு அருகிலேயே சலவைத் தொழிலாளர்கள் துணிகளையும் துவைக்கிறார்கள்!

இதே போல் கோட்டூர்புரத்திலுள்ள அடையாறு பாலத்







தின் மேல் லாரிகளை நிறுத்திக் கொண்டு, ஆற்றில் திறந்து விடுகிறார்கள்.

இது ஒருபுறமென்றால், சில சமயங்களில் மெயின் ரோடுகளின் ஓரங்களிலேயே திறந்து விட்டு விடுகிறார்கள். இப்படிச் சென்னையிலும் அதைச் சுற்றியுள்ள பல்வேறு இடங்களிலும் லாரிகள் செய்யும் அகத்தத்தைத்தான் இங்கே படம்பிடித்துப் பிரசுரித்திருக்கிறோம்.

நகராட்சிகளுக்கும் பேரூராட்சிகளுக்கும் மக்களின் சுகாதாரத்தில் சிறிதளவும் அக்கறை இல்லை என்பதற்கு இதுவே சாட்சி.

அரசு ஏதாவது செய்யுமா?

— இளங்கோவன்

# மறுபிறவி –

## எழுத்தாளர் பிரபஞ்சன்

**1990**-ம் ஆண்டு கிறிஸ்துவின் பிறப்பை ஒட்டிய ஒருநாள்... யேசு கிறிஸ்து வின் வருகையை புதுச்சேரி கிறிஸ்தவர்கள் வழக்கமான உற்சாகத்தோடு கொண்டாடிக் கொண்டிருந்தார்கள். கிறிஸ்தவ நண்பர்களிடம் இருந்து கேக்குகளும் மற்றும் இனிப்பு கார பட்சணங்களும், கொண்டாட்டங்களின் ஒரு பகுதியாக எனக்கும் வந்து சேர்ந்திருந்தது. பட்சணங்கள் பாதி தின்னப்பட்டு மீதி இன்னும் இருந்தன.

> **“குளித்துவிட்டு வந்தது போல உடம்பில் வியர்வை பெருகியது. ஒரு கட்டத்தில், என்னால் எதுவும் ஆகாது என்று தெளிந்து, அப்படியே கிடந்தேன்.”**

இந்தச் சூழலில்தான் இரவு உறக்கத்திற்குப் பிறகு காலையில் எனக்கு அந்த விபரீதம் ஏற்பட்டது. மாடியில் எழுது வதற்கும், உறங்குவதற்கும் எனக்கென்று ஓர் அறை இருந்தது. அந்த அறையில்தான் வழக்கம் போல இரவு இரண்டு இரண்டரை வரை நான் எழுதுவதும் படிப்பதுமாக இருப்பேன்.

அன்றும் வழக்கம் போல் இரண்டரை வரை எழுதி முடித்துவிட்டுப் படுத்தேன். அதிகாலையில் ஐந்தரை ஆறு மணி சுமாருக்கு எனக்கு விழிப்புத் தட்டியது. இரவு எத்தனை தாமதமாகப் படுத்தாலும், ஆறு மணிக்கு மேல் நான் உறங்கியதே இல்லை. விழிப்புத் தட்டியதும் புரண்டு படுக்க நான் முயற்சி செய்தேன். வலது கைப் பக்கம் மிகப் பெரிய பாறாங் கல் ஒன்று என் மேல் கிடத்தப்பட்டது போல் உணர்ந்தேன். தோள் பட்டையிலிருந்து கால் வரை முற்றாக என் உடம்பின் வலது புறம் செயலற்றுப் போய் விட்டிருந்தது. ஒருகணம், பெரிய அதிர்ச்சியில் நான் உறைந்து போனேன. குரலெடுத்து யாரையும் கூப்பிடக் கூட முடியாது. குடும்பத்தினர் அனைவரும் கீழ்ப் பகுதியில் இருந்தார்கள். மாடியிலிருந்து எவ்வளவு உறக்கக் கூப்பிட்டாலும் யாருக்கும் கேட்கப் போவதில்லை. விஷயம் என்ன வென்றால், என் தொண்டையிலிருந்து வார்த்தைகளே எழவில்லை. தொண்டை நிறைய நீரை ஊற்றிக் கொண்டு, வாய் கொப்பளிப்பது போல சப்தம் எழுந்ததே அன்றி சொற்கள் திரளவில்லை. எனக்கு எப்போதோ படித்த காஃப்காவின் 'மெட்ட மார்பொசிஸ்' என்ற சிறுகதை நினைவுக்கு வந்தது. அந்தக் கதையின் கதாநாயகன் ஓர் அதிகாலையில் தூங்கி எழுந்ததும், ஒரு பூச்சியாக மாறிப் போவான். அவன் கை, கால், உடம்பெல்லாம் பூச்சியின் உருவத்தைக் கொண்டு விடும். அந்தக் கதாநாயகன் பூச்சியாக மாறுவதற்கு நியாயமான காரணங்கள் இருந்தன.

# கதை உடைத்து என்னை மீட்டார்கள்!

நான் பூச்சியாக மாறவில்லை. என் உடம்பின் பாதி மட்டுமே மரத்துப் போயிருந்தது. புரண்டு படுக்க அல்லது எழுந்திருக்க நான் பட்ட பாடு கொஞ்ச நஞ்சமல்ல. ஆத்ம தைரியம் அனைத்தையும் ஒன்றுசேர்த்து, தலையைக் கொஞ்சம்

கொஞ்சமாக நகர்த்தி, தலையணையின் விளிம்புக்குக் கொண்டு வந்தேன். என் திட்டம், அங்கிருந்து தரையில் கீழே விழு வதுதான்.

அப்போதுதான் புதுச்சேரியின் வர லாற்றை மையமாகக் கொண்டு, 'மானுடம் வெல்லும்' நாவலை எழுதி முடித்திருந்தேன். அதன் அடுத்த பகுதியான 'வானம் வசப்படும்' நாவலை எழுதத் துவங்கியிருந்தேன். அந்த நாவல் எழுதப்படாமலேயே போய் விடுமோ என்ற துக்கம் நெஞ்சை அடைத்தது.



மரணம் ஓர் அச்சம் தரும் நினைவாக எனக்கு எப்போதுமே இருந்ததில்லை. நீண்ட நாள் வாழ்வது என்பதற்கு மனம் கண்ட அர்த்தம் வேறு. எல்லோரையும் போல முதல் நாற்பதாண்டுகள் எப்படி வாழக் கூடாது என்று வாழ்ந்து தெரிந்து கொண்டேன். மீதியுள்ள வாழ்நாளை சரி யாக வாழ்ந்து, செய்த தவறுகளுக்கு பிரா யச்சித்தம் காண வேண்டும். ஆகவே, ஒரு மனிதனுக்கு நூறாண்டு ஆயுள் தேவை என்பது என் கருத்து.

இப்படியாக எல்லாம் நான் சிந்தித்து, என் உயிரை ஒன்று திரட்டி, மரத்துப் போன வலது பக்கத்திற்கு அசைவு கொடுக்க முயற்சி செய்தேன். குளித்து விட்டு வந்தது போல உடம்பில் வியர்வை பெருகியது. ஒரு கட்டத்தில், என்னால் எதுவும் ஆகாது என்று தெளிந்து, அப் படியே கிடந்தேன். பல்லா யிரம் பக்கங்கள் எழுதிய என் வலது கை விரல் கள் அசைவற்று, செத் துக் கிடப்பதைப் பார்த்தேன்.

ஆறு மணிக் கெல்லாம் இறங் கிக் கீழே வருகிற நான், ஏழரை ஆகியும் இன்னும் வராதது கண்டு, என் மனைவியும் குழந்தையும் மேலே வந்து கத வைத் தட்டினார் கள். என் துரதிர்ஷ் டம் கதவை உள் பக் கம் தாழிட்டிருந் தேன். நிலைமையைச் சொல்லவும் என்னால் முடியவில்லை.

அடுத்த ஒரு மணி நேரத் தில் தெருவே கூடி, கதவை உடைத்து என்னை மீட்டார்கள்.

ஓர் ஆறு மாத காலம் போராடி என் மனவலிமையும், மருந்தின் வலிமையுமாகச் சேர்ந்து எனக்கு உயிர் மீண்டது. அப்புறம் தான் என் விரல்கள் குவிந்து என்னால் எழுத முடிந்தது.

நான் மிகவும் நேசித்த ஒரு நட்பு என் னைப் புரிந்து கொள்ளாமல் விலகிச் சென் றதும், என்னைச் சுற்றியிருந்த பலரின் அற்பத்தனங்களும் சேர்ந்து மனத்தளவில் எனக்கு ஏற்படுத்திய வடுவே இந்த நோயாக எனக்கு வெளிப்பட்டிருக்க வேண்டும்.

1991-க்குள் நான் பூரண குணம் எய்தி னேன்.

சந்திப்பு : **கே. பாலசுப்ரமணியன்**

படம் : **ரவிசங்கரன்**





• ரம்யா

# 'கலர்ஃபுல்' குஷிஸ்!

"உடைகள் - அதுவும் 'மேட்சிங்' ஆனவை" என்றார் வசுதா. "வானவில்தான்" என்றார் ஷீப்ரீடா. "தகதகக்கும் சூரியன்" என்று ரம்யாவும், 'பரந்த புல்வெளி' என்று ஜஸீலாவும் கூறினர். "வண்ணங்கள் என்றவுடன் உங்களுக்கு எது நினைவுக்கு வருகிறது?" என்ற நம் கேள்விக்குத்தான் மேற்படி விடைகள் கிடைத்தன. அந்த ஸ்டெல்லா மேரி கல்லூரி மாணவிகளிடமிருந்து.

"இந்த உலகத்தில் நல்லவர்களைப் பார்ப்பதே அரிய விஷயமாயிடுச்சு சார். அதனாலே வெள்ளை உள்ளம் கொண்டவங்கன்னா கொள்ளை சந்தோஷம்"



• ஷீப்ரீடா

"எனக்குப் பிடித்த வண்ணம் மஞ்சள்தான். மங்களகரமானதுன்றதாலே மட்டுமில்லே,



ஓவியத்தில் வேறு பல நிறங்களோடும் அது அழகா ஒத்துப் போகும்" - இது ரம்யாவின் கருத்து. 'யேய், நீ பி.ஜே.பி.யா?' என்ற கிண்டலைப் பற்றிக் கவலைப் படாமல் தனக்குப் பிடித்தது காவி நிறமே என்றார் வசுதா. தேசப் பற்றும் ஒரு காரணமாம் - கொடியின் மேல் வண்ணமாச்சே.

"மனசுக்கு ஒருவித ஜில் உணர்வைக் கொடுப்பது பச்சைதான். அது மட்டுமில்லே ஒரு பட்ட மரம் துளிர்ப்பது என்பது மனத்தில் எவ்வளவு நம்பிக்கையைக் கொடுக்கும் விஷயம்" என்று ஃப்ரீடா சிலிர்த்தார்.

"இந்த உலகத்தில் நல்லவர்களைப் பார்ப்பதே அரிய விஷயமாயிடுச்சு சார் (த்லொத்லொ - மற்ற மூவர்). அதனாலே வெள்ளை உள்ளம் கொண்டவங்கன்னா கொள்ளை சந்தோஷம். தவிர சமாதானத்துக்கும் வெள்ளைதானே" - இது ஜஸீலா.

கலர் - சென்ஸ் அதிகம் கொண்ட தமிழ்ப் பட இயக்குனர் யார்? வாக்கெடுப்பு 'டை'யில் முடிந்தது. ஃப்ரீடாவும் ஜஸீலாவும் ஷங்கருக்கு ஆதரவு தெரிவிக்க, ரம்யாவும் வசுதாவும் மணிரத்னத்தைத் தேர்ந்தெடுத்தனர்.



• ஜஸீலா

அருகே உள்ள கூப்பனில் கேள்விகளும் நீங்கள் 'டிக்' செய்து தேர்ந்தெடுக்க வேண்டிய பதில்கள் அடங்கிய தொகுப்பும் உள்ளன. அத்தனை கேள்விகளுக்கும் சரியான விடையை 'டிக்' செய்பவருக்கு ரூ. 200 பரிசு. பலர் செய்து விட்டால் குலுக்கல். ஜெராக்ஸ் கூப்பன் செல்லாது என்பதும் ஆசிரியர் தீர்ப்பே இறுதி என்பதும் தெரிந்த விஷயம் தானே?

கடைசி தேதி : 25.10.99

தொகுப்பு: ஜி.எஸ்.எஸ்.
படங்கள்: ஸ்ரீஹரி

## குவிஸ் கூப்பன் - 11

1. மிக அதிக எடை கொண்ட மிருகம் எது?

☐ நீலச் சுறா ☐ கோலா கரடி
☐ நீல திமிங்கிலம்

2. மஞ்சள் ஆறு என அழைக்கப்படும் ஹுவாங்ஹோ எந்த நாட்டில் பாய்கிறது?

☐ சீனா ☐ ஜப்பான் ☐ எகிப்து

3. தமிழில் பின்பகுதி மட்டும் வண்ணத்தில் வெளிவந்த முதல் திரைப்படம் எது?

☐ அலிபாபாவும் 40 திருடர்களும்
☐ கொஞ்சும் சலங்கை
☐ நாடோடி மன்னன்

4. தோலின் நிறத்திற்குக் காரணமான பிக்மெண்ட் எது?

☐ தைராய்டு ☐ ப்ளாஸ்மா ☐ மெலனின்

5. 'கறுப்பு முத்து' என்று அழைக்கப்படும் விளையாட்டு வீரர் யார்?

☐ பீலே ☐ பாகியோ ☐ மாரடோனா

6. எந்தப் படத்தின் கதாநாயகியின் திரைப்படப் பெயர் ரோஸ்?

☐ கோட்ஸில்லா ☐ டைடானிக்
☐ அனகோண்டா

7. 'பிங்க் நகரம்' என்றழைக்கப்படுவது எது?

☐ போபால் ☐ ஜெய்ப்பூர் ☐ சண்டிகர்

8. 'ப்ரௌன் ஷுகர்' என்பதென்ன?

☐ நீரிழிவு நோய்க்கான மருந்து
☐ கிளியோபாட்ராவின் மறுபெயர்
☐ போதைப் பொருள்

பெயர்: ....................................

முகவரி: ....................................

....................................

....................................

● வாஜ்பாய் தலைமையில் உருவாகி இருக்கும் தேசிய ஜனநாயகக் கூட்டணி அரசில் தி.மு.க.வில் இருந்து பங்கு வகிக்கப் போகிறவர்கள் யார் யார்? மாறன் மீண்டும் மத்திய காபினெட் அமைச்சர். அதில் எந்தவித சந்தேகமும் இல்லை. ஆனால் இலாகா? தொழில் இலாகாதான் அவருக்குப் பிடித்தது. எனவே 'தொழில் துறை அமைச்சர்தான்' என்கிறார்கள் உடன்பிறப்புக்கள். ஒரு கேபினெட் அமைச்சரும் இரண்டு துணை அமைச்சர் (State Minister) பதவிகளும் தி.மு.க.வுக்குக் கிடைக்கலாம். கொஞ்சம் அடித்துப் பிடித்து மற்றொரு கேபினெட் அமைச்சரையும் பெற தி.மு.க முயற்சி செய்யுமாம். அப்படி கிடைத்தால் அதற்கு முயற்சி செய்யலாம் என்பது டி.ஆர். பாலுவின் ஆசை. இதற்கிடையில் தமக்கு அணுக்கத் தொண்டர்களாக இருக்கும் மூவரில் ஒருவருக்காவது மத்திய அமைச்சரவையில் அமைச்சர் பதவி கொடுக்க வேண்டும் என்று ஸ்டாலின் 'அழுத்தம்' கொடுக்கிறாராம். ஆனால் திருச்செந்தூரில் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் கல்லூரிப் பேராசிரியரான ஜெயசீலனுக்கு அமைச்சர் பதவி கொடுப்பதால் சிறுபான்மை மக்களுக்கும் ஓர் ஆறுதலாக இருக்கும் என்று தி.மு.க தலைமை கருதுகிறதாம்.

# வாழப்பாடி தோற்றது ஏன்?

● வாழப்பாடியார் தாம் தோல்வியடைந்ததற்கு, பா.ம.க.வின் ஒத்துழைப்பு இல்லாததும் ஒரு காரணம் என்பதை நேரடியாகச் சொல்லாவிட்டாலும், அவரது தோழர்கள் பா.ம.க.வை கடுமையாக விமர்சிக்கிறார்கள். பிரசாரத் துவக்கத்தில் ராசிபுரம் தொகுதியை யார் எடுத்துக் கொள்வது என்ற பிரச்னையில் இரு தரப்பினரிடமும் ஏற்பட்ட மன வருத்தம் தேர்தல் முடிவில் பிரதிபலித்திருப்பதாகச் சொல்கிறார்கள். இது தவிர ராஜீவ் காங்கிரஸ் பிரமுகர்கள் முக்கியமாகக் குறிப்பிடுவது சேலத்தைச் சேர்ந்த தி.மு.க. அமைச்சரும், இளைஞரணியைச் சார்ந்த அவரது மகனும் இன்னமும் கொஞ்சம் ஒத்துழைப்புக் கொடுத்திருக்கலாம் என்பதுதான். குறிப்பாக மாவட்ட பஞ்சாயத்துத் தலைவராக உள்ள அவரது மகன் கிருஷ்ணகிரி தொகுதியில் தி.மு.க வெற்றி பெறுவதற்காகப் பாடுபடப் போய் விட்டாராம். ஆனாலும் தேசிய ஜனநாயக கூட்டணியில் வாழப்பாடியாரின் முக்கியத்துவத்தைக் குறைக்க முடியாதாம். தேர்தலில் வெற்றி பெறாவிட்டாலும், ஏதாவது ஒரு மாநிலத்தில் இருந்து ராஜ்யசபா உறுப்பினராக வாழப்பாடியாரைத் தேர்ந்தெடுக்க வாஜ்பாய் உதவி செய்வார் என்கிறார்கள்.

> **"பி.எச். பாண்டியன், மலைச்சாமி ஆகியோர் தகுதியுடையவர்கள் என்றாலும் சுயமாகச் சிந்தித்துச் செயல்படும் அவர்கள் மீது அம்மாவுக்கு முழு நம்பிக்கை இல்லையாம்."**

● தேர்தல் முடிவுகள் வெளி வந்து கொண்டிருந்தபோது பையனூர் பங்களாவில் இருந்தார் ஜெயலலிதா. முடிவுகள் உற்சாகமூட்டாததால் மிகவும் கோபத்துடன் இருந்தாராம். அ.தி.மு.க. பாராளு மன்றக் குழுவுக்கு யாரைத் தலைவராக்குவது என்று தீவிரமாக யோசிக்கப்பட்டு வருகிறதாம். பி.எச். பாண்டியன் (திருநெல்வேலி), மலைச்சாமி (ராமநாதபுரம்) ஆகியோர் தகுதியுடையவர்கள் என்றாலும் சுயமாகச் சிந்தித்துச் செயல்படும் அவர்கள் மீது அம்மாவுக்கு முழு நம்பிக்கை இல்லையாம். சீனிவாசன் (திண்டுக்கல்) செல்வகணபதி (சேலம்), சின்னச்சாமி (கரூர்) மூவரில் ஒருவருக்கு அந்த வாய்ப்பு கொடுக்கப்படலாம். தினகரனுக்கு டில்லியில் முக்கியமான பணிகள் காத்திருக்கின்றனவாம். குறிப்பாக அரசியல்வாதிகளை நம்பாமல் அதிகாரிகளை வளைத்துப் போட்டு அந்நியச் செலாவணி மற்றும் ஊழல் வழக்குகளுக்குச் சமாதி கட்டும் வேலையில் அவர் இறங்குவாராம். ஜெயா தொலைக்காட்சிக்குப் பிரச்னை வராமல் பார்த்துக் கொள்வதும் அவரது முக்கிய வேலையாக இருக்குமாம்!



— சஞ்சயன்

## காதில் விழுந்தவை



• சர்ச்சில் எரிந்த பகுதி...

# 'சர்ச்'சைக் கொளுத்தியது யார்?

**மேலகிருஷ்ணன் புதூரிலுள்ள சர்ச் எரிக்கப்பட்டதா இல்லையா என்பதிலேயே இரண்டு கருத்துக்கள் உள்ளன. உண்மை என்ன?**

குமரி மாவட்டத்திலுள்ளது மேல கிருஷ்ணன்புதூர். இங்கே சுமார் நூற்றைம்பது இந்துக் குடும்பங்களும் சுமார் இருபத்தைந்து கிறிஸ்துவக் குடும்பங்களும் வசித்து வருகின்றன. மதங்கள் வேறாக இருந்த போதிலும் அனைவரும் ஒரே ஜாதியினர். நெருங்கிய உறவினர்களும்கூட!

'பாலர்பள்ளி' என்றும் 'ஜெபவீடு' என்றும் அழைக்கப்படுகிற சர்ச் கட்டப்பட்டு இருபது வருடங்களுக்கும் மேலாகிறது. இந்த சர்ச் பக்கா கட்டடம் அல்ல; ஓலைக் கூரைதான். இதில்தான் கிறிஸ்துவர்களின் வழிபாடும் திருமணம் போன்ற நிகழ்ச்சிகளும் நடைபெற்று வருகின்றன.

சில இந்து– கிறிஸ்துவ இளைஞர்களுக்கு இடையே ஏற்பட்ட சிறிய கருத்து மோதல்தான் இப்போது ஒரு பிரச்னையாக உருவாகிவிட்டது. இதில் இந்துக்களான ஊர்த்தலைவர்கள் குளிர்காய்கிறார்கள் என்பதே நிதர்சனம்.

ஓலைக் கூரையினாலான சர்ச்சை கட்டடமாகக் கட்டுவதற்கு, நாகர்கோயிலில் வசிக்கும் ராஜேந்திரன் ராஜப்பா என்பவர் இனாமாக நிலம் கொடுத்தார். பழைய ஓலைக் கூரை சர்ச்சுக்குச் சுமார் நூறடி தள்ளி, புதிய கட்டடம் கட்டுவதற்கான வேலைகளைத் தொடங்கினார்கள்.

மண்டைக்காடு கலவரம் பற்றி விசாரித்த 'வேணு கோபால் கமிஷன்', குமரி மாவட்டத்துக்கு ஒரு சிபாரிசு செய்தது. புதிதாகக் கட்டப்படுகிற சர்ச்சோ அல்லது வேறு மதக் கோயில்களோ அருகருகே இருக்கக் கூடாது; சுமார் ஒரு கிலோ மீட்டர் தொலைவாவது தள்ளி இருக்க வேண்டும் என்று சிபாரிசு செய்தது கமிஷன். இது குமரி மாவட்டத்தில் அரசு ஆணையாகப் பிறப்பிக்கப்பட்டது.

இதைக் காரணம் காட்டி, மண்டைக்காடு கலவரத்துக்கு முன்பிருந்தே செயல்பட்டு வருகிற ஓலைக் கூரை சர்ச் புதுப்பிக்கப்படுவதைத் தடுத்து நிறுத்த எண்ணி, 'எங்கள் கோயிலுக்கும் இந்த சர்ச்சுக்கும் அரை கி.மீ. தூரம் கூட இல்லை' என்று ஊர்த் தலைவர்களில் ஒருவர் வழக்குத் தொடர்ந்தார். வழக்கு தோற்றுப் போனது.

பிறகு முனிசிபல் கோர்ட்டில் 'ஸ்டே' வாங்கினார்கள். பிறகு, மாவட்ட முதன்மை உரிமையியல் நீதி மன்றம், பஞ்சாயத்து யூனியன் அனுமதியோடு, மாவட்ட ஆட்சித் தலைவரின் அனுமதியையும் பெற்று, தற்போது இயங்கிவரும் ஓலைக் கூரை சர்ச்சை, அது இருக்கும் இடத்திலேயே புதுப்பித்துக் கொள்ளலாம் என்று தீர்ப்புச் சொன்னது. மாவட்ட ஆட்சியர் அனுமதி வழங்காதபட்சத்தில் அரசிடம் முறையிட்டு, ஒரு சுமுகமான தீர்வை எட்டலாம் என்றும் தீர்ப்பில் சொல்லப்பட்டிருந்தது.

இந்த நிலையில்தான் சில விஷமிகளால் ஓலைக் கூரை சர்ச் கொளுத்தப்பட்டிருக்கிறது! இந்த விஷமிகள் யார்? வெறும் யூகத்தின் பெயரால் யாரையும் சொல்ல விரும்பவில்லை அந்த மக்கள். விசாரணையில் தெரிய வரும் என்று நம்புகிறார்கள்.

— ஹெச்.ஓ. தட்சிணாமூர்த்தி



# எனக்குப் பிடித்த புத்தகம்

## அர்த்தமுள்ள வாழ்க்கை, அர்த்தமுள்ள வரலாறு!

-டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி

வாழ்க்கை வரலாறு என்பது படிப்போருக்கு உற்சாகம் கொடுப்பதாய் இருக்க வேண்டும்; எங்காவது நம் அனுபவத்துடன், வாழ்வில் நாம் கண்ட உண்மைகளுடன், நம்மை இணைத்துக் கொள்ளச் செய்வதாக இருக்கவேண்டும். நமக்குப் பாடம் கற்பிப்பதாக - வாழ்க்கையில் நாம் எடுத்துக் கொள்ள வேண்டிய பயிற்சிகளைத் தெளிவாக எடுத்துக் காட்டுவதாக இருக்க வேண்டும்.

அந்த ரீதியில் பார்க்கும்போது வானதி திருநாவுக்கரசு அவர்களின் வெற்றிப் படிகள் ஒரு 14 வயது சிறுவன் பர்மாவிலிருந்து கால் நடையாக காடுகளில் நடந்தான். முப்பது நாளில் கல்கத்தாவை அடைந்தான் என்பதிலிருந்து இன்று தமிழ்ப் புத்தகப் பிரசுர உலகின் முதல் மனிதனாக அவர் இருக்கிறார், எத்தகைய அறிஞர் பெருமக்களோடு பழகியிருக்கிறார். அவர்களிடம் தமக்குக் கிடைத்த அனுபவங்கள் என்ன என்பது வரை அழகாக, மனத்தை உருக்கும் வகையில், யதார்த்தத்துடன் படம் பிடித்துக் காட்டுகிறது.

நகரத்தார் இனத்தைச் சார்ந்த இளைஞர், அவர்கள் வழக்கமாக மேற்கொள்ளும் கொடுக்கல் வாங்கலில் ஈடுபட்டிருந்தால் எவ்வளவு எளிதாக பணக்காரனாக ஆகி இருக்கலாம் என்று எண்ணுகிறார். ஆனால் அதில் ஈடுபடவில்லை.

வகுப்பில் வாழ்வின் நீதிநெறிக் கதைகளைப் படிக்கத் துவங்கியதிலிருந்து படிக்கும் ஆர்வம் என்னைப் பிடித்துக் கொண்டது என்று எழுதுகிறார் - படிப்பினை.

கடனைத் திருப்பித் தருவோம் என்ற நிலையில் நாணயமான மனதுடன் கடன் வாங்குவது தவறில்லை - நாணயம்.

விடாமுயற்சியுடன் செயல்பட்டால் முன்னுக்கு வரலாம் - உழைப்பு

மற்றவர்கள் வைத்திருக்கிறார்களே என்று அவசியமில்லாதவற்றை வாங்குவது வீண் ஆடம்பரம் என்ற தெளிவு - எளிமை என்னும் உயர் உண்மை.

பிரச்சினைகளைக் கண்டு பதுங்குவது, முடியுமோ என்று சந்தேகப்படுவது, இவைதாம் வாழ்க்கையில் வெற்றிக்கேற்படும் தடைகள் - வெற்றிப் பாதையின் படிகள்.

''செட்டிப் புள்ளையா பொறந்துட்டு கணக்கில் பெயில் என்கிறியே'' என்று தாய் கடிந்து கொள்ளும்போது, ''இந்தப் படிப்பை வச்சுக்கிட்டே பெரிய ஆளா வரேனா இல்லையா பார்!'' என்று சொல்லும், பாரம்பரிய உணர்வும், ரோசமும்.

நம்பிய நண்பர்கள்கூட உதவ முன்வராத நிலையில் துணிந்து போராடும் துணிவுள்ளம்

காஞ்சிப் பெரியவர், ராஜாஜி, வாரியார் சுவாமிகள், குன்றக்குடி அடிகளார், செட்டி நாட்டரசர் என்று தன் முயற்சியினால் தானே உருவாக்கிக் கொண்ட, சத்சங்கம் - பெரியோர்களின் தொடர்பு.

வான் நதி (வானதி) என்ற கல்கி அவர்களின் பாத்திரப் படைப்பின் பெயரில் அறிவென்னும் கங்கையை எழுத்தாளர்கள் மூலம் தமிழ் கூறும் நல் உலகெல்லாம் பரப்பித் தானும் உயர்ந்த திறமையும் பண்பும்.

எல்லாமே தனி மனித வாழ்விற்கு பெரும் படிப்பினையாக, கை கொடுத்து உதவும் ஊன்றுகோலாக நம்மை நிமிரச் செய்கிறது.

வாழ்வில் பிறப்பதற்கு ஓர் அர்த்தம் இருக்கிறது என்பார்கள் மனவியல் அறிஞர்களும், நம் ஞானிகளும், ஆம். இது ஓர் அர்த்தமுள்ள வாழ்க்கை வரலாறு!

-டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி




1999 அக்டோபர் 17
பிரமாதி புரட்டாசி 30
மலர் : 58
இதழ் : 12


# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## சோனியாவின் வெற்றி; காங்கிரசின் தோல்வி!

தேர்தல் முடிவுகள் பி.ஜே.பிக்கு எதிர்பாராத மகிழ்ச்சியையும் காங்கிரசுக்கு எதிர்பாராத ஏமாற்றத்தையும் அளித்திருக்கக் கூடும். ஆனால், இரு கட்சிகளுமே இந்த முடிவுகளின் அடிப்படையில் முக்கியமான பாடங்களைக் கற்றுக் கொள்ளவேண்டியிருக்கிறது.

முதலில் பி.ஜே.பியின் வெற்றியை எடுத்துக் கொள்வோம். அக்கட்சியின் வெற்றி, ஹிந்துத்வாவின் வெற்றி அல்ல என்பதை மறந்துவிடலாகாது.

பி.ஜே.பி. தனித்துப் பெற்றுள்ள இடங்களின் எண்ணிக்கை ஒரு தேசிய கட்சிக்குப் பெருமை சேர்க்கக் கூடியது அல்ல. ஆந்திராவில் தெலுங்கு தேசம், தமிழகத்தில் தி.மு.க. கூட்டணி, வங்காளத்தில் த்ரிணாமுல் காங்கிரஸ் போன்ற கட்சிகளின் பக்க பலத்தில்தான் தேசிய ஜனநாயக முன்னணி வெற்றி பெற்றிருக்கிறது.

இம்முறை கூட்டணிக் கட்சிகள் நம்பிக்கைக்குரியனவாக இருப்பதால் பிளாக் மெயில் அரசியல் நடைபெறாது. ஆனால், ஆட்சிக்கு வெளியேயிருந்தபடி பி.ஜே.பியை ஆட்டுவிக்கும் சக்திகளின் மிதமிஞ்சுதல் போக்கும் பிற மத துவேஷம் வளர்க்கும் அநாகரிகமும் தலைதூக்கி, ஆட்சிக்கு அவப்பெயரைத் தேடித்தர நிறைய வாய்ப்பு இருக்கிறது.

இதற்கு இடங்கொடாமல் இரும்புக் கரம் கொண்டு ஒடுக்காத வரையில் பி.ஜே.பியின் ஸ்திரமான ஆட்சியானது ஒரு நல்ல ஆட்சியாக அமையாது.






ஆட்சியில் நீடிக்கும் முயற்சியே நேரத்தையும் கவனத்தையும் முழுமையாகக் கவர்ந்ததால் சென்ற முறை பி.ஜே.பியினால் நல்லாட்சி வழங்கவும் முடியவில்லை; மதவாத அமைப்புகளின் தீவிரப் போக்கைக் கட்டுப்படுத்தவும் முடியவில்லை. நிர்வாகத் தேக்கம் மட்டுமின்றி, மதக் கலவரங்களும் கொலை வெறியும் பலத்த அவப் பெயரை வாங்கித் தந்தன.

அந்த அவப் பெயரைப் போக்கிக் கொள்ள ஒரு நல்ல சந்தர்ப்பம் இப்போது வாஜ்பாய்க்குத் தரப்பட்டுள்ளது. இதை அவர் உணர்ந்து, நம்பிக்கைக்குரிய தோழமை கட்சிப் பிரதிநிதிகளின் துணையுடன் நிலையான நல்லாட்சி வழங்க முற்பட வேண்டும்.

நாட்டின் தொழில்துறையும் பங்கு மார்க்கெட்டும் உயிர் பெற்றாக வேண்டும். இதற்குப் புதிய அரசு முயற்சிகள் எடுத்து, நிலையான ஆட்சி, நல்லாட்சி என்பதுடன் நாட்டுக்கு வளம் சேர்க்கும் ஆட்சியாகவும் மலரச் செய்ய வேண்டும்.

உட்கட்சிப் பூசல்கள் உதவாது என்ற அடிப்படைப் பாடத்தையும் பி.ஜே.பி. இத்தேர்தலில் பெறலாம். உத்தர பிரதேசத்தில் ஆளும் கட்சியாக இருந்தும் பி.ஜே.பி. படுதோல்வி கண்டுள்ளது. கல்யாண் சிங் கிளப்பிய பிரச்னை இதற்குக் காரணம். கர்நாடகாவில் லோக் சக்தியின் ஆதரவை ஏற்பது குறித்து ஜனதா தளத்தில் கருத்து வேற்றுமை நிலவியது. இந்த வேற்றுமையுடனேயே இக்கட்சிகள் அம்மாநிலத்தின் பி.ஜே.பி. கூட்டணியில் இடம்பெற, விளைவு: தோல்வி!

காங்கிரஸின் தோல்விக்கும் படிப்படியான பிளவுகளே காரணம். தமிழ் நாட்டில் த.மா.கா. தோற்றுவிக்கப்பட்ட பிறகு காங்கிரஸ் ஏறத்தாழ காணாமலே போய்விட்டது. மஹாராஷ்டிராவிலும் பவார் அண்ட் கோ பிரிந்து சென்ற பிறகு நிலவரம் பரிதாபம்தான். உத்தர பிரதேசத்தில் காங்கிரஸ் கணிசமான இடங்களைப் பெற்றாலும் பி.ஜே.பியினுடைய உட்கட்சிப் பூசல்தான் அதற்குக் காரணமேயொழிய சொந்த பலம் அல்ல.

சோனியா காந்தியின் இரட்டை வெற்றியைக் கொண்டாடும் மனோ நிலையில் பிற காங்கிரஸ் தலைவர்கள் இருக்கப் போவதில்லை. 'ராஜீவ் மனைவியின் வெற்றி', 'இந்திரா மருமகளின் வெற்றி', ஏன், 'ப்ரியங்கா-ராஹுல் அம்மாவின் வெற்றி' என்று வேண்டுமானால் அந்த வெற்றி




யைக் குறிப்பிடலாமேயொழிய காங்கிரஸ் கட்சியின் பலத்துக்கோ அதன் கொள்கைகளுக்கோ கிடைத்த வெற்றி அல்ல. தனி நபர் ஆளுமையை நம்பி வளர்க்கப்பட்ட ஒரு கட்சிக்கு நேரக் கூடிய கதிதான் காங்கிரசுக்கு நேர்ந்துள்ளது. தனி நபர் ஜெயித்திருக்கிறார்- கட்சி தோற்றிருக் கிறது!

தமிழக தேர்தல் முடிவுகளும் சில வலிமையான உண்மைகளை உணர்த்துகின்றன.

கடந்த தேர்தலில், 'அ.தி.மு.கதான் பி.ஜே.பியின் வெற்றியைச் சாத்தியமாக்கியது; வாஜ்பாய் யார் என்பதே தமிழர்களுக்குத் தெரியாது' என்றெல்லாம் ஜெயலலிதா அநியாயமாய்ப் பெருமை யடித்துக் கொண்டார். அது எவ்வளவு முட்டாள்தனமான பேச்சு என்பது நிரூபணமாகியிருக்கிறது. பாராளுமன்றத் தேர்தலில் வாக்களிக்கும் மக்கள், மத்தியில் நிலையான நல்லாட்சியை மனத்தில் கொண்டுதான் வாக்களிக்கிறார்கள்.

இம்முறையும் பி.ஜே.பி. கூட்டணிக்கு ஆதரவு தந்திருக்கும் தமிழக வாக்காளர்கள், சில அ.தி.மு.க. கூட்டணியாளர்களையும் வெற்றி பெறச் செய்துள்ளனர்.

ஆனால் த.மா.கா. தனிமைப்பட்டுப் போய் மும்முனைப் போட்டிக்கு வித்திட்டிராவிட்டால் இந்தச் சோகம் நிகழ்ந்திருக்காது. வாக்குகள் பிளவுபட்டதால் அ.தி.மு.க. அடைந்திருக்கும் ஆதாயத்தை த.மா.கா. தவிர்க்காது போனது மிகவும் துரதிர்ஷ்டமே. அதனினும் துரதிர்ஷ்டம் த.மா.கா.வின் சிறந்த தலைவர்கள் சிலர் படுதோல்வி அடைய நேரிட்டதுதான். அதற்கும் சிகரமான துரதிர்ஷ்டம், கிரிமினல் குற்றம் சாட்டப் பெற்ற அ.தி.மு.க. வேட்பாளர் ஒருவர் நாடாளுமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது.

தினகரனை ஆதரித்த அவரது தொகுதி மக்கள், ஜாதிக் கண்ணோட்டத்தில் வாக்களித் திருப்பார்களேயானால், அவர்களுடைய கணக்கு மிகவும் பிசகான கணக்கு என்பதை எடுத்துச் சொல்ல வேண்டியிருக்கிறது. நாடாளுமன்றத்தின் கௌரவத்துக்கு மட்டுமின்றி தங்கள் ஜாதிக்கும் சேர்த்து இவர்கள் இழுக்குச் செய்து விட்டார்கள்!



• நெற்றிக் கன்று

சமுத்திரம் என்கிற கிராமத்தில் ஒரு பசு 'நெற்றிக் கண்'ணுடன் ஒரு கன்றினை ஈன்றதும் ஓவர் நைட்டில் ஊரே 'ப்ளாஷ்' ஆகிவிட்டது. இந்த கிராமத்துக்கு ஒரு நாளைக்கு இரண்டு தடவைதான் பஸ். அதுவும் மணப்பாறையிலிருந்து மரவனூர் வரைதான். இருந்தாலும் இந்த 'நெற்றிக் கன்றை' பார்ப்பதற்கு டூ வீலர்களும், கார்களும் சமுத்திரத்துக்குள் வந்து குவிந்த வண்ணம் இருக்கின்றன!



• ஈன்ற பசு, கன்றுடன் பழனிச்சாமி தம்பதி

மணப்பாறையிலிருந்து 11 கிலோ மீட்டர் நேஷனல் ஹைவேஸில் போய் மரவனூரில் இறங்கி 3 கிலோ மீட்டர் நடராஜா பஸ் சர்வீஸில் (கால்நடையாகத்தான் சார்...) போனால் சமுத்திரம் கிராமம் தென்படும். இந்த ஊரின் சிவன் கோயிலுக்கு வயது பல நூறாண்டு. இந்தக் கோயிலுக்கு தர்மகர்த்தாவாக இருந்தவர் பழனிச்சாமியின் அப்பா. யார் இந்த பழனிச்சாமி? சமுத்திரம் கிராம பால் உற்பத்தியாளர்கள் சங்கத்தின் செயலாளர். இவர் வீட்டுப் பசுதான் இந்தக் கன்றினை ஈன்றுள்ளது.

இந்த ஊரின் ஜனத்தொகை 5000. தொழில் மாடு வளர்த்தல். செய்யும் தொழிலே தெய்வம் என்பார்கள். இங்கே 'தெய்வமே' வந்து பிறந்திருக்கிறது என்று பெருமைப்படுகிறார்கள்! செப்டெம்பர் 19ம் தேதி மாலை 4.30 மணிக்கு இந்தக் கன்று பிறந்தபோது சிவபெருமானே உலகில் வந்து பிறந்து விட்டார் என்று ஊரே சந்தோஷமானது.

சமுத்திரம் நாட்டாமை சேதுரத்தினம். (நாட்டாமை என்றதும் சரத்குமார் ரேஞ்சுக்கு கற்பனை செய்யாதீர்கள். சாதாரணமாக இருக்கிறார்)

# "சிவன்தான் வந்து பிறந்திருக்கிறார்!"

''எல்லா ஊர்களிலும் முருகன் கோயில் இருக்கும், மாரியம்மன், பிள்ளையார், பெருமான் கோயில்கள் இருக்கும்.

சிவன் கோயில்கள் ரொம்ப கொஞ்சமாகத் தான் பார்க்க முடியும். எங்க சிவன் கோயி லுக்கு பழனிச்சாமியோட அப்பா தர்மகர்த் தாவா இருந்த வரைக்கும் நல்லா பார்த் துக்கிட்டார். அவர் காலமான பதினஞ்சு வருஷமா யாராலேயும் கவனிக்கப்படாம 'சிவனே'னு கிடந்தது. ஆனா இப்ப இந்தக் கன்றுக்குட்டியோட நெற்றிக்கண்ணைப் பார்க்கறப்போ அந்த சிவன்தான் பிறந்து ஊரில் வலம் வரப் போறாரோன்னு படுது!'' என்றார்.

''நெற்றிக்கண்' கன்றின் சொந்தக்காரர் பழனிச்சாமி, "எங்கப்பா நல்ல சிவ பக்தர். திருவிளையாடல்ல சிவ பெருமானுக்கு முன்னால பாடுற ஹேமநாத பாகவதர் மாதிரி பக்திப் பாடல்கள் பாடி பஜனை, பூஜைகள் செய்வார். அவர மாதிரி நாங்க சிவபெருமானை கவனிக்காம விட்டதால



• கவனிப்பாரற்ற சிவன் கோயில்..

இப்ப சிவபெரு மானே எங்க வீட்டுல பிறந்திருக்கறதா நினைச்சு தினமும் இந்தக் கன்றுக் குட்டிக்கு சூடம் காட்டி ஆராதனை செய்து கும்பிடு றோம்'' என்றார்.

இந்த நெற்றிக்கன்றின் பெயர் ரங்கநாயகி. 70 வயதான பாப்பா பாட்டி நம்மிடம், "தம்பி கன்னத்தில போட்டுக்கங்க. செவன்... செவன்...'' என்றவர் இந்தக் கன்றுக் குட் டிக்கு கோயில் கட்டப் போவதாகச் சொன்னார்.

**ப**ஞ்சாயத்து யூனியன் கால்நடை மருத்துவர் சத்யம், ''இதுக்குக் காரணம் ஜீன்ஸ் என்றார்'' (ஷங்கர் 'ஜீன்ஸ்' இல்லை... இது மரபணுக் கோளாறு). கன்றுக்குட்டிக்கு சிகிச்சை அளித்து வரும் ஆவின் கால்நடை மருத்துவர் இளங்கோவன், "இந்தக் கன்றுக் குட்டியின் மூன்று கண்களுக்குமே பார்வை நன்றாக உள்ளது!'' என்றார்.

சமுத்திரத்தில் பல சரக்குக் கடை வைத் திருக்கும் ஜெகஜீவன், ''பூட்டிக் கிடந்த சிவன் கோயிலுக்கு பாப விமோசனம் மாதிரி இந்தக் கன்றுக் குட்டி பிறந்திருக்கு... இனி இந்த ஊருக்குப் பேரும் புகழும் கிடைக்கப் போறது!'' என ரொம்பவும் உணர்ச்சியாகப் பேசினார்.



• சுந்தர குருக்கள்

**"சிவபெருமானே எங்க வீட்டுல பிறந்திருக்கறதா நினைச்சு தினமும் இந்தக் கன்றுக் குட்டிக்கு சூடம் காட்டி ஆராதனை செய்து கும்பிடுறோம்."**

''ஊருக்குப் பெரிய அதிர்ஷ்டம் வந்துடுச்சு. ஏழு மாசமா மழையே இல்லை. இப்ப இந்த தெய்வாம் சமான ரெங்கநாயகியால ஜோரா மழை பெய்யறது. இது சாட்சாத் சிவனின் அவதாரம்தான். நான் சிவன் கோயிலுக்கு அதிகம் போக முடியலை. அதான் பக வானே என்னைப் பார்க்கக் கன்று வடி வத்தில் வந்துட்டாரோனு நினைக்கத் தோணறது!'' என சிவன் கோயில் பட்டர் சுந்தர குருக்கள் சொன்னார்.

ஆனால், ஊசி மூலம் (செயற்கைக் கருத்தரிப்பு) பிறந்த இந்த ரங்கநாயகி, இவை ஏதும் அறியாமல் வருவோர் போவோரை மூன்று கண்களிலும் விழித்து விழித்துப் பார்த்த வண்ணம் இருக்கிறது.

— பழ. சேதுராமன்

புகைப்படங்கள். ஆர். நவநீதன்

## உலகத்தில் வாய்ப்புகளுக்கு ஒருபோதும் இல்லை குறைவு

# சரியான உங்களின் தேர்வு
# தந்திடுமே மன நிறைவு




# முற்றிலும் சரியான தேர்வு

**முதல் ஆண்டில் ஆண்டு ஒன்றுக்கு 10.50% விகிதத்தில் வரியற்ற மாத வருமானம் அதோடு வருடாந்திர மற்றும் கியூமுலேடிவ் தேர்வுகள் ஆண்டு ஒன்றுக்கு 11.00% விகிதத்தில்.**

யூடிஐ-யின் மன்த்லி இன்கம் பிளான் 99(II) உங்கள் தேவைகளுக்கு ஏற்றவாறு அமைக்கப்பட்ட ஓர் 5 ஆண்டு திட்டம். உங்கள் தேர்வு சரியானதுதான் என்பதை உறுதி செய்யும் இதன் கவர்ச்சிகரமான அம்சங்களை பாருங்கள்.

3 வித தேர்வுகளுக்கான வாய்ப்பு :
மாதாந்திர வருவாய் தேர்வு : முதல் ஆண்டுக்கு ஆண்டு ஒன்றுக்கு 10.50% விகிதத்தில் மாதந்தோறும் கிடைக்கும் உறுதிப்படுத்தப்பட்ட வருமானம்.
வருடாந்திர வருவாய் தேர்வு : முதல் ஆண்டுக்கு ஆண்டு, ஒன்றுக்கு 11.00% விகிதத்தில் உறுதிப்படுத்தப்பட்ட வருமானம்.
க்யூமுலேடிவ் தேர்வு : முதல் ஆண்டுக்கு ஆண்டு ஒன்றுக்கு 11.00% விகிதத்தில் வருமானம் க்யூமுலேடிவ் முறையில் கணக்கிடப்படும்.
தொடரும் ஆண்டுகள் / வேளைகளுக்கு வருமான பங்கீடுகள் ஒவ்வொரு ஆண்டும் முன்னதாகவே மார்ச் மாதத்தில் அறிவிக்கப்படும்.
மூன்று தேர்வுகளின் கீழும் முதிர்வுறும்போது மூலதன மதிப்புயர்வுக்கு வாய்ப்பு உள்ளது.
முதிர்வுறும் போது மூலதன பாதுகாப்பு : டிரஸ்டின் டெவலப்மென்ட் ரிசர்வ் ஃபண்டால் உத்தரவாதம் அளிக்கப்படுகிறது. எனினும், லாக்-இன்-பீரியட்- க்கு பின்பு மறு கொள்முதல்களுக்கு இந்த உத்தரவாதம் நீட்டிக்கப்படாது.

வரிச்சலுகைகள் : வருமான வரிச்சட்டம் 1961 பிரிவு 10(33)ன் கீழ் முழுமையான வரி விலக்கு.

பிரிவு 54 சுற முதலீட்டாளர்களுக்கு இரட்டை சலுகைகள் :
இத்திட்டத்தில் செய்யப்படும் முதலீடு மூலதன லாப வரிவிலக்கை வருமான வரிச்சட்டம் 1961, பிரிவு 54 சுறன் கீழ்பெற தகுதி உடையது. அதோடு இப்பிரிவின் கீழ் செய்யப்படும் முதலீட்டிலிருந்து கிடைக்கும் வருமானம் முற்றிலும் வரிவிலக்குப் பெறும்.

வாராந்திர என்ஏவி : வாராந்திர அடிப்படையில் என்ஏவி அறிவிக்கப்படும்.

லிக்விடிட்டி : 3 ஆண்டுகளுக்குப் பின்பு என்ஏவி அடிப்படையிலான விலையில் மறுகொள்முதல் வசதி. மேலும் 3 தேர்வுகளின் கீழும் செய்யப்படும் முதலீடுகள் NSEன் ஹோல்சேல் டெப்ட் செக்மென்டில் அட்டவணை இடப்படும்.

குறைந்தபட்ச முதலீடுகள் : மாதாந்திர வருமானம் மற்றும் வருடாந்திர வருமானம் தேர்வுகளுக்கு ரூ.10,000/- மற்றும் க்யூமுலேடிவ் தேர்வுக்கு ரூ.5,000/- அதிகபட்ச வரம்பு ஏதுமில்லை.

மேற்கொண்டு விபரங்களுக்கு, உங்கள் அருகமைந்த யூடிஐ அலுவலகம் அல்லது முக்கிய பிரதிநிதி/முகவரை அணுகவும்.

## யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா

13, சர். விட்டல்தாஸ் தாக்கர்சி மார்க், நியூ மெரின் லைன்ஸ்,
மும்பை - 400 020. தொ : 2031818. Website : www.unittrustofindia.com

CWPL - TAM / 99

**திட்டம் செப்டெம்பர் 27 முதல் அக்டோபர் 30,1999 வரை நடப்பிலிருக்கும்.**



சுமி சூப்பர் மார்க்கெட்

# கதற அடிக்கிறார் ஜாகிர்!

பூஷாவலா கதிரி கோபால்நாத கச்சேரின்னா, மேடைல தேசிய ஜனநாயகக் கூட்டணி அளவுக்குப் பக்க வாத்தியர்கள் இருப்பாங்க. ஒரு வலயப்பட்டி, ஒரு கன்யாகுமரி முன்பாரான்னா, விநாயகராமும் ஹரிஷங்கரும் யாராவதொரு மோர்சிங்கரும் பின்பாரா. ஸ்டேஜ் கொள்ளாது.

லாஸ்ட் வீக் டி.டில ஒரு கதிரி கச்சேரி பார்த்தேன். (மூப்பனாரெல்லாம் இருந்த தியாகராஜ உற்சவம்.) ப்ளெஸன்ட் சர்ப்ரைஸ் – மேற்படி கூட்டணில ஒரு புதுமுகம், ஜாகிர் உசேன்!

**“மெட்ராஸ் மாதிரி கார்ப்பரேஷன் ஸ்கூல் நல்ல ஸ்டான்டர்டா இருந்தா சேர்த்திருப்பேன். ஆனா திருச்சில அப்படி இல்லை'ன்னு கொஞ்சம் வருத்தப்பட்டார்.”**

வலயப்பட்டி ஒரு ராட்சஸன்னா ஜாகிர் ஒரு பிரும்ம ராட்சஸன். அந்த சாமஜ வரகமனாவுக்கப்புறம் அவங்க குடுத்த ஸோலோ ப்ளே இருக்கு பாருங்க – டெரிஃபிக்! வாத்தியத்திலே எத்தனை விதமா கிம்மிக்ஸ் பண்ண முடியுமோ, அத்தனை விதமாவும் பண்ணிக் காட்டினார் வலயப்பட்டி. (ஒரே ஒரு குறை: குட்டிக்கரணம் அடிச்சிட்டே வாசிக்கலை) ஜாகிர் வாசிப்புல உள்ள ஜாலம்ஸ் பத்தி புதுசா சொல்ல வேண்டாம். மனுஷன் வாத்தியத்தை வாசிச்சா நாதம்; தடவினா ஸுநாதம்; தொட்டாலே சொர்க்கம்தான்.

பட், தியாகராஜ ஆராதனை மேடைல இப்படியெல்லாம் பி.சி. சர்க்கார் வேலை காட்டணுமாங்கறதுதான் கேள்வி. இந்த ரகளை ஒரு பக்கம்னா, கதிரியும் கன்யாகுமரியும் ஹிந்தோளத்தோட ஆறு ஸ்வரங்களையும் டைப் ரைட்டர்ல அடிக்கற மாதிரி ஒரே டமடம'

இன்ஸ்ட்ருமென்டல் ம்யூஸிக்கோட அழகே அதனோட இனிமைதான். குறைந்த பட்சம் இவங்க ரெண்டு பேரும் இனிமே மைக் வைக்கக்கிறதில்லைன்னாவது விர சபதம் பண்ணணும்.

• • •

அந்தக் காலத்துல பத்திரிகை நடத்தின வங்க என்ன மாதிரியெல்லாம் கஷ்டப்பட்டிருக்காங்க தெரியுமா? பி.எஸ். ராமையா வோட 'மணிக்கொடி காலம்' படிச்சப்ப ஒரு இன்ஸிடென்ட் ரொம்ப இன்ட்ரஸ்டிங்கா இருந்தது.

'மணிக்கொடி'யோட நாலாவது இஷ்யூ ரெடியாகி பார்ஸல் கட்டியாச்சாம். ஆனா, தபால்ல அனுப்ப, ஸ்டாம்ப் வாங்கக் காசில்லை.

## குவிஸ் போட்டி – 8 முடிவு!

### சரியான விடைகள்:

**1) டால்ஸ்டாய் 2) முகமது நபி 3) அசோகன் 4) பண்டுங் 5) ஸ்விட்சர்லாந்து 6) பெர்லின் சுவர் 7) கோலூர்க்கிழார் 8) நியூயார்க்**

சரியான விடைகளை ஏராளமான வாசகர்கள் எழுதியிருந்தார்கள். அவர்களுள் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு ரூ.200 பரிசு பெறும் அதிர்ஷ்டசாலி:

**அ. கேசவமூர்த்தி,**
**கிருஷ்ணபவனம்,**
**12-3-27 மதுரைச் சாலை,**
**வத்தலக்குண்டு – 624 202**

ராமையா ரொம்பத் தயங்கி இன்னொரு மணிக்கொடிக்காரரான கி. ரா(மச்சந்திரன்) கிட்ட போயி விஷயத்தைச் சொல்லி, 'உங்க மோதிரத்தைத் தர முடியுமா?'ன்னு கேட்டிருக்கார்.

கி.ரா.வோட மோதிரம் அடகுக் கடைக்குப் போய், பத்து ரூபாவா மாறி வந்ததும் தான் பார்ஸல் வெளிய போச்சாம்!

இப்படிப் பல தடவை அவர் மோதிரம் அடகுக் கடைக்குப் போய் வந்தப்புறம் யாராவது 'என்ன கி.ரா., சௌக்கியமா?'ன்னு கேட்டா, "இதோ, மோதிரத்தோட சௌக்கியம்!"னு தமாஷ் பண்ணுவாராம் அவர்.

• • •

ரொம்ப நாளா ஜோக் சொல்றதில் லைன்னு ஒரு குறை இருக்கில்ல?

வெல், ரேடியோல எலக்ஷன் ரிஸல்ட்ஸ் கேட்டுக்கிட்டே இதை எழுதிட்டிருக்கேன். சட்டுனு காதுல விழுந்த ஒரு பேட்டியிலிருந்து சில வரிகளை அப்படியே தரேன். நூறு ஜோக்குக்கு இது சமம்னு எடுத்துக்கங்க.

வானொலி நிருபர்: மதுரைல உங்க கேண்டிடேட் ஜெயிச்சிருக்காரே?

சி.பி.எம். தலைவர் ஒருவர்: அது பெரிய விஷயமில்லை. ஏற்கெனவே எதிர்பார்த்தது தான். மத்த தொகுதிகளைத்தான் நாங்க கவனிச்சிட்டிருக்கோம்.

• • •

திகசி புஸ்தகம் பத்தி லாஸ்ட் வீக் நான் எழுதியிருந்ததைப் படிச்சிட்டு, புல்லரிச்சி லெட்டர் போட்டிருக்கற பரமக்குடி பா. உஷாராணிக்கு ஒரு கேள்வி:

கல்கி சிறுகதைப் போட்டில ப்ரைஸெல்லாம் வாங்கிட்டு, திடீர்னு காணாமப் போயிட்டீங்களே, காரணம் என்ன? தொடர்ந்து எழுத வேண்டியதுதானே?

• • •

நூத்தியிருபது கோடி செலவுல கவர்ன்மென்ட் ஹையர் செகன்ட்ரி ஸ்கூல்ஸ்லயெல்லாம் கம்ப்யூட்டர் பயிற்சிக்கு தமிழக அரசு திட்டம் ஆரம்பிச்சதைப் படிச்சிருப்பீங்க. சமீபத்துல திருச்சி போயிருந்தப்போ ஒரு ஷாக்! ஒரு ஃப்ரெண்டோட பையன் – தனியார் ஸ்கூல்ல சேர்த்திருக்காரு. வருஷத்துக்கு த்ரீ தவுஸன்ட் ஃபீஸ், அட்மிஷன் ஃபீஸ்; அப்புறம் மந்த்லி ஃபீஸ் நூத்தியம்பது ரூபா... எல்லாம் ஜஸ்ட் எல்.கே.ஜிக்குத்தான். 'கம்ப்யூட்டர்கூட கத்துத் தராங்க... ஆனா ஃபீஸ் அதிகம்தான். மெட்ராஸ் மாதிரி கார்ப்பரேஷன் ஸ்கூல் நல்ல ஸ்டான்டர்டா இருந்தா சேர்த்திருப்பேன். ஆனா திருச்சில அப்படி இல்லை'ன்னு கொஞ்சம் வருத்தப்பட்டார்.

அப்பா! திருச்சிகாரங்களுக்கு சென்னை பத்திச் சொல்ல ஒரு நல்ல விஷயம் கிடைச்சுது!

இன்னொண்ணும் திருச்சில நோட் பண்ணினேன். மெட்ராஸ் பூக்காரங்க மாதிரி அங்கேயும் எல்லாரும் நாலுக்கு மாறிட்டாங்க. யாரும் வாழை நார்ல பூ கட்றதில்லே. இத்தனைக்கும் திருச்சிலேர்ந்து புறப்பட்டு எந்த திக்குலே பத்து கி.மீ போனாலும் தளதளன்னு வாழைத் தோப்பு!

— சுபி

# ALL INDIA INSTITUTE OF MANAGEMENT STUDIES




No. 29, Lazarus Church Road,
R.A. Puram, Chennai - 600 028.
Phone: 044 - 4933210,
Fax: 044 - 4933259,
e-mail:aiimas@hotmail.com

Offers the following Six Months Diploma Courses by Correspondence (Distance Education Programme). Each Diploma Course has 4 Written Papers

## DIPLOMA IN

* BUSINESS MANAGEMENT
* BUSINESS ADMINISTRATION
* SALES & MARKETING
* ADVERTISING & PUBLIC RELATIONS
* INTERNATIONAL BUSINESS MGMT.
* PERSONAL MANAGEMENT & INDUSTRIAL RELATIONS
* TOTAL QUALITY MGMT. & ISO 9000
* INTERNAL QUALITY AUDITING & QS 9000 / ISO 9000
* FINANCIAL MANAGEMENT
* INTERNATIONAL MARKETING MGMT.
* NETWORKING & INTERNET APPLICATION
* MGMT. INFORMATION TECHNOLOGY
* QUALITY ASSURANCE & QS 9000/ISO 9000
* PRODUCTION MANAGEMENT
* MATERIALS MANAGEMENT
* EXPORT AND IMPORT MGMT.
* ENVIRONMENTAL MANAGEMENT & ISO 14000 / 14001
* MASS COMMUNICATION
* HUMAN RESOURCES DEVELOPMENT
* OFFICE ADMINISTRATION
* QUALITY CONTROL & ISO 9000
* HOSPITAL ADMINISTRATION
* TEACHER TRAINING EDUCATION
* INTERNATIONAL AIRLINES MGMT.

(Affiliated / Recognised by Westwind Aviation Academy. Arizona, USA)

ELIGIBILITY: No formal Qualification (Open Education System) Minimum Age: 16 years. **Course Fee Rs.800/-** Course Fee includes supply of Study Materials & Question Bank Book. **Medium of Study Materials & Examination** - English/Hindi. Examination will be held at about 60 centres all over india. **Prospectus & Study Materials are available both in Hindi & English.** Application & Prospectus are also available on internet: WWW.AIIMAS.COM. **For Application & Prospectus send Rs. 25/- D.D./I.P.O./M.O. in favour of the above Institute.**

---

## புகழ் பெற்ற ஜோதிஷர், மந்திர சாஸ்திர நிபுணர் பண்டித காழியூர் ம. பத்மநாபன்



எனது தந்தையார் அடியேனுக்கு மந்திரோபதேசம் செய்யும் காட்சி

பிரபல ஜோதிஷர் (பண்டித காழியூர் பத்மநாபன்) காழியூர் ஸ்ரீனிவாச்சாரியாரின் மூத்த புதல்வரும், ஜோதிஷ மந்திர சாஸ்திரங்களில் 45 வருட காலம் நன்கு தேர்ச்சியும், ஆசீர்வாதமும், பெற்றவரால் மகத்தான சக்தி வாய்ந்த, யந்திரங்கள், சக்ரங்கள் (வெள்ளியில் தயாரிக்கப்படுகின்றன) மகாலக்ஷ்மி கவசம் ரூ. 250/- மகா சுதர்சன யந்திரம் ரூ. 250/- லக்ஷ்மி நரசிம்ம கவசம் ரூ. 350/- தனாகர்ஷண யந்திரம் ரூ. 350/- மகா சுதர்சன சக்கரம் ரூ. 600/- மஹாலக்ஷ்மி சக்கரம் ரூ. 600/- இவை தவிர அநேக விதமான யந்திரங்களும், கவசங்களும், (விசேஷ பூஜாக்ரமப்படிக்கு) தயாரித்து அனுப்பப்படும். வெளிநாட்டு நேயர்கள் இரட்டிப்புத் தொகை டி.டி. மூலம் அனுப்ப வேண்டும். தபால் செலவு ரூ. 50/- B.P.O. மூலம் அனுப்பி பெறலாம்.

கம்ப்யூட்டர் ஜாதகம் தமிழ்/ஆங்கிலம் ரூ. 50/- ஜாதகத்தின் பொதுப் பலன்கள் நேரில் சொல்வதற்கு ரூ. 100/- ஆயுள் பலன் (வருஷம், மாதம், தேதி, நேரம், ஊர்) ரூ. 200/- சாதாரண தபால் மூலம் அனுப்ப ரூ. 10/- பதிவுத் தபால் மூலம் அனுப்ப ரூ. 25/-

*பிரபல ஜோதிஷர்*

### பண்டித காழியூர் பத்மநாபன்

**'தபோநிதி'**

நெ. 5. வித்யோதயா முதல் மெயின் தெரு
த.பெ. எண்: 1411, தி. நகர்
சென்னை - 600 017. போன் : 8263814
தென் இந்தியா (கிளைகள் ஏதும் கிடையாது)

நேரில் சந்திக்க: **காலை 8 மணி முதல் 11 மணி வரை**

***முக்கிய கவனிப்பு:*** **தபால் மூலம் வரும் எல்லா கடிதங்களும் வெகு கண்டிப்பாக பரம இரகசியமாக வைக்கப்படுகின்றன. வீட்டில் கிரகதோஷம் மற்றும் எந்த தோஷங்களும் பாதிக்காமலிருப்பதற்கு, சுதர்சன ஹோமம், மகா சுதர்சன சக்கரம் பிரதிஷ்டை செய்து தரப்படும். உள்ளூர் வாசிகளுக்கு மட்டுமே செய்யப்படும். நேரிலோ தபால் மூலமோ தொடர்பு கொள்ளலாம்.**

# ஜெயா டி.வி.யின் ஜோதிட பட்டிமன்றம்!

**கோ**லா யுத்தம் வெளிப்படையானது. டீ.வி.யில் தேர்தல் முடிவுகள் வழங்குவதில சானல்களுக்கிடையே நடந்த போட்டா போட்டியோ மௌன யுத்தம்!

நூற்றுக்கணக்கான படுகொலைகள், அப்பாவிச் சாவுகள்; வரலாறு காணாத பாதுகாப்பு, வரலாறு காணாத ஒரு மாதத் தேர்தல், 825 கோடி செலவு, வாக்குச் சாவடி கைப்பற்றல், கள்ள வோட்டு, கள்ள வாக்காளர்கள், தலைக்குத் தலை நடத்திய கருத்துக் கணிப்புகள்... இத்தனையையும் கண்டு பொங்கிய கோபத்தை, 'ஆண்டவா! எதற்கு இந்த ஜனநாயகம்' என்ற சராசரி இந்தியனின் சலிப்பை எல்லா சானல்களுமே பிரதிபலித்தன. ஆனால் தனித்தனியே அவற்றுக்கென 'குணாதிசயங்கள்' இல்லாமலா போய்விடும்!

சானல் மேய்ந்து வாசகர்கள் தவறவிட்டிருக்கக் கூடிய சில 'ரத்தினங்களை'த் தருகிறோம் :

ஜெயா டீ.வி.யில் இருபது நிமிடங்கள் மூன்று ஜோதிடர்களுக்கு ஒதுக்கப்பட்டன. இந்தியாவின் லக்னம் ராசி, சோனியாவின் லக்னம் ராசி, வாஜ்பாயின் லக்னம் ராசி – இத்தனையும் வைத்து ஒரு ஜோதிட பட்டிமன்றமே நடத்தி விட்டார்கள்.

அ.தி.மு.க.வின் லக்னம் ராசி, ஜெயலலிதாவின் லக்னம் ராசி அவர் பேரிலுள்ள வழக்குகளின் லக்னம் ராசி – இதற்கொரு பட்டிமன்றம் நடத்தத் துணிவார்களா!



• வந்து–



• சாது மிரண்டால்!

சன் டீ.வி.யில் ஜனா கிருஷ்ணமூர்த்தியைப் பிடித்து மாலன் 'மாட்ட' முயற்சி செய்ய, அவர் சிட் கிடைக்காத கோபமோ என்னமோ, சாது மிரண்டால் கதையாகப் பேட்டியாளரை பீஸ் பீஸாக்கி விட்டார்!

'ஜெயித்த இடத்தையெல்லாம் விட்டு விட்டு, தோற்றதை மட்டும் குறை சொல்றீங்களே' என்ற அவர் சாடலில் மாலன் சைலன்டாகி சாதுப் புன்னகையுடன தலையைத் தலையை ஆட்டிக் கொண்டிருக்க வேண்டியதாகி விட்டது.

தானத்தில் சிறந்தது நிதானம் என்பது டீ.வி. தொகுப்பாளருக்குப் பொருந்தாது மாலன் சார்.... 'பாத்தீங்கன்னா'.... 'வந்து...'ன்னு இழுத்து இழுத்துப் பேசிக்கிட்டிருந்தா ஹிந்தி நியூஸே தேவலாம்னு ஓடத் தோணுது! ஜனா கிருஷ்ணமூர்த்திக்கு இருக்கிற பாடி லாங்குவேஜ் கூட உங்களுக்கு இல்லையே!

ராஜ் டி.வி.யில், கூட்டணிகளின் நம்பகமற்ற தன்மையை இரா. செழியன் சுருக்கமாய் விமர்சித்தது நன்றாக இருந்தாலும் எதிர்காலத்தை எண்ணிய போது வயிற்றில் புளியைக் கரைத்தது. 'ஜெ தம்மை முன்னிலைப்படுத்தி வாக்குக் கேட்டார்; கருணாநிதியோ வாஜ்பாயை முன்னிறுத்தி வோட்டுக் கேட்டார்' என்ற பேருண்மையை இந்த சானலில் பிட்டு வைத்தார் ஒரு அ.தி.மு.க. பிரமுகர். 26 தொகுதிகளில் அ.தி.மு.க. ஏன் தோற்றது என்று இப்போதல்லவா புரிகிறது! (சானல் தாவியதில் பெயர் பார்க்கவில்லை). புரட்சித் தலைவியின் அனுமதி

* கணக்குப்...

யுடன்தான் பேசியிருப்பார் என்று நம்புவோம்!

விஜய் டி.வியில் ஜெயந்தி நடராஜனும் பீட்டர் அல்போன்சும் இந்தத் தோல்வி தங்கள் கட்சியின் நாற்றங்கால் என்று வர்ணித்துக் கொண்டனர்!

த.மா.கா.வின் தார்மீகச் செம்மல்களுக்கு ஒரு சின்ன கணக்கு - தி.மு.க. முன்னணி தோற்ற தொகுதிகளில் (மயிலாடுதுறை நீங்கலாக) அதன் வேட்பாளர் + த.மா.க. வேட்பாளர் பெற்ற வாக்குகளைக் கூட்டிப் பார்க்கட்டும்... ரத்தக் கண்ணீர் உங்கள் நாற்றங்காலுக்குப் பாயும்!

தூர்தர்ஷன் கவரேஜ் கூட இந்த முறை படு சுவாரஸ்யம். கரன் தாபர் ஊசிப் பட்டாசு போல் சுறுசுறுவென்று பேசி, கமென்ட் அடித்துக் கட்டிப் போட்டு

**"ஜெயித்த இடத்தையெல்லாம் விட்டு விட்டு தோற்றதை மட்டும் குறைசொல்றீங்களே' என்ற அவர் சாடலில் மாலன் சைலன்டாகி சாதுப் புன்னகையுடன தலையைத் தலையை ஆட்டிக் கொண்டிருக்க வேண்டியதாகி விட்டது."**

விட்டார். 'ஓவர் டு பேங்களூர்' என்று பின்னணியில் பெரிய திரையில் பெங்களூர் நிருபரிடம் ஒப்படைக்க, இவர் சுறுசுறுப்பு அவரிடம் இல்லை என்பதுதான் குறை!

இந்தக் குறைகளின்றி எங்கு சென்றாலும் ஏற்ற இறக்கங்கள், ஆச்சரியக் குறி, அரைப்புள்ளி, கேள்

...போடுங்க!

விக்குறி, கமா என்று சகலத்தையும் குரலில் நெசவு செய்து வைத்துள்ள ஸ்டார் டீவி டீம்தான் கலக்கோ கலக்கு என்று கலக்கியது!

ஜெயித்த கூட்டில் வந்த அத்வானியை பிரணாய் ராயும் ராஜ்தீப் சர்தேசாயும் படுத்தி வைத்த பாடு! மனிதர் இந்த டீவி வேதாளங்களை விட பஜ்ரங்தள்ளே தேவலாம் என்ற முடிவுக்கு வந்திருந்தாலும் ஆச்சரியமில்லை!

— டெரரிஸ்ட்




## "— X —" = ?

லண்டனிலிருந்து வெளிவரும் 'ஸண்டே டெலிகிராஃப்'பில்', சோனியா காந்தி, தாம் "ஆக்டிவ் பாலிடிக்ஸி"லிருந்து கழன்று கொள்ளப் போவதாகச் சொன்னாலும் சொன்னார், மும்பையிலுள்ள காங்கிரஸ் தொண்டர்களெல்லாம் படு "ஆக்டிவ்" ஆகி விட்டார்கள். "காங்கிரஸ் மைனஸ் சோனியா காந்தி"யை வரவேற்பதாக NCP தலைவர் (பவார்) கூறியதை NCP காரர்கள் பிடித்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் "NCP மைனஸ் பவாரையே" தாங்கள் இரு கரம் நீட்டி வரவேற்பதாக எஸ்.பி. சவாண் ஆணித்தரமாகக் கூறிவிட்டார். இவருக்கு முரளி தேவ்ரா போன்ற லோக்கல் சோனியா அனுதாபிகள் ஆதரவளிக்கின்றனர். ஆனால் தொண்டர்களைப் பொறுத்த வரை, இரண்டு 'மைனஸு'ம்' சேர்ந்தால் 'ப்ளஸ்' என்ற கணக்குத்தான் கவர்ச்சியாகத் தெரிகிறது. எப்படியோ, 'ஆட்சி மைனஸ் காவிப்படை' என்பதுதான் அவர்கள் குறிக்கோள்! இப்படியே போய்க் கொண்டிருந்தால், மக்கள் வெறுத்துப் போய் "அரசு மைனஸ் அரசியல்வாதிகள்" என்ற நிலைக்கு வந்து விடுவார்கள்!

### அஞ்சாத சிங்கம் எங்க காளை...

மும்பையின் பங்கு அங்காடி ஊழல் திலகமான பெரிய காளைக்கு (அட Big Bull தாங்க; கமி காத்தடிச்சிடுச்சு..) ஒருவழியாக, மாருதி உத்யோக் 38.97 கோடி மோசடி வழக்கில் ஐந்தாண்டு சிறைவாசமும் 25 ஆயிரம் ரூபாய் அபராதமும் 'தண்டனையாக' விதிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் பளிச்சென்ற வெண்மை உடை தரித்து, தீர்ப்பைக் கேட்ட மேத்தா, சாந்தமான புன்முறுவலுடன் "நமது சட்டம் நீதி இவற்றின் மீது எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருக்கிறது" என்றிருக்கிறார். சொல்ல மாட்டாரா பின்னே? கோடிகளில் மோசடி செய்ததற்கு ஆயிரங்களில் அபராதம்; தண்டனைக் காலத்தைக் காட்டிலும் வழக்கு நடந்த காலம் (7 ஆண்டுகள்) அதிகம்; இவர் மேலுள்ள 26 வழக்குகளில் முதல் வழக்குக்கே இப்போது தான் தீர்ப்பு வழங்கப்பட்டிருக்கிறது. இன்னும் 'அப்பீல்' அது இதுவென்று ஒரு சுற்றுச் சுற்றி, தண்டனை (அப்படி ஒன்று மிஞ்சினால்) அமலாக்கப்பட எத்தனை காலமாகுமோ? மிச்சமிருக்கும் வெள்ளி விழாக் கால வழக்குகள் நடந்து, தீர்ப்பும் வழங்கப்படுமுன் இரண்டு நூற்றாண்டுகளாவது பார்க்க மாட்டோமா என்ன?

> "அல் உம்மா பிரச்னையைக் கூடச் சமாளித்து விடலாம் போலிருக்கிறது... இந்த 'உம்மா' பிரச்னையை எதிர்கொள்வது அசாத்தியமாயிருக்கிறதே?"

### 'குட்'(ஸ்).... 'குட்'(ஸ்)

1986-ல் டிப்ளமா-இன்-எலெக்ட்ரிகல் இன்ஜினீயரிங் முடித்து விட்டு, ரயில்வேயில் ஓட்டுநர் வேலைக்கு விண்ணப்பித்தபோது, சுரேகா யாதவ்வுக்கு தெரிந்திருக்கவில்லை. செலக்ட் ஆகும் 25 நபர்களில் இவர் மட்டுமே

# பெண் ஓட்டுநர்கள்!

பெண்ணாக இருக்கப் போகிறார் என்பது! கடுமையான ட்ரெயினிங்கின் போது, கை, கால், தலை எல்லாம் அடிபட்டுக் கொண்ட போதும், "எங்களால் முடியுமென்றால் உங்களால் ஏன் முடியாது?" என்று தொடர்ந்து ஊக்குவித்தவர்கள், சக ஆண் ஊழியர்கள் தானாம். இன்று, திருமணமாகி, இரண்டு குழந்தைகளுக்குத் தாயான 34 வயது சுரேகா, ஒரு முழு நேர ரயில் ஓட்டுநி!

மும்தாஜ் கதாவாலா அங்கிங்கென்று வேலைக்கு அலைந்தபோது மத்திய ரயில்வேக்கும், ஒரு விண்ணப்பத்தை போட்டு வைத்திருந்தார். 1991–ல் 'அப்ரெண்டிஸாக' சேர்ந்தவர், இன்று துப்பட்டாவை இழுத்துச் செருகிக் கொண்டு, வாக்யூம், காற்றழுத்தம் முதலியவற்றைச் சோதித்து விட்டு, சிக்னலை ஒரு கண் பார்த்துவிட்டு, ட்ரெயினை ஸ்டார்ட் செய்யும் லாகவத்தைப் பார்த்தால், ஆண் ஓட்டுநர்கள் கூட அசந்து விடுவர். 28 வயது மும்தாஜுக்கு, வீட்டில், தகுதியான மாப்பிள்ளை பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்... (மசாலா வாசகர்களுக்கு முன்னுரிமை வழங்கப்படும்).

மும்பைக்குப் பெருமைசேர்த்திருக்கும் இந்த இரண்டு பெண்களையும் "குட்", "வெரி குட்" என்றுதானே பாராட்டுகிறீர்கள்? இவர்கள் ஓட்டும் ட்ரெயினும் கூட 'குட்ஸ்' வண்டி தான்! கல்யாண் – வாடிபந்தர், பன்வேல், லோனாவாலா, ட்ராம்பே செக்‌ஷனில் வெளுத்துக் கட்டுகிறார்கள்!

## 'உம்மா' சும்மாவா?

ஒரு தாத்தாத்தனமான 'உம்மா' கொடுத்ததற்கு, நம் கிஸ்வந்த் சிங்கை... ஸாரி... குஷ்வந்த் சிங்கை பாக் பிரஸ் இந்த கிழிகிழிக்கிறதே என்று ஏற்கெனவே விசனப்பட்டுக் கிடந்தது மும்பை மீடியா. இந்த கின்னஸ்காரர்கள் வேறு நமது முத்த மகிமையை குறைவாக மதிப்பிட்டதும் நொந்தே போய் விட்டது. இரண்டு திரை முத்தங்களுக்கிடையேயான நீண்ட இடைவெளியை (ஹைறயோ.... 54 ஆண்டுகள்) அளித்ததில் பாலிவுட் உலக சாதனை புரிந்திருக்கிறதாமே? என்னே சோதனை? 1929–ல், 'பிரபஞ்சபாஷ்' படத்தில், சீதா தேவிக்கும் ஹிமான்ஷ்ராய்க்குமிடையேயான முத்தக் காட்சிக்குப் பிறகு, 1983–ல் வெளிவந்த 'பேதாப்' படத்தில்தான் (ஸன்னி தியோல் – அம்ரிதாசிங்) முத்தம் இடம்பெற்றதாக உள்ள, 'கின்னஸ் புக்'கின் மில்லினிய பதிப்புக் குறிப்பால், ஆடிப் போய் விட்டார்கள் மும்பை வாலாக்கள்.

"பிரபஞ்ச பாஷ்யத்திற்குப் பின், மூன்றே வருட இடைவெளியில், கர்மா படத்திற்காக ஹிமான் ஷ், தேவிகாராணிக்குக் கொடுத்த முத்தக் காட்சியைப் பார்த்துவிட்டு பூஜா பட்டே அரண்டிருக்கிறார் என்றால் அது கர்மமே என்று கொடுக்கப்பட்ட உம்மாவாகவா இருக்கும்? ஏதோ சுதந்திரப் போராட்டக் காலத்தில் கொஞ்சம் சுதந்திரமில்லாமல் இருந்திருக்கலாம். ஆனால் ஒரே வருடத்தில் (1978) சசிகபூர், சத்யம் சிவம் சுந்தரத்தில் ஜீனத்தையும், ஸித்தார்த்தாவில் ஸிமியையும் முத்தமிட்டு முக்தி பெற்ற வரலாறு உலகப் பிரசித்தமாயிற்றே? அதன் பிறகு 'இம்'மென்றால் 'உம்'மென்றால் உம்மா இடம் பெறாத படமேது? ரிக்கார்டு என்று பார்த்தால், ஒரே படத்தில் (பாரிஷ்) 18 முறை முத்தமிட்டதற்காக (ராகுல்ராய் – ஷீபா) அல்லவா, பாலிவுட்டிற்கு கிரீடம் சூட்டியிருக்க வேண்டும்?" என்று ஒரே புலம்பல்! அல் உம்மா பிரச்னையைக் கூடச் சமாளித்து விடலாம் போலிருக்கிறது... இந்த 'உம்மா' பிரச்னையை எதிர்கொள்வது அசாத்தியமாயிருக்கிறதே?

## தூங்காத கண் என்று ஒன்று...

'கூட்டலாமா கூட்டக் கூடாதா' என்று பெரிய போராட்டமே நடந்தது. ஒருவழியாக யூனியன்களை எல்லாம் சமாதானப்படுத்தி விட்டு, BMC இனி இரவிலும் மும்பைத் தெருக்களைக் கூட்டலாம் என்ற முடிவுக்கு வந்திருக்கிறது. "நைட் அலவன்ஸ் (இரவு 11 – காலை 5) 10 ரூபாய். பெண் ஊழியர்களுக்கு 'நைட் டூட்டி' கிடையாது; பிரதான வீதிகளைச் சுத்தப்படுத்தினால் போதும்" இதுதான் பரிசோதனைக் கட்ட சட்டதிட்டம். நவராத்திரி சீசன் வருகிறது. ஆட்டமும் பாட்டமுமாகக் கூட்டுபவர்களுக்கு கொண்டாட்டம்தான்!

— ஜெயஸ்ரீ ராஜ்

## நாட்டுக்கும் இலக்கியத்துக்கும்...

✉ இவ்வார கல்கியில் வந்த 'காவிரிக் கண்ணீர்!' என்ற செய்தியிலாகட்டும், 'கர்னாடக அரசின் ஆணவம்' என்ற தலையங்கத்திலாகட்டும், 'நெருப்புக் களஞ்சியமாகும் நெற்களஞ்சியம்' என்ற கட்டுரையிலாகட்டும், தக்க நேரத்தில் நடவடிக்கை எடுக்காத தமிழக அரசையோ, காவிரி நீர் பற்றாக் குறை பற்றி தமிழக விவசாயிகள் முறையீடு ஏதும் பண்ணவில்லை, புகார் ஏதும் அனுப்பவில்லை என பொறுப்பற்ற பதிலைச் சொன்ன முதல்வர் கருணாநிதி பற்றியோ ஒரு வார்த்தை கூடக் குறை கூறாமல், தி.மு.க. மீது விசுவாசத்தைக் காட்டிய தங்களின் செய்கை கல்கி இதழின் சிறப்பான வரலாற்றில் ஏற்பட்டுள்ள ஒரு கரும்புள்ளி!

லால்குடி, எம். ராஜேந்திரன்.

**"அண்டை நாட்டு உறவு சுமுகமாக இருக்கப் பாடுபடுகிறவர்கள், அண்டை மாநில உறவுக்குப் பாடுபடக்கூடாதா?"**

✉ 'கர்நாடக அரசின் ஆணவம்' தலையங்கம் படித்தேன். வாஜ்பாய்தான் இதற்கொரு நல்ல தீர்வைக் காண வேண்டும். கர்நாடகத்தை தண்ணீர் விடச் சொல்லி உத்தரவிடும் உரிமை அவருக்கிருக்கிறது என்பதை வன்மையாக எடுத்துக் காட்டியமைக்கு நன்றி.

ஈரோடு, க. நா. இராஜேஸ்வரன்.

✉ 'காவிரிக் கண்ணீர்' கட்டுரை கண்டேன். 'காவிரிப் பிரச்னையை பெரிதுபடுத்துவதில், அரசியல் கட்சிகள் போட்டி போடுவதால், பிரச்னை மேலும் சிக்கலாகி விடுகிறது. இதனால் இங்குள்ள தமிழர்கள் சென்ற கால காவிரி கலாட்டாவை நினைத்துப் பதற்றமடைகிறார்கள். அதை அதிகப்படுத்தும்விதமாக இங்குள்ள அமைச்சர்கள் பேச்சும் அமைகிறது. "அண்டை நாட்டு உறவு சுமுகமாக இருக்கப் பாடுபடுகிறவர்கள், அண்டை மாநில உறவுக்குப் பாடுபடக் கூடாதா?"'

பெங்களூர், என். ஆர். ராஜா.

✉ தாடிக்கும் இலக்கியத்துக்கும் நெருங்கிய தொடர்பு உண்டுதான் போலும்! இலக்கியத்திலிருந்து கேள்விகள் தேர்வு செய்த அந்த சமஸ்கிருத மாணவர்கள் நால்வரும் கூட 'தாடி'யுடன்தானே இருந்தார்கள்?

இடையபட்டி, பி. வேலுச்சாமி.

✉ கும்பாபிஷேகம் பார்த்தால் கோடி புண்ணியம் என்பார்கள். அந்தப் புண்ணியத்தை புத்தமங்கலம் கோவில் கட்டுரை மூலம் எமக்களித்த கல்கிக்கு நன்றி!

குட்டலாடம்பட்டி, கே. மூர்த்தி.

✉ 'பந்தாடப்படும் கிரிக்கெட் கேப்டன்கள்' பற்றிய கட்டுரை நன்கு அலசி ஆராய்ந்து எழுதப்பட்டுள்ளது.

சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்.

✉ இந்திரா பார்த்தசாரதி அவர்களின் 'பிரதிப்புசி ராஜன்' கதை வெகு அருமை. மனித இயந்திரத்தைக் காட்டிலும் இயந்திர மனிதனே தேவலாம் என்று, அன்பையும் பரிவையும் உயர்வாக நினைக்கும் இக்கதை உள்ளத்தைத் தொட்டது.

சென்னை - 120, ஜி. கஸ்தூரி ரத்தினம்.

✉ "என் வீடு, என் வாசல், என் மக்கள், என் ரத்தம், என் இனம், என் சாதி, என் மதம் என்று ஒரு வட்டத்திற்குள்ளாகவே புழங்கப் பழகிவிட்ட நம்மிடையே சாதி, இன, மத உணர்வுக்கு அப்பாற்பட்ட ஒரு சமூகத்தை உருவாக்க, பிறக்கும் போதே அடித்தளமிட்டால் தான் இயலும் என்ற நந்தனின் 'கனவு தேசம்' சிறுகதை கருத்துச் செறிவுள்ளதாகத்தான் உள்ளது. ஆனால் சோப்புக் குமிழி படீரென்று உடைந்தாற் போன்று அந்தத் தீர்வு நம்மிடையே சாத்தியமில்லை என்று அவருக்கே தோன்றிவிட்டதால்தான் அதைக் கனவாக வெளிப்படுத்தி விட்டாரோ?

சென்னை - 78, கே. எஸ். நாராயணன்.

✉ பொது மக்களின் நலத்தைக் கருத்தில் கொண்டு சேவை மனப்பான்மையுடன் பொன்விழா ஆண்டையும் கடந்து விட்ட ஓர் அரசு நிறுவனத்தை, ஐ.எஸ்.ஐ. என்ற தீவிரவாத அமைப்புடன் ஒப்பிட்டு எழுதிய நகைச்சுவை துணுக்கை கல்கி போன்ற பத்திரிகையில் (19.9.99) பிரசுரிப்பது எங்களுக்கு மிகுந்த அதிர்ச்சியையும், மன வருத்தத்தையும் அளிக்கிறது.

சென்னை - 113,
எஸ். ரவிசங்கர்,
மக்கள் தொடர்பு அதிகாரி,
பியூரோ ஆஃப் இந்தியன் ஸ்டாண்டர்ட்ஸ்.

*(குறிப்பிட்ட நகைச்சுவைத் துணுக்கு அசியல்வாதியைத் தான் கிண்டல் செய்கிறதே தவிர, ஐ.எஸ்.ஐ. நிறுவனத்தைக் குறைகூறவில்லை. இந்த ஜோக்குக்கு ஐ.எஸ்.ஐ. நிறுவனம் ஆட்சேபம் தெரிவிப்பது நமக்கு வியப்பளிக்கிறது.*

*- ஆர்.)*

தமது ஊதியத்தில் பெரும் பகுதியை புத்தகங்கள் வாங்கிப் போடவே செலவு செய்து கொண்டிருக்கிறார் ஓர் ஆசிரியர் என்றால் நம்ப முடிகிறதா? அவர்தாம் பா. கிருஷ்ணமூர்த்தி. வயது 58. கந்தர்வக் கோட்டை, அரசினர் ஆண்கள் மேனிலைப் பள்ளியில் தலைமையாசிரியர். புதுக் கோட்டை அரசு மகளிர் கலைக் கல்லூரியில் பேராசிரியையாகப் பணிபுரியும் இவரது மனைவி திருமதி டோரதியும் இரு மகள்களும் இவருக்குப் பெரும் உதவியாய் இருக்கிறார்கள்.

இவரது தந்தை கே. வி. பாலசுப்ரமணியன், தலைமையாசிரியராகவும் மாவட்டக் கல்வி அதிகாரியாகவும் பணிபுரிந்தவர். அவர், முதன்முதலாக நூறு புத்தகங்களைத் தந்து, "நல்ல நூலகம் ஒன்றை நடத்து!" என்று சொன்னதை 'தந்தை சொல்மிக்க மந்திரமில்லை' என்று கொண்டு விட்டார் பா. கிருஷ்ணமூர்த்தி.

# புத்தகங்களே

இப்போது தமது நூலகத்தில் இருபத்தி ஐந்தாயிரம் புத்தகங்கள் இருப்பதாகக் குறிப்பிடும் இவர், அரிய புத்தகங்கள் எங்காவது இருக்கின்றன என்று தகவல் தெரிந்தால் போதும். உடனே போய் வாங்கி வந்து விடுகிறார். கோட்டையூர் ரோஜா முத்தையா, உலகம் சுற்றிய தமிழரான ஏ.கே. செட்டியார் போன்றோர் புத்தகங்கள் சேர்ப்பதில் தமக்குப் பெரிதும் உதவியதை நன்றியுடன் குறிப்பிடுகிறார்.

நூறு – நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்பாக வெளிவந்த புத்தகங்கள் மட்டும் சுமார் நானூறு இருக்கின்றன. 1842-ல் பிரசுரமான வீரமாமுனிவரின் சதுரகராதி அதில் அடக்கம்.

சங்க இலக்கியம் தொடங்கி தமிழில் வெளிவந்துள்ள வாழ்க்கை வரலாற்றுப் புத்தகங்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்று பட்டியல் நீண்டுகொண்டே போகிறது. இக்கால இலக்கியங்களான நாவல்கள், சிறுகதைகளும் உள்ளன.

சித்தவைத்தியம் சம்பந்தப்பட்ட புத்தகங்கள், சட்ட விதிகள் நுணுக்கங்கள் பற்றிய நூல்கள், பைபிள் மொழிப்பெயர்ப்புகளோடு, பைபிளைப் பற்றிய நூல்கள்; இஸ்லாம் குறித்து வெளிவந்த புத்தகங்கள்; பகவத் கீதை (காகிதத் துணியில் ஒரு பக்கத்தில் வண்ணமயமாய் பட விளக்கங்களும், எதிர்ப் பக்கத்தில் ஸ்லோகமும் நேர்த்தியாக பிரிண்ட் செய்யப்பட்டுள்ளது) ஆகியவைகளும் நூலக அலமாரிகளில் அங்கம் வகிக்கின்றன.

ஆங்கிலப் புத்தகங்கள் வரிசையில் சுவாமி விவேகானந்தர், ரமண மகரிஷி, ஓஷோ, பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பற்றிய நூல்கள், இரவீந்திரநாத் தாகூர் நூல்களோடு, தத்துவ ஞானி ஜே. கிருஷ்ணமூர்த்தியின் உரைகள் அடங்கிய புத்தகங்கள், ஸ்ரீ அரவிந்தர், ஸ்ரீசின்மயானந்தா, சிவானந்த சரஸ்வதி ஸ்வாமிகளின் நூல்கள். புத்தர் நூல்கள், சர்வபள்ளி டாக்டர் இராதா கிருஷ்ணன் புத்தகங்கள், 1950களில் கே.எம். முன்ஷியை தலைமைப் பதிப்பாளராகக் கொண்டு பிரசுரமான 'பவன்ஸ்' வெளியீடுகளின் புத்தகங்கள், தி மாடர்ன் லைப்ரரி சீரீஸ், ஆக்ஸ்ஃபோர்டு வேர்ல்ட் கிளாஸிக் சீரிஸ் புத்தகங்கள் என்று மலைத்துப் போகுமளவுக்கு இருக்கின்றன.


• கிருஷ்ணமூர்த்தி தம்பதி

மகாத்மா காந்தியைப் பற்றி இந்திய அரசின் பப்ளிகேஷன் டிவிஷன் வெளியிட்ட 55,000 பக்கங்கள் கொண்ட 100 வால்யூம்களும் நூலகத்தில் உள்ளன. 1938-ல் வெளிவந்த ஹரிஜன் ஆங்கிலப் பத்திரிகையை அப்படியே பைண்டு செய்து வைத்துள்ளார்கள்.

ஜி. பரமேஸ்வரன் பிள்ளை (1896) எழுதிய

'இந்தியாவின் புகழ்பெற்ற மனிதர்கள்' என்னும் புத்தகம் இங்கு கிடைக்காமல் போகவே சிகாகோ பல்கலைக்கழகத்தினர் அதன் இரண்டு வால்யூம்களை நகலெடுத்து அனுப்பியுள்ளனர். அதையும் பைண்டு செய்து வைத்துள்ளனர்.

தில் இவர் குடும்பம் குடியிருக்கிறது) தனியாகத் தங்குமிடம், குளியல் மற்றும் கழிவறை வசதி முதல்கொண்டு அனைத்தும் செய்து வைத்திருக்கிறார்கள். தங்கும் நூலக நேயர்களுக்கு அன்பான விருந்து உபசரிப்பும் உண்டு!

புத்தகங்கள் ஓரிடத்தில் குவிந்து கிடந்தால் மட்டும் போதுமா? அதனால் என்ன பயன்?

எம்.ஃபில்., பி.ஹெச்.டி., பட்டங்களுக்கு ஆய்வு செய்வோர் ஆராய்ச்சி தொடர்பாகத் தேவைப்படும் நூல்களை இங்கு வந்து படித்து, குறிப்பெடுத்துக் கொண்டு போகிறார்கள். இது மட்டுமா? சிகாகோ பல்கலைக் கழக நூலகர் ஜேம்ஸ் நே, பென்சில்வேனியா யுனிவர்ஸிட்டி

> **“ சிகாகோ பல்கலைக் கழக நூலகர் ஜேம்ஸ் நே, பென்சில் வேனியா யுனிவர்ஸிட்டி (பில டெல்பியா) ஆராய்ச்சியாளர் ஃப்ரீமென், மெக்ஸிகோ பல்கலைக் கழக ஆராய்ச்சி யாளர் பௌலா ரிச்மென் போன் றோர் நூலகத்திற்கு வந்திருந்து தங்கி தங்களின் ஆராய்ச்சி களுக்குப் பயன்படுத்திக் கொண்டுள்ளனர். ”**

இருபத்தி ஐந்தாயிரம் புத்தகங்கள் போதுமென்று நினைக்கவில்லை இவர். ''உங்கள் ஊரில் ஏதேனும் அரிய புத்தகங்கள் இருந்தால் தகவல் மட்டும் தாருங்கள், நான் வந்து வாங்கிக் கொள்கிறேன்!'' என்கிறார் சற்றும் குறையாத ஆர்வத்துடன்.

தமது நூலகச் சேவைக்கு இப்போதைய இடம் போதாது எனக் கருதுகிறார் பா. கிருஷ்ணமூர்த்தி. இவர்கள் வசிக்கும் வீட்டுக்கு வெகு அருகிலேயே தனிக் கட்டடத்திற்கான அடித்தளப் பணிகள் துரிதமாக நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. நூலகப் பயன்பாட்டுக்குத் தகுந்தாற்போல ஆயிரத்து ஐந்நூறு சதுர அடிப் பரப்பளவில் கட்ட

• வீட்டுக்குள் நூலகம்...

# வாழ்க்கையாக...

(பிலடெல்பியா) ஆராய்ச்சியாளர் ஃப்ரீமென், மெக்ஸிகோ பல்கலைக் கழக ஆராய்ச்சியாளர் சுமதி ராமசாமி, பௌலா ரிச்மென் போன்றோர் நூலகத்திற்கு வந்திருந்து தங்கி தங்களின் ஆராய்ச்சிகளுக்குப் பயன்படுத்திக் கொண்டுள்ளனர்.

எக்காரணம் கொண்டும் புத்தகங்கள் எதையும் வெளியில் கொண்டு செல்ல யாருக்கும் அனுமதியில்லை. புதுக்கோட்டையிலுள்ள இவரது நூலகத்தில் தங்கியிருந்து புத்தகங்களைப் படித்துப் பயன்படுத்திக் கொள்ளலாம். 1200 சதுர அடியில் அமைந்துள்ள நூலக மாடியில் (கீழ்த்தளத்

டம் கம்பீரமாய் எழப் போகிறது. இதற்கான மொத்தச் செலவு ரூபாய் ஆறு லட்சத்தை எட்டும் என்று திட்ட மதிப்பீடு சொல்கிறது.

அதெற்கெல்லாம் பணம்?

"இன்னும் சில மாதங்களில் நான் ஓய்வு பெறப் போகிறேன். அப்போது கிடைக்கும் பணத்தை முழுவதும் அதற்காகவே ஒதுக்கியுள்ளேன்" என்று சொல்லிவிட்டு மனநிறைவோடு சிரிக்கிறார் பா. கிருஷ்ணமூர்த்தி.

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு



**சென்னையின் புகழ் பெற்ற குழந்தைகள் மருத்துவமனை சைல்ட் டிரஸ்ட் ஹாஸ்பிடல். இதன் நிர்வாகத்தை, சமீபத்தில் காஞ்சி சங்கர மடம் ஏற்றுக்கொண்டிருக்கிறது. இதன் பின்னணி என்ன?**

# ஐந்து கோடி கடன் ஆஸ்பத்திரி

எல்லா வசதிகளுடனும் கூடிய நவீன மருத்துவமனை ஒன்றை, குழந்தைகள் சிகிச்சைக்காக மட்டுமே கட்டிச் சேவை செய்ய வேண்டும் என்ற கனவு கண்டார் காலம் சென்ற டாக்டர் எம்.எஸ். ராமகிருஷ்ணன். சென்னை நுங்கம்பாக்கத்தில் இந்த சைல்ட் டிரஸ்ட் ஹாஸ்பிடல் உருவானபோது, ரோட்டரி சங்கத்தினர் மிகுந்த ஈடுபாட்டோடு நிதியுதவி செய்தார்கள்.

டாக்டர் எம்.எஸ். ராமகிருஷ்ணன் காலமான பிறகு, மருத்துவமனையின் நிர்வாகத்தில் தொய்வு ஏற்பட்டது. போதுமான நிதி உதவிகள் கிடைக்கவில்லை. ஏழு - எட்டு வருடங்களாகவே இதுதான் நிலைமை. சில வருடங்களுக்கு முன், நிர்வாகம் ஐசிஐசிஐ, ஐடிபிஐ ஆகிய நிதி நிறுவனங்களிடம், விரிவாக்கத் திட்டங்களுக்காகவும், நவீன கருவிகள் வாங்கவும் சுமார் ஐந்து கோடி ரூபாய் கடனுதவியாகப் பெற்றது.

இன்றைக்கு அசலும் வட்டியுமாகச் சேர்ந்து கடன் சுமார் பதினைந்து கோடிகளாக ஆகி விட்ட பிறகு, நிதி நிறுவனங்கள் மும்பை நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்தன.

சென்னையில் உள்ள சில மருத்துவமனைகளும், வெளிநாட்டில் வாழும்

இந்தியர்களும்கூட, இந்த மருத்துவமனையைத் தங்கள் வசம் ஆக்கிக் கொள்ள முயற்சிகள் செய்தனர். அப்படி நடந்துவிட்டால் லாபம் ஒன்று மட்டுமே குறிக்கோளாகக் கொண்டு அவர்கள் செயல்படும் அபாயம் நேரிடும் என்று மருத்துவமனை நிர்வாகம் கருதியது. இந்த இக்கட்டான சூழ்நிலையில், நிர்வாகத்தினர் காஞ்சிப் பெரியவர் ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளிடம் போய் விஷயத்தை எடுத்துச் சொன்னார்கள்.

ஸ்வாமிகளின் மும்பை பக்தர்கள், இரண்டு நிதி நிறுவனங்களிடமும் நிலைமையை விளக்கி விட்டு, சுமார் 5 கோடி ரூபாய் அசல் தொகையை உடனே கொடுக்கவும், வட்டித் தொகையைத் தவணையாகக் கொடுக்கவும் தயாராக இருப்பதாகத் தெரிவித்த பிறகு, நிதி நிறுவனங்கள் இதற்குச் சம்மதம் தெரிவித்தன.

**நாம் காஞ்சி சங்கர மடத்தில் ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளைச் சந்தித்துப் பேசினோம்:**

''சங்கர மடம் இப்படி ஒரு மருத்துவமனை நிர்வாகத்தை மேற்கொள்ளத்தான் வேண்டுமா?''

''மடம் மருத்துவமனைகளை நடத்துவது ஒன்றும் புதிதல்ல. ஏற்கெனவே தாம்பரத்தில் ஹிந்து மிஷன் ஆஸ்பத்திரி நடத்தி வருகிறது. நங்கநல்லூரிலும் ஒரு மருத்துவமனை நடந்து வருகிறது. அடையாறு, திருவல்லிக்கேணி, திருவான்மியூர், பம்மல் ஆகிய இடங்களில் சேவை மனப்பான்மை உள்ள டாக்டர்களைக் கொண்டு கிளினிக்குகள் நடத்தி வருகிறது. வேலூரில் வாலண்டரி ஹெல்த் சென்டர்; கடலூரில் ஹிந்து மிஷன் ஹாஸ்பிடல் நடத்தி வருகிறோம்.

## நலிந்த பண்டிதர்களுக்கு உதவித் தொகை!

''வேத சாஸ்திரங்கள் படித்து, முதியவர்களாக ஆதரவு யாருமில்லாமல் நலிந்த நிலை



யில் இருக்கும் பண்டிதர்கள் நூறு பேருக்கு மாதம் 1000 ரூபாய் உதவித் தொகையை மடம் வழங்கி வருகிறது. இன்னும் நூறு பேருக்குக்கூட வழங்க வேண்டும் என்ற கோரிக்கை இருக்கிறது. இதையும் இந்த ஆண்டு முதல் செயல்படுத்தத் திட்டம் போட்டிருக்கிறோம்.

''தேசத்துக்குத் தொண்டு புரிகிறவர்கள் என்றும், நல்லவர்கள் என்றும், விஞ்ஞானத்துக்கும், வேத புராண சாஸ்திரங்களுக்கும், பொது நலத்துக்கும் சேவை செய்து வரும் அறிஞர்களை வருடத்துக்கு மூன்று பேராகத் தேர்ந்தெடுத்து, கௌரவித்து இரண்டு லட்ச ரூபாய் சன்மானமும் வழங்க வேண்டும் என்று தீர்மானித்திருக்கிறோம். போன வருடம்தான் ஆரம்பித்தோம். டாக்டர் சங்கர் தயாள் சர்மாவுக்கு அப்போது மரியாதை செய்தோம். இந்த வருடம், டாக்டர் ஏ.பி.ஜே. அப்துல் கலாம், நானி பல்கிவாலா, ஆன்மீக பிரசாரகர் முராரி பஸ்லே ஆகிய மூவருக்கும் அந்த கௌரவத்தை அளிக்கத் தீர்மானித்திருக்கிறோம். இது எல்லா வருடங்களிலும் இனி தொடரும்.''

— ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள்

விழுப்புரத்தில் ஜெய ஜெய சங்கர மருத்துவ மனை- 20 படுக்கைகள் கொண்ட, ஆப ரேஷன் தியேட்டர் வசதிகள் கொண்ட மருத்துவமனை நடத்துகிறோம். இது மகா பெரியவர்கள் பிறந்த ஊர். அதனால் எல்லா வசதிகளும் கொண்ட ஆஸ்பத்திரியாக இதை நடத்தி வருகிறோம். கும்பகோணத்தில் ஹிந்து மிஷன் ஆஸ்பத்திரி; பட்டுக்கோட் டையில் ஹோமியோபதி சென்டர்; திருச்சி யில் ஹிந்து மிஷன் ஆஸ்பத்திரி; மதுரை வைகைக் கரையில், திருநெல்வேலி டவுனில், தூத்துக்குடியில், கோயமுத்தூரில், கோழிக் கோட்டில், திருவனந்தபுரத்தில் என்று எல்லா ஊர்களிலும் மருத்துவமனைகள் நடத்தி வருகிறோம். மைசூரில் கபிலாநதி அருகே ஆதிவாசிகளுக்காகவே ஒரு ஹெல்த் சென்டர் நடத்தி வருகிறோம். பத்ரிநாத் போகிற வழியில், ருத்ர பிரயாகிலிருந்து 10 கி.மீ தூரத்திலுள்ள நதோடா என்ற இடத்தில் பள்ளிக்கூடமும், மருத்துவ மனையும் நடத்தி வருகிறோம்.

"நாட்டின் வடகிழக்குப் பகுதியிலிருந்து ஆயிரக்கணக்கான பேர் கண் சிகிச்சைக்காக இங்கு சிரமப்பட்டு வருவதை அறிந்து, கௌ ஹாத்தியில் ஸ்ரீ சங்கர தேவ் நேத்ராலயா அமைத்திருக்கிறோம். நம்முடைய ஞான சம்பந்தர், அப்பர் போன்ற ஞானி அங்கே ஸ்ரீசங்கர தேவ். அங்கே கட்டடமும், நிலமும் கொடுத்தார்கள். மூன்று கோடி ரூபாய் கடன் பெற்று மருத்துவமனையை உருவாக்கி நடத்தி வருகிறோம். நன்கொடைகள் மூலமே கடன்களை அடைத்தும் விட்டோம். இப் போது வடகிழக்கு அபிவிருத்தி திட்டத்தில் நாலரைக் கோடி ரூபாய் இதற்காக ஒதுக்கி யிருக்கிறார்கள். இதில் இரண்டரைக் கோடி ரூபாய் வந்துவிட்டது. அசாம் அரசு 50 ஏக் கர் நிலமும் கொடுத்துவிட்டது. ஆறு கோடி செலவில் மருத்துவமனை விரிவாக்கப் பட்டுக் கொண்டிருக்கிறது. இனி கிழக்கு வடகிழக்குப் பகுதி மக்கள் பணம் செல வழித்துக்கொண்டு, இவ்வளவு தூரம் இங்கே வர அவசியம் இல்லை!"

*"மிஷனரிகள் கல்வி – மருத்துவமனைகள் மூலம் சேவை செய்வது போல மடமும் செய்ய உத்தேசமா?"*

"அப்படி அல்ல. அவர்கள் நல்ல காரி யங்கள் செய்து வருகிறார்கள். நாமும் செய் யலாமே? இதில் போட்டி ஏதும் இல்லை. மக்களுக்குத் தேவையான உதவிகளை மடம் அவ்வப்போது செய்து கொண்டுதான் வருகிறது. ஆனால் அமைதியாக. விளம்பரம் ஏதும் கிடையாது. இங்கே காஞ்சிபுரத் திலேயே அறிஞர் அண்ணா புற்றுநோய் மருத்துவமனையில், நோய் முழுதும் குண மாகாத நிலையில் சிகிச்சையும் தொடர்ந்து பெற முடியாமல், வீட்டுக்கும் போக முடி யாத நிலையில் உள்ள டெர்மினல் பேஷண்ட்டுகள் தங்கியிருக்க, பத்து லட்ச ரூபாய் செலவில் இடம் கட்டிக் கொடுத் திருக்கிறோம். இன்னொரு இடமும் தேவைப் படுகிறது என்றார்கள். அதற்கும் பத்து லட்ச ரூபாய் ஆகும். அரசு பொது மருத்துவமனை யிலேயே குளிர்சாதனப் பெட்டிகள் தேவைப்படுகிறது என்று கேள்விப்பட்ட வுடன் ஏர்கண்டிஷனர்கள் வாங்கிக் கொடுத்திருக்கிறோம். நோயாளிகள் தங்கி இருந்து ஆலோசனை பெற நிழல் கொட் டகை கட்டிக் கொடுத்திருக்கிறோம். நிறைய பள்ளிக்கூடங்கள் மூலம் கல்வி கற்பிக் கிறோம். கொடைக்கானலில் நம் பள்ளிதான் ஏ.ஒன். தெரியுமோ?"

*"ஆன்மீகத்திலிருந்து விலகி, மருத்துவ மனைகள் – நிர்வாகம் என்று மடம் சுமை சேர்த்துக் கொள்ளலாமா?"*

"ஆன்மீகப் பணிகள் நடந்து கொண்டு தானே இருக்கின்றன! மருத்துவமனைகள் – கல்விக்கூடங்கள் எல்லாவற்றையும் திறம்பட நடத்த, தகுதியானவர்களை அந்தந்த இடத் தில் நியமிக்கிறோம். ஏதாவது பிரச்னை, சிக்கல் என்று வந்தால் நம்மிடம் சொல்லி ஆலோசனை கேட்பார்கள். சிரமம் வந்தால் உதவி கேட்பார்கள். அதை நிவர்த்தி செய்து

**கல்கி**

**'இவர் டைப் அடிப்பார், பாடம் நடத்துவார், செஸ் ஆடுவார்... இதெல்லாம் பெரிய விஷயமா? ஆமாம்!' என்ற தலைப்பில் 7.2.99 கல்கி இதழில் மேலூரில் வேலை பார்க்கும் ஆங்கில ஆசிரியர் பாண்டியராஜன் பற்றிய செய்தி வெளியாகியிருந்தது. அதைப் படித்தார் காரைக்குடியில் அச்சக வேலை பார்த்து வரும் மீனாட்சி. இவருக்கு பாண்டியராஜனின் தன்னம்பிக்கை பிடித்துப் போக, வரும் நவம்பர் 19-ம் தேதி பாண்டிய ராஜனை கைபிடிக்கப் போகிறார்!**


பாண்டியராஜன்

***மீனாட்சியின் உறவினர்கள், கூடமாட வேலை பார்ப்பவர்கள் எல்லாம் 'பார்வை இல்***

# நிச்சயித்த கல்யாணம்!



• மீனாட்சி

லாதவரைத் திருமணம் செய்து கொள்ளாதே... நன்றாக யோசித்துக் கொள்' என்றெல்லாம் ஆலோசனை சொன்ன போதிலும் மீனாட்சி பின்வாங்கிவிடவில்லை. ''பிறவிக் குருடராக இருந்தால் பரிதாபம்தான் வரும். ஆனால் பாண்டிய ராஜன் பாதியில் பார்வை யிழந்தவர். பார்வையில்லாவிட்டாலும் பார்வை உள்ளவர்களால் கூட செய்ய முடியாத பல வேலைகளை நடைமுறை வாழ்க்கையில் செய்து வருபவர். எனவேதான் நான் அவரைத் திருமணம் செய்து கொள்ள மனமார சம்மதித்தேன்!'' என்று சொல்லும் மீனாட்சிக்கு வயது 26. ஐ.டி.ஐ.யில் பிரிண்டிங் டெக்னாலஜி படித்து முடித்துள்ளார்.

''உங்கள் 'வருங்காலக் கணவர்' ஏதாவது கோரிக்கை வைத்தாரா?'' என்றதும் சற்றும் தாமதியாமல் விக்கிரமாதித்தன் போல மீனாட்சி சொன்னது, ''நான் இப்போது பார்வையற்றவர்களுக்குச் செய்து வரும் சமூகப் பணிகளுக்கு எந்தவிதத்திலும் தடைவிதிக்கக் கூடாது' என்றார். நான் மட்டும் 'என் வழி தனி வழி' என்றா சொல்லுவேன்? அவர் வழிதானே என் வழியும்!'' என்றார்.

பாண்டியராஜனிடம் கேட்டபோது, ''கல்கி நூற்றாண்டு விழாவில் எனக்குக் கிடைத்த பரிசு மீனாட்சி!'' என்றார்.

— பழ. சேதுராமன்

கொடுக்கிறோம்."

"சைல்ட் டிரஸ்ட் ஹாஸ்பிடலை நிர்வகிக்க, வி. சங்கர் என்பவரை நியமித்திருக்கிறீர்களாமே? அவர் பற்றி..."

"சங்கர் பம்பாய்க்காரர். தமிழர். மருந்து கம்பெனி நடத்தி வருகிறார். தொண்டு உள்ளம் கொண்டவர். பம்பாயிலேயே சந்திரசேகரபுரம் என்ற இடம் உருவாக்கி, ஹைஸ்கூல், காலேஜ், வேத பாடசாலை, கோசாலை எல்லாம் சிறப்பாக நடத்தி வருகிறார். நல்ல நிர்வாகி. அவருக்கு உதவியாக டெக்கான் மூர்த்தி, என்டர் பிரைசிங் என்டர் பிரைசஸ் பத்ரி, ஏ.சி. முத்தையா, டி.ஐ. - முருகப்பா குரூப் வள்ளியம்மா ஆச்சி, டாக்டர் ஸ்ரீதர், ஆடிட்டர் சுப்பிரமணியம், பி.எஸ். இண்டஸ்ட்ரீஸ் சீனிவாசன், ஸ்ரீமடத்தின் பிரதிநிதியாக சுந்தரேசன் இவர்கள் இருப்பார்கள். வாரா வாரம் ரிப்போர்ட் தருவார்கள். முன்பு போலவே ரோட்டரி கிளப்பைச் சேர்ந்தவர்களும் உதவி செய்வார்கள். ரோட்டரி சங்கத்தினர் செய்கிற பொது நலச் சேவையைப் பாராட்டத்தான் வேண்டும்... இந்த அக்டோபர் 2ஆம் தேதி சைல்ட் டிரஸ்ட் ஹாஸ்பிடலில் ஓர் இலவச மெடிகல் காம்ப் நடத்தப் பட்டது. எல்லா ஸ்பெஷலிஸ்ட் டாக்டர்களையும் உதவும்படி கேட்டுக் கொண்டிருக்கிறேன். ஹார்ட், கிட்னி, நரம்பு ஸ்பெஷலிஸ்ட்டுகள் இருப்பார்கள்... சைல்ட் டிரஸ்ட்டில் ஸி.டி. ஸ்கான் இல்லை. வசதி உள்ளவர்கள் வெளியே போய் எடுத்துக்கொண்டு வந்து விடுவார்கள். ஏழை பாழைகள் என்ன செய்வார்கள். அநேகமாக அடுத்த மாதம் ஸி.டி. ஸ்கான் வந்து விடும்."

''ஐந்து கோடி ரூபாய்க் கடன், எப்படி பதினைந்து கோடி ரூபாய் வரை பூதாகாரமாக உருவெடுக்க அனுமதித்தார்கள்? நீங்கள் கேட்டிருப்பீர்களே?"

''மாதா மாதம் கொடுக்கப்படும் தொகையை, அசலில் கணக்கு வைத்துக் கொண்டு, படிப்படியாகக் குறைத்துக் கொண்டு வரும்படிதான் சைல்ட் டிரஸ்ட் ஐடிபிஐ, ஐசிஐசிஐயிடம் ஆரம்பத்தில் கேட்டுக் கொண்டிருக்கிறது. ஆனால் அவர்கள் அதை வட்டிக் கணக்கில் வரவு வைத்துக் கொள்ளுவதாகச் சொல்லியிருக்கிறார்கள்! அதனால் அசல் அப்படியே இருக்க, வட்டி சேர்ந்து கொண்டே போய் விட்டது. இப்போது அசல் முழுவதையும் கொடுத்து விட்டோம். வட்டித் தொகையை ஒரு வருடத்துக்குத் தவணை முறையில் கொடுக்க ஏற்பாடு செய்திருக்கிறோம். இதை முன்பே இரண்டு நிதி நிறுவனங்களும் ஒப்புக் கொண்டிருந்தால் இத்தனை வட்டிச் சுமை ஏறியிருக்காது... ஆனால் ஒரு நல்ல குழந்தைகள் மருத்துவமனை, இவ்வளவு வளர்ந்து விட்ட பிறகு, அதை அழிய விடுவது நல்லதல்ல என்ற நோக்கத்தில்தான் சைல்ட் டிரஸ்ட் ஹாஸ்பிடல் நிர்வாகத்தை மேற்கொண்டோம். இனி எல்லாம் நல்லபடி நடக்கும் என்று நம்புகிறோம்."

சந்திப்பு: **சாருகேசி**

எனக்கு அது மட்டும் சுத்தமாகப் புரியவில்லை.

கொஞ்ச காலமாகவே எல்லோருமே சொல்கிறார்கள், என்னைப் பார்த்து.

"டேய், நீ என்ன சின்னப் பையனா இன்னமும்? பெரியவனாயிட்டே! இப்படியெல்லாம் பண்ணக் கூடாது."

"பெரியவனாயிட்டே."

நான் கண்ணாடி முன்பு நின்று நிதானித்து என்னைப் பார்த்துக் கொண்டேன்.

அதே மூஞ்சிதான். முழு பிம்பத்தையும் வஞ்சனையில்லாமல் காண்பித்தது. அதே அரை டிராயர், கையில்லாத பனியன், நோஞ்சான் உடம்பு, சீப்புக்கு அடங்காத கோரைத் தலைமுடி... நான் எங்கே பெரியவனாகி விட்டேன்?

மிரட்டும் கணக்குப் பாடம் போல மண்டைக்குள் குடைந்தது.

எட்டாவது வகுப்பிலிருந்து, ஒன்பதாவது வகுப்புக்கு வந்து விட்டால், பெரியவனாகி விடுவேனா?

ஊருக்கு வடக்குப்புறமிருக்கும் பம்பு செட் கிணற்றில் அடிவயிறு சிலீரிட மேலிருந்து, கீழே குதித்து, மூச்சடக்கி ஆழமாய்ச் சென்று, மூச்சுத் திணறலுடன் தண்ணீருக்கு மேலே வந்து, வாய் வழியே ஹா, ஹா என்று காற்றுக்குப் பறந்து... அதே போலத்தானே இருக்கிறேன்!?

கிட்டிப்புள் விளையாட்டில் பக்கத்துத் தெரு சுப்புணி அடிக்கும் 'புள்'ளை பிடிக்க முயன்று, வழக்கம் போல தோற்றுப் போய், சுப்புணியின் கெக்கலிப்புச் சிரிப்புக்கு முன் தலை குனிந்து... மாறவேயில்லையே நான்?!

வகுப்பில் வாத்தியார் பாடம் நடத்தும் போது அவரின் மூக்கைத் தடவும் மேனரிசத்தில் அவரின் நுனி மூக்கு சிவந்து போவதைக் கண்டு, அடக்க முடியாமல் சிரித்து... போன வாரம் கூட 'கெட் அவுட் ஆஃப் தி கிளாஸ்' தண்டனைக்கு ஆளானேனே!?

கிருஷ்ணா



எங்கை சிவக்க, தாம்புக் கயிற்றை இழுத்து, வாளி நிறையத் தண்ணீரை தலையில் விட்டுக் கொள்வதென்றால் எனக்குக் கொள்ளை ஆசை!

எங்கள் வீட்டு வாளி, எங்கள் வீட்டு தாம்புக் கயிறுதானே! மாமி எதற்கு முறைக்க வேண்டும்? அவர்கள் வீட்டுக் கயிறா தேய்ந்து, அறுந்து போக? தலையைத் துவட்டியபடி வீட்டுக்குள்ளே நுழைந்தேன்.

''டேய், இனிமே இப்படி ஜட்டியோடு குளிக்காதேடா'' என்றாள் அம்மா. அருகில் மாமி.

"ஏம்மா? ஏன் குளிக்கக் கூடாது? என்ன தப்பாம்?''

''இப்படித்தான் மாமி வெகுளியாய் இருக்கான். எங்க வம்சத்தைக் கொண்டிருக்கிறதுனாலே, நெடுநெடுன்னு வளர்த்தி, மத்த

> "அப்பா மீதும் அவர் வாங்கித் தந்த கைலி மீதும் எரிச்சல் வந்தது. இங்குதான் இப்படியென்றால் ஸ்கூலில் பையன்களும் கூட வெறுப்பேற்றுகிறார்கள்."

படி குழந்தைதான் போங்க.''

அம்மாவின் குரலில் பெருமை ஜொலித்தது. எனக்கும் கூட மனசுக்குள் பெருமிதம்.

''போடா, போய் நல்லா தலையைத் துவட்டு. நீ பெரியவனாயிட்டே. இனிமே துண்டு கட்டிக்கிட்டு குளி. புரியுதா?''

மாமி உரிமையுடன் அதட்ட, குழம்பியபடி உள்ளே சென்றேன்.

இது என்ன மாமியும் இப்படிச் சொல்கிறாள்.

ஆனால் அடுத்த இரண்டு நாட்களில் என் குழப்பத்தை அம்மா இன்னும் அதிகமாக்கினாள்.

ஆற்றங்கரைக்குக் குளிக்கப் புறப்பட்டவள் கைநிறைய அழுக்கு மூட்டை. யதேச்சையாகப் பார்த்தேன். சோப்பை விட்டு விட்டுப் போய் விட்டாள்.

ஹால் மேசை மேல் பரிதாபமாய்க் கிடந்த சோப்புடன் ஆற்றங்கரைக்கு ஓடினேன்.

சோப்பு இல்லாமல் அம்மா எப்படி துணி துவைப்பாள். பாவம்! மாங்கு, மாங்

நான் எங்கே, எப்படி, எப்போது பெரியவனானேன்?

பத்து நாள் முன்பு பக்கத்து போர்ஷன் மாமி நான் கிணற்றடியில் குளித்துக் கொண்டிருந்த போது என்னை மஞ்சுவிரட்டுக் காளையின் முறைப்பாய் பார்த்துவிட்டு, என் வீட்டுக்குள் போனது ஞாபகம் வந்தது.

எட்டுக் குடித்தனங்கள் கொண்ட ஸ்டோர் குடியிருப்பு எங்களுடையது. அனைவருக்கும் பொதுவான கிணற்றடி.

ராட்டினம் கடகடவென உருள, உள்

கென்று பெரிய உடம்பைத் தூக்கிக் கொண்டு மறுபடியும் வீட்டுக்கும், ஆத்தங்கரைக்கும் அவள் நடக்க வேண்டும். நான் இருக்கும் போது அம்மாவுக்கு எதற்கு அலைச்சல்?

படித்துறையின் படிகளில் தடதடவென இறங்கினேன்.

"அம்மா, சோப்பு".

ஓடி வந்ததில் மூச்சு வாங்கியது. பொறுப்பாய் சோப்பை எடுத்துக் கொண்டு வந்ததற்கு அம்மாவின் பாராட்டை எதிர்பார்த்து நின்றேன்.

"டேய், இனிமே நீ இங்கேயெல்லாம் வரக்கூடாது இப்படி" என்றாள் படபடப்பாய்.

"ஏம்மா?" என்றேன் ஏமாற்றமாய்.

"இது பொம்பளை படித்துறைடா

"அதனாலே என்னம்மா?

என் கேள்வியால் அருகிலிருந்த பெண்கள் குபீர் எனச் சிரித்ததைப் புரியாமல் பார்த்தேன்.

"மசாடு, போடா முதல்ல. பெரியவனா வளர்ந்துட்டானே தவிர, இப்படி ரெண்டுங் கெட்டானா— ச்சு, போடான்னா."

திரும்பித் திரும்பிப் பார்த்தபடி நடந்தேன்.

இரண்டு நாள் முன்புதான் மாமியிடம், 'குழந்தை' என்றாள் என்னைப் பற்றி. இப்போது 'நீ பெரியவன்' என்கிறாளே!

இந்த அம்மா இப்படியென்றால், அப்பாவும் சேர்ந்து அல்லவா படுத்துகிறார்.

திடீரென நேற்று இரண்டு கைலிகளை வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தார்.

"ஹேப்பி பர்த்டே கண்ணா"

என் கையைப் பற்றி இழுத்து நெஞ்சோடு அணைத்துக் கொண்டார்.

"என்னப்பா டிராயர்தானே வழக்கமாய் வாங்கித் தருவே. இது என்ன புதுசாய் கைலி?" என்றேன்.

என்னைப் பார்த்துச் சிரித்தார்.

"டிராயர் உனக்கு அசிங்கமாய் இருக்குடா. பெரியவனாயிட்டியே. தொடையெல்லாம் தெரியுது பாரு. அடுத்த வருஷத்துலேயிருந்து ஸ்கூலுக்கு 'பேண்ட்டு'தான் என்ன?"

'பேண்ட்'டா? மனசுக்குள் சந்தோஷம் குமிழியிட்டது. ஆனால் கைலிதான் படுத்தியது.

டிராயர் என்றால் அதுபாட்டுக்கு இடுப்பில் கிடக்கும். கைலியை இடுப்பில் கட்டி அவிழாமல் நிறுத்தி வைப்பதற்குள் தாவு தீர்ந்து விடும். நினைத்தபோது ஓட முடியாது. சுவர், மரம் ஏற முடியாது. ப்ச், எவன் கேட்டான் இதை? நான் எங்கே பெரியவனாகி விட்டேன் இதைப் போய் உடுத்திக் கொள்ள?

அப்பா மீதும், அவர் வாங்கித் தந்த கைலி மீதும் எரிச்சல் வந்தது.

இங்குதான் இப்படியென்றால் ஸ்கூலில் பையன்களும் கூட வெறுப்பேற்றுகிறார்கள்.

அந்த முத்தையா எப்போதுமே கொஞ்சம் அடாவடி. ஒவ்வொரு வகுப்பிலும் பெயிலாகி, பெயிலாகி திக்கித் திணறி ஒன்பதாவது வந்து விட்டான் இப்போது.

ஏதாவது சொல்லிவிட்டு குறும்பாய் சிரிப்பான். அவனுக்கு ஜால்ராவாய் சுமன்று, நாலு பேர்.

"இதுலே என்னடா இருக்கு சிரிக்கவும், ரசிக்கவும்?"

புரியாமல் கேட்டால் கன்னிமிட்டிச் சிரிப்பார்கள்.

"ஏய், நடிக்காதேடா! ஒண்ணுந்தெரியாத பாப்பா, உன்னே போட்டுக்கிட்டாளாம் தாழ்ப்பாள்" என்று சொல்லி கோரசாய் சிரிப்பார்கள்.

ப்ச், எல்லோருக்குமே ஏதோ கிறுக்குப் பிடித்திருக்கிறது.

கவனத்தை பாடத்தில் செலுத்தினேன். நாளைக்குக் கணக்குப் பரீட்சை. வழக்கம் போல சண்டிக்குதிரையாய்ப் படுத்தியது.

எதிர் வீட்டு வித்யா அக்கா கணக்கில் புலி. காலேஜில் படிக்கிறாள்.

உரிமையுடன் எதிர் வீட்டில் நுழைந்தேன்.

"எங்கே யாரையுமே காணோம்?"

கொல்லைப்பக்கம் நடந்தேன்.

என் கால்கள் தாமாகவே நின்றன.

வித்யா அக்காவும், அடுத்த வீட்டு பாலு அண்ணாவும் காம்பவுண்ட் சுவருக்கு இந்தப் பக்கமும், அந்தப் பக்கமுமாய் நின்றபடி, ஒருவரையொருவர் பார்த்தபடி இருந்தனர். ஆடவில்லை. அசையவில்லை!

இருவர் முகங்களிலும் 'ஆயிரம் கோடி சூரியப் பிரகாசம்' என்று தமிழ்ப் பாடலில் வருமே, அதுபோன்ற ஒளி.

வித்யா அக்காவின் முகம்தான் நான் நின்ற இடத்திலிருந்து நன்றாய்த் தெரிந்தது.

அக்காவின் கண்களில் தெரிந்த ஏதோ ஒன்று எனக்குள் ஊடுருவி, ஊடுருவிப் போய் எதையோ உடைத்தது போலிருந்தது.

சப்தம் போடாமல் திரும்பி விட்டேன்

ஆனால் எனக்குள் ஏதோ அதிர்ந்து கொண்டிருப்பது புரிந்தது.

மனசுக்குள் ஏக்கம் கலந்த பரபரப்பு பரவி எனக்குள் ஒன்றை உணர்த்தியது.

ஆம்! நான் பெரியவனாகி விட்டேன்! ●

# பொன்னியின் செல்வன்



நாற்பத்து மூன்றாம் அத்தியாயம்

## நந்தி மண்டபம்

மறு நாள் பிற்பகல் மீண்டும் பெரிய பிக்ஷு பொன்னியின் செல்வனைப் பார்ப்பதற்கு வந்தார். அவரிடம் பல கேள்விகள் கேட்பதற்கு இளவரசன் துடித்துக் கொண்டிருந்தான். சின்ன பிக்ஷுவிடம் அவன் கேள்வி கேட்டு விவரம் அறிந்து கொள்ளச் செய்த முயற்சிகள் பலிக்கவில்லை. "ஐயா! எல்லாம் குருதேவர் தெரிவிப்பார்" என்ற ஒரே வித மறுமொழிதான் திரும்பத் திரும்ப வந்தது.

குருதேவர் வந்ததும், "இளவரசே! இப்போது உடம்பு எப்படி இருக்கிறது?" என்று கேட்டார்.

"ஐயா! உடம்பு என்னை மிகவும் தொந்தரவு படுத்துகிறது. 'எதற்காகச் சோம்பிப் படுத்திருக்கிறாய்? எழுந்து ஓடு! குதிரை மேல் ஏறு! நதியில் குதித்து நீந்து! யானையுடன் சண்டை போடு! வெறுமனே படுத்திராதே!' என்கிறது வயிறும் வெகு கறுகறுப்பாயிருக்கிறது சின்ன பிக்ஷு கொண்டு வந்து கொடுத்த உணவெல்லாம் போதவில்லை. ஆசசாரியரே! இத்தனை நாள் நான் கடும கரம் பிடித்து நினைவு தவறியிருந்தேன என்பதையே நம்ப முடியவில்லை. தங்களுடைய மருந்து அவ்வளவு அற்புதமான வேலை செய்திருக்கிறது!" என்று சொன்னான் பொன்னியின் செல்வன்.

"ஐயா! உடம்பின் பேச்சை ரொம்பவும் நம்பி விடக்கூடாது.

சுரம் தெளிந்ததும் அப்படித்தான் இருக்கும். கொஞ்சம் அசட்டையாயிருந்து, இரண்டாந் தடவை சுரம் வந்து விட்டால், உயிருக்கே ஆபத்தாகப் போய் விடும்!''

"குருதேவரே! என்னுடைய உயிருக்கு வரக் கூடிய ஆபத்தைப் பற்றி நான் அவ்வளவாகப் பயப்படவில்லை...''

''தாங்கள் கவலைப்படவில்லை; சரிதான்! ஆனால் இந்தச் சோழ நாட்டில் உள்ள கோடி கோடி மக்கள் சென்ற நாலைந்து தினங்களாக எவ்வளவு கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள், தெரியுமா? நாடு நகரங்கள் எல்லாம் அல்லோல கல்லோலப் படுகின்றன. சின்னஞ் சிறு குழந்தைகள் முதல் வயோதிகர்கள் வரையில் கண்ணீர் விடுகிறார்கள்...''

"ஐயா! தாங்கள் சொல்வது ஒன்றும் எனக்கு விளங்கவில்லை. ஜனங்கள் ஏதற்காக அவ்வளவு வருத்தப் பட வேண்டும்? ஒருவேளை நான் இந்தச் சுரம் குணமாகிப் பிழைக்க மாட்டேன் என்ற எண்ணத்தினாலா? சூடாமணி விஹாரத்தில் தாங்கள் எனக்குச் சிகிச்சை செய்து வருகிறீர்கள் என்று தெரிந்திருக்கும்போது ஜனங்கள் ஏன் கவலைப்பட வேண்டும்?''

"இளவரசே! தங்களுக்குச் சுரம் என்பதும், தாங்கள் சூடாமணி விஹாரத்தில் இருந்து வருவதும் ஜனங்களுக்குத் தெரியாது. இந்த நகரத்தின் மாந்தர்களுக்கு அது தெரிந்திருந்தால், இந்த விஹாரத்தில் இவ்வளவு அமைதி குடி கொண்டிருக்குமா? மதில் சுவர்களையெல்லாம் இடித்துத் தகர்த்துக்கொண்டு அத்தனை ஜனங்களும் தங்களைப் பார்க்க இங்கு வந்திருக்க மாட்டார்களா? அன்று காலையில் தாங்கள் கடலில் மூழ்கி விட்ட தாகச் செய்தி வந்த போது இந்த நகரின் மாந்தர் எழுப்பிய ஓலத்தையும் பிரலாபத்தையும் தாங்கள் கேட்டிருந்தால்... ஏன்? இந்த விஹாரத்துக்குள்ளேயே அன்று காலை கண்ணீர் விட்டுக் கதறாதவர் யாரும் இல்லையே?''

பொன்னியின் செல்வர் கட்டிலில் எழுந்து உட்கார்ந்து, ''குருதேவரே! இது என்ன சொல்கிறீர்கள்? நான் கடலில் முழுகி விட்டதாகச் செய்தி வந்ததா? எப்போது வந்தது? யார் அத்தகைய பயங்கரச் செய்தியைக் கொண்டு வந்தது? எதற்காக?'' என்று கேட்டார்.

"யார் கொண்டு வந்தார்களோ, தெரியாது! ஒருநாள் காலையில் அந்தச் செய்தி இந்த நகரமெங்கும் பரவிவிட்டது. தங்களை இலங்கையிலிருந்து கோடிக்கரைக்கு ஏற்றி வந்த கப்பல் சுழல் காற்றில் அகப்பட்டு முழுகி விட்டதாக ஜனங்கள் பேசிக்கொண்டார்கள். கோடிக்கரையோரமாக தனாதிகாரி பழுவேட்டரையர் தங்களை எவ்வளவோ தேடியும் தங்கள் உடல்கூட அகப்படவில்லையென்றும், ஆகையால் கடலில் முழுகிப் போயிருக்க வேண்டும் என்றும் பராபரியாகச் செய்தி பரவிவிட்டது. அதைக் கேட்டு விட்டு நான்கூட இந்த விஹாரத்தின் வாசலில் நின்று வருத்தப்பட்டுக் கொண்டிருந்தேன். அப்போது இன்னொரு பிக்ஷு வந்து, நோயாளியை ஏற்றிக்கொண்டு ஒரு படகு

அமரர் கல்கி

விஹாரத்தின் பின்புறத்துக் கால்வாயில் வந்திருப்பதாகத் தெரிவித்தார். நான் உடனே வந்து பார்த்தபோது படகில் உள்ள நோயாளி தாங்கள்தான் என்பதைக் கண்டேன். பிறகு, மூன்று நாளாகச் சிகிச்சை செய்து வந்தோம். நேற்றுத்தான் தங்களுக்கு நினைவு வந்தது.

"ஆச்சாரியரே! என்னைப் படகில் ஏற்றிக்கொண்டு வந்தது யார், சொல்ல முடியுமா!"

"ஒரு இளைஞனும் ஒரு யுவதியும் படகு தள்ளிக்கொண்டு வந்தார்கள்."

"ஆம், ஆம்; எனக்குக்கூடக் கனவில் கண்டது போல் நினைவுக்கு வருகிறது. அந்த இளைஞனும் யுவதியும், யார் என்று தெரியுமா? இளைஞன் வாணர் குலத்து வந்தியத்தேவனா?"

"இல்லை, ஐயா! அவன் பெயர் சேந்தன் அமுதன் என்று சொன்னான். சிவ பக்தி மிக்கவன் என்று தோன்றியது. பெண்ணின் பெயரை நான் அறிந்து கொள்ளவில்லையே. தேக திடமும் மனோவலியும் வாய்ந்தவள்..."

"அவள் யார் என்று நான் ஊகிக்க முடியும். ஓடக்காரப் பூங்குழலி; தியாக விடங்கரின் மகள். அவர்கள் என்னை எதற்காக இங்கே அழைத்து வந்தார்கள் என்று சொல்லவில்லையா?"

"இல்லை, இளவரசே! நான் அவர்களிடம் அதைப் பற்றிக் கேட்கவும் இல்லை."

"நான் இங்கு பத்திரமாயிருக்கிறேன் என்று தாங்கள் யாருக்கும் தெரியப்படுத்தவில்லையா?"

"இல்லை, ஐயா! யாருக்கும் சொல்ல வேண்டாம் என்று தங்களை அழைத்து வந்தவர்கள் சொன்னார்கள். தங்கள் உடல் நிலையை முன்னிட்டுச் சொல்லாமலிருப்பதே நல்லது என்று நானும் எண்ணினேன்."

"ஆச்சாரியரே! இதில் ஏதோ சூழ்ச்சி நடந்திருக்கிறது. என்னைச் சிறைப்படுத்திக் கொண்டு வரும்படி என் தந்தை – மும்முடிச் சோழ மகாராஜா – கட்டளையிட்டிருந்தார். அதற்கிணங்கவே நான் இலங்கையிலிருந்து புறப்பட்டேன். நடுவில் ஏதேதோ சம்பவங்கள் நிகழ்ந்து விட்டன. சக்கரவர்த்தியின் கட்டளைக்கு விரோதமாக நான் நடந்தேன் என்று குற்றம் சாட்டுவதற்காக இந்தச் சூழ்ச்சி நடந்திருப்பதாகத் தோன்றுகிறது. நான் கடலில் முழுகி இறந்து விட்டதாகவும் கதை கட்டி விட்டிருக்கிறார்கள். குருதேவரே! என்னைத் தாங்கள் இந்தச் சூடாமணி விஹாரத்தில் ஏற்றுக்கொண்டதே இராஜத் துரோகமான காரியம். மேலும் வைத்திருப்பது பெருங் குற்றமாகும். உடனே என்னைத் தஞ்சாவூருக்கு அனுப்பி விடுங்கள்..."

"இளவரசே! தங்களுக்கு இடங் கொடுத்ததற்காக எனக்கு இராஜ தண்டனை கிடைப்பதாயிருந்தால் அதைக் குதூகலத்துடன் வரவேற்பேன். அதன் பொருட்டு இந்தப் புராதனமான சூடாமணி விஹாரத்தை இடித்துத் தள்ளி மண்ணோடு மண்ணாக்கி விடுவதாயிருந்தாலும் பாதகம் இல்லை..."

"தங்களுடைய பரிவைக் குறித்து மகிழ்கிறேன், குருதேவரே! ஆனாலும், என்னைக் கொண்டு வந்தவர்களிடம் ஒன்றும் விசாரியாமல் எப்படி என்னை ஏற்றுக்கொண்டீர்கள்?"

"விசாரிப்பதற்கு அவசியம் என்ன? கடும் சுரத்தோடு வந்த தங்களை வரவேற்றுச் சிகிச்சை செய்வதைக் காட்டிலும் என்னைப் போன்ற பிக்ஷுக்களுக்கு வேறு என்ன உயர்ந்த கடமை இருக்க முடியும்? மேலும், தங்களுடைய திருத்தமக்கையார், குந்தவை தேவியார், தாங்கள் இங்கு வந்து சில நாள் தங்கக்கூடும் என்று முன்னமே எனக்குத் தெரிவித்திருந்தார்கள்..."

"ஓ! அப்படியா? இளையபிராட்டியா அவ்விதம் சொல்லி அனுப்பியிருந்தார்? எப்போது?"

"தாங்கள் இங்கு வருவதற்குச் சில நாளைக்கு முன்பு. தங்களைக் கொண்டு வந்த சேந்தன் அமுதனும் இளைய பிராட்டியின் விருப்பம் என்றுதான் கூறினான்."

"குருதேவா! என்னை அழைத்து வந்



அவர்கள் இருவரும் உடனே திரும்பிப் போய் விட்டார்களா? அவர்களைக் கண்டுபிடிக்க முடியுமா? அவர்களைப் பார்த்தாவது சில விவரங்கள் எனக்குத் தெரிந்து கொள்ள வேண்டும்.''

"ஐயா! பதற்றம் வேண்டாம். அவர்கள் இருவரும் இந்த நகரத்திலேதான் இருக்கிறார்கள். தினம் ஒருமுறை வந்து தங்கள் உடல் நிலையைப் பற்றி விசாரித்துப் போகிறார்கள். இன்றைக்கு ஏனோ இதுவரையில் வரக் காணோம்..."

அச்சமயத்தில் சின்ன பிக்ஷு வந்து குருதேவரைப் பார்த்து ஏதோ சமிக்ஞை செய்தார். ஆச்சாரிய பிக்ஷு ''இதோ வந்துவிட்டேன், ஐயா!'' என்று கூறி விட்டு வெளியே சென்றார். சற்று நேரத்துக்கெல்லாம் அவர் திரும்பி வந்தபோது இளவரசன் அருள்மொழிவர்மனுடைய பரபரப்பு மேலும் அதிகமாயிருப்பதைக் கண்டார்.

''ஆச்சாரியரே! இனி ஒரு கணமும் நான் இங்கே தங்கியிருக்க முடியாது. சக்கரவர்த்தியின் கட்டளையை மீறி நான் இங்கே வந்து ஒளிந்திருந்தேன் என்ற பழியை ஏற்க நான் விரும்பவில்லை. என்னால் இந்தப் புராதனமான சூடாமணி விஹாரத்துக்கு எந்தவிதமான தீங்கு நேரிடுவதையும் விரும்பவில்லை'' என்றான் இளவரசன்.

பெரிய பிக்ஷு மலர்ந்த முகத்துடன் ''இளவரசே! உண்மையில் அத்தகைய பெரும் பொறுப்பை நானும் இனி வகிக்க முடியாது. தங்களுடைய விருப்பத்துக்கு விரோதமாக ஒருகணமும் தங்களை நான் இங்கு வைத்திருக்க விரும்பவில்லை. இந்தக் கணமே தாங்கள் புறப்படலாம். கால்வாயில் படகு ஆயத்தமாய்க் காத்திருக்கிறது!'' என்றார்.

''எங்கே போவதற்கு?''

''அது தாங்கள் தீர்மானிக்க வேண்டிய காரியம். தங்களை இங்கே



கொண்டு வந்து சேர்த்த இருவரும் படகுடன் தங்களை அழைத்துப் போக வந்திருக்கிறார்கள்.''

இளவரசன் சிறிது தயங்கினான். ஆச்சாரிய பிக்ஷுவின் முகத்தில் மர்மமான புன்னகை பொலிவதைக் கண்டு, 'இதில் இன்னும் ஏதேனும் சூழ்ச்சி இருக்கக் கூடுமோ?' என்று வியந்தான்.

''அவர்கள் இருவருமே திரும்ப வந்திருக்கிறார்களா? எதற்காக என்று சொல்லவில்லையா?''

''சொன்னார்கள். இந்த விஹாரத்திலிருந்து ஒரு நாழிகை தூரத்தில், கால்வாயின் கரையில் நந்தி மண்டபம் ஒன்று இருக்கிறது. அதில் தங்களைப் பார்ப்பதற்காக இரண்டு பெண்மணிகள் வந்து காத்திருக்கிறார்களாம்.

இளவரசன் அவசரமாகக் கட்டிலிலிருந்து இறங்கினான். ''ஆச்சாரியரே! உடனே படகுக்கு என்னை

அழைத்துச் செல்லுங்கள்! இவ்வளவு தாமதம் ஆகி விட்டதே" என்றான்.

பிக்ஷு இளவரசனைக் கையினால் தாங்கிக்கொண்டு கால்வாய்க் கரை வரையில் சென்றார். ஆனால் இளவரசனுடைய நடையில், நாலு நாளைக்கு மேலாகக் கடுஞ் சுரத்தினால் பீடிக்கப் பட்டிருந்ததின் அறிகுறி ஒன்றும் தென்படவில்லை. ஏறு போல் நடந்து, பொன்னியின் செல்வர் கம்பீரமாக வருவதைக் கண்டு, சேந்தன் அமுதன், பூங்குழலி இருவருடைய முகங்களும் மலர்ந்தன.

அருள்மொழிவர்மன் படகில் ஏறி உட்கார்ந்ததும் பிக்ஷு அவனைப் பார்த்து, "ஐயா! தங்களுக்கு ஏதேனும் சேவை செய்ய வாய்ப்புக் கிடைத்தால் அதை இந்தச் சூடாமணி விஹாரத்துப் பிக்ஷுக்கள் அனைவரும் பெரும் பாக்கியமாகக் கருதுவோம். தாங்கள் திரும்பவும் இங்கு வந்து ஒரு வாரம் தங்கி உடல் வலிவு பெற்றுப் போவது நலம்!" என்றார்.

"குருதேவரே! நான் திரும்பி வருவேன் என்றுதான் எனக்கும் தோன்றுகிறது. இல்லாவிடில் இவ்வாறு மற்ற பிக்ஷுக்களிடம் சொல்லிக் கொள்ளாமல் அவசரமாய்ப் புறப்பட்டிருக்க மாட்டேன்!" என்றான் இளவரசன்.

படகு நகரத் தொடங்கியதும் சேந்தன், பூங்குழலி இருவரையும் மாறி மாறிப் பார்த்து, "இக் கால்வாயின் வழியாக நீங்கள் என்னை அழைத்துக்கொண்டு வந்த போது, நீங்கள் தேவலோகத்தவர்கள் என்றும், சொர்க்கத்துக்கு என்னை அழைத்துப் போகிறீர்கள் என்றும் எண்ணியிருந்தேன். என்னை ஏமாற்றி விட்டீர்கள். சந்நியாசி மடத்துக்குக் கொண்டு போய்ச் சேர்த்தீர்கள். போனால் போகட்டும். கடலில் நீந்திக் கை சளைத்து நினைவிழந்து போனதிலிருந்து நடந்ததையெல்லாம் உங்களிடம் கேட்க வேண்டும். அதற்கு முன்னால், நந்தி மண்டபத்தில் எனக்காகக் காத்திருப்பவர்கள் யார் என்று சொல்லுங்கள்!" என்றார் இளவரசர்.

இருவரையும் பார்த்து அருள்மொழி வர்மர் கேட்டபோதிலும் பூங்குழலி வாய் திறக்கவில்லை. சேந்தன் அமுதன்தான் மறுமொழி கூறினான். குந்தவைப் பிராட்டியும் கொடும்பாளூர் இளவரசியும் ஆனைமங்கலத்துக்கு வந்திருப்பதையும், அங்கிருந்து நந்தி மண்டபத்துக்கு வந்து காத்திருப்பதையும் தெரிவித்தான்.

"ஆகா! எடுத்ததற்கெல்லாம் மூர்ச்சை போட்டு விழும் அந்தப் பெண்ணை எதற்காக இளையபிராட்டி இங்கேயும் அழைத்து வந்திருக்கிறார்?"

சேந்தன் அமுதன் "ஐயா! தமிழ் நாட்டுப் பெண்களிடையே இப்போது ஒரு சுரம் பரவிக்கொண்டிருக்கிறது. புனிதமான சைவ சமயத்தை விட்டு விட்டுப் புத்த மதத்தைச் சேர்ந்து பிக்ஷுணிகள் ஆகப் போவதாகச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்" என்றான்.

"அப்படி யார் யார் சொல்லிக் கொண்டிருகிறார்கள்?"

"கொடும்பாளூர் இளவரசி அவ்விதம் சொல்லிக் கொண்டிருக்கிறாராம். இதோ இந்தப் பெண்ணரசியும் அவ்வாறு சொல்லிக் கொண்டிருக்கிறாள்!"

"இரண்டு பேர்தானே, அமுதா! அதனால் சைவ சமயத்துக்கு நஷ்டம் வந்து விடாது! இலங்கையில் பிக்ஷுணிகள் தவ வாழ்க்கை நடத்தும் மடங்கள் பலவற்றை நான் அறிவேன். வேண்டுமானால் நானே இவர்களை அழைத்துப் போய்ச் சேர்த்து விடுகிறேன்!" என்று பொன்னியின் செல்வர் கூறவும், சேந்தன் அமுதன் நகைத்தான்.

பின்னர், கடலிலிருந்து இளவரசனும் வந்தியத்தேவனும் கரையேறியதிலிருந்து நிகழ்ந்தவற்றையெல்லாம் சேந்தன் அமுதன் தான் அறிந்தவரையில் கூறினான். பொன்னியின் செல்வர் ஆர்வத்துடன் கேட்டுக்கொண்டு வந்ததுடன், தன்னுடைய ஞாபகங்களையும் ஒத்துப் பார்த்துக்கொண்டு வந்தார்.

"அதோ நந்தி மண்டபம்!" என்று பூங்குழலி கூறியதும், இளவரசர் அவள் சுட்டிக் காட்டிய திசையை நோக்கினார்.



## நாற்பத்து நான்காம் அத்தியாயம்

# நந்தி வளர்ந்தது!

படகு அப்போது சென்று கொண்டிருந்த இடத்தில் கால்வாயின் கரைகள் இருபுறமும் ஓங்கி உயர்ந்திருந்தன. பூங்குழலி சுட்டிக் காட்டிய இடத்தில் கால்வாயின் ஓரமாகப் படித்துறை மண்டபம் ஒன்று காணப்பட்டது. படிகள் முடிந்து மண்டபம் தொடங்கும் இடத்தில் இரண்டு ஓரங்களிலும் இரண்டு நந்தி விக்கிரகங்கள் அமைக்கப்பட்டிருந்தன. சிறந்த வேலைப்பாட்டுடனும் ஜீவகளையுடனும் விளங்கிய அந்த நந்தி பகவானுடைய சிலைகளை இன்றைக்கெல்லாம் பார்த்துக்கொண்டேயிருக்கலாம். இந்தச் சிலைகளின் முக்கியம் பற்றியே அம் மண்டபத்துக்கு 'நந்தி மண்டபம்' என்ற பெயர் ஏற்பட்டிருந்தது. வருஷத்துக்கு ஒருமுறை வஸந்த உற்சவத்தின்போது திருநாகைக் காரோணத்துக் காயாரோகண சுவாமியும் நீலாயதாட்சி அம்மனும் அந்த மண்டபத்திற்கு விஜயம் செய்து கொலு வீற்றிருப்பது வழக்கம். அப்போது மக்கள் திரள் திரளாக அங்கே வந்து சேர்வார்கள். உற்சவம் பார்த்து விட்டு, நிலா விருந்தும் அருந்தி விட்டுத் திரும்பிச் செல்வார்கள். நகரத்திலிருந்து சற்றுத் தூரத்திலிருந்தபடியால் மற்ற சாதாரண நாட்களில் இங்கே ஜனங்கள் அதிகமாக வருவதில்லை.

படகு, மண்டபத்தை நெருங்கியது. மண்டபத்தில் இருந்த இரு பெண்மணிகளையும் பார்த்த பிறகு இளவரசருக்கு வேறு எதிலும் பார்வையும் செல்லவில்லை; கவனமும் செல்லவில்லை.

படகு நெருங்கிவந்தபோது இளைய பிராட்டி குந்தவை படிகளில் இறங்கிக்

கீழ்ப்படிக்கு வந்தான். வானதியோ மண்டபத்திலேயே தூண் ஒன்றின் பின்னால் பாதி மறைந்தும் மறையாமலும் நின்றுகொண்டிருந்தாள்.

படித்துறை அருகில் வந்து படகு நின்றது. இளவரசர் இறங்குவதற்குப் படகிலிருந்தபடி சேந்தன் அமுதனும் படியில் நின்றபடி இளையபிராட்டியும் உதவி செய்தார்கள்.

சேந்தன் அமுதனும் பூங்குழலியும் படகைப் பின்னோக்கிச் செலுத்திக் கொண்டு போய்ச் சிறிது தூரத்தில் நிறுத்தினார்கள்.

"தம்பி! எப்படி மெலிந்து விட்டாய்?" என்று குந்தவை கூறியபோது, அவளுடைய கனிந்த குரலிலே கண்ணீர் கலந்து தொனித்தது.

பொன்னியின் செல்வன், "என் உடல் மெலிவு இருக்கட்டும், அக்கா! உன் முகம் ஏன் இப்படி வாடியிருக்கிறது? என்னைக் கண்டதும் உன் முகம் தாமரை போல் மலருவது வழக்கமாயிற்றே? இன்றைக்கு ஏன் உன் முக சந்திரனை மேகம் மறைத்திருக்கிறது? உன் கண்கள் ஏன் கலங்கியிருக்கின்றன? ஆகா! உன் உள்ளத்தைப் புண்படுத்தி வேதனையளித்த எத்தனையோ காரியங்கள் நிகழ்ந்திருக்க வேண்டும். இல்லாவிடில் எனக்கு அவ்வளவு அவசரமான ஓலை அனுப்பியிருக்க மாட்டாய்!" என்றான்.

"ஆம், தம்பி! எத்தனையோ அவசரமான விஷயங்கள் சொல்ல வேண்டும்; கேட்க வேண்டும். இலங்கையின் தங்கச் சிம்மாசனத்தை வேண்டாமென்று தள்ளிய வள்ளலே! இந்தக் கருங்கல் சிம்மாசனத்தில் சிறிது நேரம் உட்கார்ந்து கொள்!" என்றாள்.

பொன்னியின் செல்வன் உட்காரும்போது தமக்கையின் பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டான். குந்தவை அவனுடைய தலையைச் கரத்தினால் தொட்டு, உச்சி முகர்ந்தாள், அவளுடைய கண்களில் மேலும் கண்ணீர் தளும்பியது.

இருவரும் உட்கார்ந்த பிறகு குந்தவை, "தம்பி! உன்னை இன்றைக்கு நான் இங்கு வருவித்திருக்கவே கூடாது. சூடாமணி விஹாரத்தின் தலைவர் உனக்கு உடம்பு நன்றாகக் குணமாகி விட்டது என்று செய்தி அனுப்பினார். அது சரியல்ல; சுரம் உன்னை வாட்டி எடுத்திருக்கிறது. ஆனால் உன்னைப் பார்க்காமலிருக்கவும் என்னால் முடியவில்லை. ஆனைமங்கலம் வந்த பிறகு ஒவ்வொரு கணமும் ஒரு யுகமாகச் சென்றுகொண்டிருந்தது!" என்றாள்.

"அக்கா! என்னை இங்கு வருவித்தது பற்றி நீ கவலைப்பட வேண்டாம். நீ மட்டும் படகு அனுப்பாமலிருந்தால் நான் இத்தனை நேரம் பழையாறைக்கே புறப்பட்டிருப்பேன். கடுமையான சுரத்திலேயுங்கூட உன்னுடைய ஓலைதான் என் மனத்தை வருத்திக்கொண்டிருந்தது. அந்த ஓலையை ஒருவரிடம் அனுப்பியிருந்தாயே? அந்த வாணர் குலத்து வந்தியத் தேவரைப் போன்ற தீரரை நான் பார்த்ததேயில்லை. எத்தனையோ விதமாக அவரைச் சோதித்தேன். எல்லாவற்றிலும் தேறி விட்டார். அவர் இப்போது எங்கே, அக்கா!"

குந்தவையின் முக சந்திரனை மறைத்திருந்த மேகத்திரை சிறிது அகன்றது. பவள இதழ்கள் திறந்து முத்துப் பற்கள் தெரியும்படி புன்னகை பூத்து, "தம்பி! அவரைப் பற்றி இப்போது 'என்ன கவலை? வேறு' எவ்வளவோ விஷயங்கள் இருக்கின்றன!" என்றாள்.

"என்ன அப்படிப் பேசுகிறாய், அக்கா! உனக்கு அதிருப்தி அளிக்கும்படி நடந்துகொண்டாரா?"

"இல்லை, இல்லை! நான் ஏன் அதிருப்தி அடைய வேண்டும்? உன்னை அழைத்துக்கொண்டு வந்து சேர்ப்பதாக வாக்களித்தார். அந்த வாக்கை அவர் நிறைவேற்றி விட்டார்..."

"அதற்காக அவர் செய்த தந்திர மந்திரங்களையும் கைக் கொண்ட சூழ்ச்சி வித்தைகளையும் நினைக்க நினைக்க எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது. அவர்

எங்கே, அக்கா! நீ இங்கு வந்திருக்கிறாய் என்று தெரிந்ததும், வந்தியத்தேவரும் உன்னுடன் வந்திருப்பார் என்று எண்ணினேன். எடுத்ததற்கெல்லாம் மூர்ச்சை போட்டு விழும் இந்தப் பெண்ணரசி அல்லவா வந்திருக்கிறாள்!''

"இவள் எவ்வளவு தைரியசாலி ஆகி விட்டாள் என்பது உனக்குத் தெரியாது, தம்பி! நேற்று நமது முதன்மந்திரியின் யானை இவளைத் தன் துதிக்கையால் தூக்கி எறிந்தது. மேலே அம்பாரியில் இருந்த என் மடியிலேதான் எறிந்தது. ஆனால் அது அவளுக்குத் தெரியாது! அப்போது எவ்வளவு தைரியமாக இருந்தாள் என்பதை நீ பார்த்திருந்தால்...''

"போதும், உன்னுடைய தோழியின் புகழை நிறுத்திக்கொள். என் நண்பரைப் பற்றிச் சொல்!''

"அவரைப் பற்றி என்ன சொல்வது? அவர் வந்த காரியம் ஆகிவிட்டது. திரும்பி அவருடைய எஜமானன் ஆதித்த கரிகாலனிடம் போய் விட்டார்."

"அப்படியானால், அவர் வாக்குத் தவறி விட்டார். தாம் காஞ்சிக்குப் போகப் போவதில்லையென்றும், சோழ நாட்டிலேயே இருந்து விடப் போவதாகவும் கூறினாரே?''

''அது எப்படிச் சாத்தியம்? சோழ நாட்டில் இருந்து அவர் என்ன செய்வது? இங்கே உள்ளவர்களின் கதியே நாளைக்கு என்ன ஆகும் என்று தெரியாமலிருக்கிறது. அவர் பேரில் உனக்கு அவ்வளவு பிரியமிருந்தால், சக்கரவர்த்தியிடம் தெரிவித்து, அவருடைய முன்னோர்கள் ஆண்ட சிற்றரசை அவருக்குத் திருப்பிக் கொடுக்கும்படி செய்து விட்டால் போகிறது!''

"சிற்றரசை வைத்துக்கொண்டு அந்த மகாவீரர் என்ன செய்வார், அக்கா?''

''எல்லாச் சிற்றரசர்களும் என்ன செய்கிறார்களோ, அதை அவரும் செய்கிறார்! நீதான் இலங்கா இராஜ்யம் வேண்டாம் என்று மறுத்தாய்; அது போல் அவரும் வேண்டாம் எனச் சொல்லுவார் என நினைக்கிறாயா?''

இளவரசன் இளநகை புரிந்த வண்ணம், "அக்கா! இலங்கை இராஜ்யம் வேண்டாம் என்று நான் சாட்சிகள் வைத்துக்கொண்டு மறுத்திருக்கிறேன். அப்படியிருந்தும் என் மீது குற்றம் சாட்டிச் சிறைப்படுத்திக்கொண்டு வரத் தந்தை கட்டளையிட்டிருக்கிறார்...''

''தம்பி! நீ இராஜ்யத்தை ஒப்புக் கொண்டிருந்தால் உன்னைச் சிறைப் படுத்திக் கொண்டுவரக் கட்டளை பிறந்திருக்காது! நீ சுதந்திர மன்னன் ஆகியிருப்பாய்! அப்போது உன்னை யார் சிறைப்படுத்த முடியும்?''

"தந்தையின் விருப்பத்துக்கு விரோதமாக அவ்விதம் நான் நடந்துகொண்டிருக்க வேண்டுமா?''

''பொன்னியின் செல்வா! நீ இலங்கை இராஜ்யத்தை ஒப்புக்கொண்டிருந்தால் தந்தை மகிழ்ச்சி அடைந்திருப்பார்! மிச்சமுள்ள சோழ சாம்ராஜ்யத்தை உன் தமையனுக்கும் மதுராந்தகனுக்கும் பிரித்துக் கொடுத்து மன நிம்மதி அடைந்திருப்பார். இப்போதும் அதற்குத்தான் முயற்சி நடக்கிறது, தம்பி! கொள்ளிடத்துக்கு வடக்கே ஒரு ராஜ்யமாகவும் தெற்கே ஒரு ராஜ்யமாகவும் பிரித்து விடப் பிரயத்தனம் நடக்கிறது. நீ வந்தால் இது விஷயத்தில் தந்தைக்கு உதவியாயிருப்பாய் என்று அவருக்கு நம்பிக்கை. முன்னால் உனக்குச் சொல்லி அனுப்பி நீ வாரதபடியால் இப்போது சிறைப்படுத்திக் கொண்டு வரச் சொன்னார். இலங்கை ராஜ்யத்தை நீ மறுத்து விட்டாய் என்பது சக்கரவர்த்திக்கு நன்றாய்த் தெரியும்."

"இராஜ்யத்தைப் பிரிப்பதற்கு நான் ஒருநாளும் உதவியாயிருக்க மாட்டேன். அதைப் போல பெரிய குற்றம் வேறொன்றுமில்லை. அதை விடச் சித்தப்பா மதுராந்தகருக்கே முழு ராஜ்யத்தையும் கொடுத்து விடலாம்.''

"அப்படியானால் முதன் மந்திரியும் நீயும் ஒரே மாதிரி அபிப்பிராயம் கொண்டிருக்கிறீர்கள்!''

"ஆம்; முதன் மந்திரியும் அப்படித்தான் கருதுகிறார். இலங்கைக்கு அவர் வந்ததே இதைப் பற்றி என்னுடன்



கலந்து பேசுவதற்காகத் தான். அக்கா! இலங்கை இராஜ்யத்தை நான் வேண் டாம் என்று மறுத்ததன் உண் மைக் காரணத்தைச் சொல்லட் டுமா?''

''என்னிடம் சொல்லாமல் வேறு யாரிடம் சொல்வாய், தம்பி!''

''ஆம்; என் அந்தரங்கத்தைச் சொல்வதற்கு வேறு யாரும் இல்லைதான். இலங்கைக்குப் போவதற்கு முன்னால் அந் நாட் டைப் பற்றிப் பிரமாதமாக எண்ணி யிருந்தேன். போன பிறகுதான் அது எவ்வளவு சிறிய நாடு என்று தெரிந்தது. குதிரையில் அல்லது யானையில் ஏறிப் புறப்பட்டால் ஒரே நாளில் அந் நாட் டின் மேற்குக் கடற்கரையிலிருந்து கிழக்

குக் கடற்கரைக்குப் போய் விடலாம்."

"சோழ நாடு மட்டும் அதை விடப் பெரிதா, தம்பி? இந்த நாட்டையும் அப்படி ஒரே நாளில் குதிரை ஏறிக் கடந்து விட முடியாதா?"

"சோழ நாடும் சிறியது தான். ஆதையினால் சோழ நாட்டுக் கிரீடத்தை எனக்கு யாரேனும் அளித்தாலும் வேண்டாம் என்று தான் சொல்லுவேன். இந்தத் தெய்வத் தமிழகத்தைச் சோழ நாடு, பாண்டிய நாடு, சேர நாடு என்று பிரித்தார்களே! அவர்கள் பெரிய குற்றம் செய்தார்கள். அதனாலேயே தமிழகத்தில் வீராதி வீரர்கள் பிறந்தும், இந்த நாடு சோபிப்பதில்லை. வட நாட்டிலே சந்திர குப்தர் என்ன, அசோகர் என்ன, சமுத்திர குப்தர் என்ன, விக்ரமாதித்யர் என்ன, ஹர்ஷ வர்த்தனர் என்ன! இப்படி மகா



சக்கரவர்த்திகள் தோன்றி மகா சாம்ராஜ்யங்களை ஆண்டிருக்கிறார்கள். தமிழ்நாட்டில் அவ்விதம் யாரேனும் பெரிய சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்து ஆண்டது உண்டா? காஞ்சி பல்லவர் குலத்தில் மகேந்திர சக்கரவர்த்தியும் மாமல்லரும் இருந்தார்கள். பிறகு அந்தக் குலமும் க்ஷீணித்துவிட்டது. அக்கா! நான் இராஜ்யம் ஆளுவதாயிருந்தால், இந்த மாதிரி சின்னஞ் சிறு இராஜ்யத்தை ஆள மாட்டேன். இலங்கை முதல் கங்கை வரையில் பரவி நிலை பெற்ற இராஜ்யத்தை ஆளுவேன். மாலத்தீவிலிருந்து சாவகத் தீவு வரையில் தூர தூர தேசங்களில் புலிக்கொடி பறக்கும் மகா சோழ சாம்ராஜ்யத்தின் சிம்மாசனத்தில் வீற்றிருப்பேன்...! என்னைப் பைத்தியக்காரன் என்றுதானே எண்ணுகிறாய்?''

"இல்லை, அருள்வர்மா! என்னைப் போல் ஆகாசக் கோட்டைகள் கட்டுவதற்கும் கற்பனைக் கனவுகள் காண்பதற்கும் நீயும் ஒருவன் இருக்கிறாயே என்று எண்ணி மகிழ்கிறேன். நீ பைத்தியக்காரனாயிருந்தால், நான் உன்னை விடப் பெரிய பைத்தியக்காரி. நம்முடைய தந்தையின் பாட்டனார் பராந்தக சக்கரவர்த்தி அப்படியெல்லாம் மனோராஜ்யம் செய்திருந்தார் என்பதை நான் அறிவேன். அவர் காலத்தில் அது பூரணமாய் நிறைவேறவில்லை. ஆனால் என்னுடைய ஆயுட் காலத்தில் நான் அதைப் பார்க்கப் போகிறேன். சோழ சாம்ராஜ்யம் இலங்கை முதல் கங்கை வரையிலும் மாலத் தீவு முதல் சாவகம் வரையிலும் பரந்து விஸ்தரிப்பதைப் பார்த்து விட்டுத்தான் நான் சாகப் போகிறேன். இந்த என் எண்ணம் நம் தமையன் ஆதித்த கரிகாலனால் நிறைவேறும் என்று ஒரு காலத்தில் நம்பினேன். அந்த நம்பிக்கை எனக்கு இப்போது போய்விட்டது. ஆதித்த கரிகாலன் மகா வீரன்; ஆனால் மனத்தைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் அவனிடம் இல்லை. அதனால் அவன் பெரிய காரியங்களைச் சாதிக்க முடியாது. என் மனோரதம் உன்னால் நிறைவேறும் என்ற ஆசை எனக்கு இன்னும் இருக்கிறது. ஒருவேளை அதுவும் கைகூடாமல் போகலாம். அதனாலும் நான் நிராசை அடைய மாட்டேன். உன்னால் கைகூடா விட்டால் உனக்குப் பிறக்கும் பிள்ளையினால் கைகூடும் என்று உறுதி கொண்டிருக்கிறேன். உனக்குப் பிறக்கும் புதல்வனை, பிறந்த நாளிலிருந்து நானே எடுத்து வளர்ப்பேன். அவனை இந்த உலகம் கண்டறியாத மகாவீரன் ஆக்குவேன். அற்ப ஆசைகளில் அவன் மனத்தைச் செலுத்த விடாமல் அற்புதங்களைச் சாதிக்கக்கூடிய புருஷ சிங்கமாக்குவேன்...''

"அக்கா! நீ என்னை விடப் பெரிய பைத்தியம் என்பது நிச்சயம். எனக்குக் கலியாணம் செய்து கொள்ளும் எண்ணமே இல்லை. எனக்குப் பிறக்கப் போகும் புதல்வனைப் பற்றி நீ பேச ஆரம்பித்து விட்டாய். நீ செல்லம் கொடுத்து வளர்க்கும் தோழிகளில் யாருக்காவது அத்தகைய எண்ணமிருந்தால், என்னை மணந்துகொண்டு மணி மகுடம் சூடிச் சிம்மாசனத்தில் வீற்றிருக்கலாம் என்ற ஆசை இருந்தால், அது ஒருநாளும் நிறைவேறப் போவதில்லை. இதை நிச்சயமாய் அவர்களுக்குச் சொல்லி விடு!'' என்று பொன்னியின் செல்வன் கூறியபோது அவனுடைய பார்வை ஒருகணம், மண்டபத்தின் தூணுக்குப் பின்னால் நின்றிருந்த வானதியின்பால் சென்றது. மறுகணம் அவன் திரும்பியபோது, அவனுக்கெதிரே இருந்த படித்துறை நந்தி விக்கிரகத்தைப் பார்த்தான்.

''அக்கா! ஒரு செய்தி! இலங்கை சிறிய இராஜ்யமாயிருந்தாலும் அந்த இராஜ்யத்தை முற்காலத்தில் ஆண்ட மன்னர்கள் மகா புருஷர்கள். பெரிய உள்ளங்களைப் படைத்தவர்கள். அவர்கள் பெரிய பெரிய திட்டங்களைப் போட்டுப் பெரிய பெரிய காரியங்களைச் சாதித்தார்கள். செங்கற்களைக் கொண்டு மலை போன்ற மேக மண்டலத்தை அளாவிய புத்த ஸ்தூபங்களை நிர்மாணித்தார்கள். ஆயிரம்

இரண்டாயிரம் அறைகள் உள்ள புத்த விஹாரங்களைக் கட்டினார்கள். பதினாயிரம் தூண்கள் உள்ள மண்டபங்களை எழுப்பினார்கள். புத்த பகவான் எவ்வளவு பெரியவர் என்பதைப் பார்த்தவுடன் தெரிந்து கொள்ளும்படியாக, அதோ அந்தத் தென்னை மர உயர முள்ள புத்தர் சிலைகளை அமைத்தார்கள். அக்கா! இதோ நமக்கு முன்னாலிருக்கும் நந்தி விக்கிரகத்தைப் பார்! எவ்வளவு சின்னஞ் சிறியதாயிருக்கிறது! அடியும் முடியும் காண முடியாத மகா தேவரின் வாகனமாகிய நந்தி இவ்வளவு சிறியதாகவா இருக்கும்? கைலாசத்தில் பரமசிவனுடைய பரிவாரங்களோ பூத கணங்கள். அந்தப் பூதகணங்கள் அடிக்கடி வந்து தொந்தரவு செய்யாமல் கைலாசத்தின் வாசலில் நின்று காவல் புரிகிறவர் நந்திதேவர். அவர் இவ்வளவு சிறிய உருவத்துடன் இருந்தால் பூத கணங்களை எப்படித் தடுத்து நிறுத்த முடியும்? அதோ பார், அக்கா! என் கண் முன்னால் இதோ இந்த நந்தி வளர்கிறது. வளர்ந்து, வளர்ந்து, வளர்ந்து பெரிதாகிறது. பிரம்மாண்ட வடிவம் பெற்று இம் மண்டபத்தின் மேற்கூரையை முட்டுகிறது. மேற்கூரை இப்போது போய்விட்டது. நந்தி பகவான் வானமளாவி நிற்கிறார்! பூத கணங்கள் வருகிறார்கள்! நந்தி பகவானைப் பார்த்துப் பயபக்தியுடன் நின்று சிவனைத் தரிசிக்க அனுமதி கேட்கிறார்கள்! நந்தி பகவான் அவ்வளவு பெரியவராயிருந்தால் சிவ பெருமான் வீற்றிருக்கும் ஆலயம் எப்படியிருக்க வேண்டும்? தக்ஷிண மேரு என்று சொல்லும்படி வானை அளாவிய கோபுரம் அமைக்க வேண்டாமா? அதற்குத் தக்கபடி பிராகாரங்கள் இருக்க வேண்டாமா? இப்போது சோழ நாட்டில் உள்ள கோயில்கள் அகஸ்திய முனிவர் கோவில் கொள்வதற்குத்தான் ஏற்றவை. சிவபெருமானுக்கு உகந்தவை அல்ல. எனக்கு இராஜ்யமும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். சோழ சிம்மாசனத்தில் யார் அமர்ந்தாலும் ஆலயத் திருப்பணி அதிகாரியாக என்னை நியமிக்கும்படி கேட்டுக் கொள்வேன்..."

"தம்பி! நம் இரண்டு பேரில் பைத்தியம் யாருக்கு அதிகம் என்று போட்டி போட வேண்டியதுதான். தற்சமயம் இந்தச் சோழ நாட்டைப் பேரபாயம் சூழ்ந்திருக்கிறது. உட் பகைவர்களாலும் வெளிப் பகைவர்களாலும் சிநேகிதர்கள் போல் நடிக்கும் பகைவர்களாலும் அபாயம் ஏற்பட்டிருக்கிறது. சில காலமாக நான் அடிக்கடி ஒரு பயங்கரமான கனவு காண்கிறேன். மின்னலென ஒளி வீசும் கூரிய கொலைவாள் ஒன்று என் அகக் கண் முன்னால் தோன்றுகிறது. அது யார் மேலேயோ விழப் போகிறது. அது யார் என்பது எனக்குத் தெரியவில்லை. சோழ குலத்தைச் சேர்ந்த யாராவது அந்தக் கொலை வாளுக்கு இரையாகப் போகிறார்களா அல்லது இந்தச் சோழ ராஜ்யத்தை இரண்டாகத் துண்டு செய்து நாசமாக்கப் போகும் கொலை வாளா அது என்று தெரியவில்லை. நீயும் நானும் யோசித்து முயற்சி செய்துதான் அத்தகைய அபாயம் இந்நாட்டுக்கு ஏற்படாமல் தடுக்க வேண்டும்!" என்றாள் இளையபிராட்டி.

"ஆம், அக்கா! வல்லவரையர் கூறிய விவரங்களிலிருந்தும் எனக்கும் அவ்வாறுதான் தோன்றுகிறது. முக்கியமான அபாயம் சோழ குலத்துக்கு யாரிடமிருந்து வரப் போகிறது என்பதை அறிவாயல்லவா?" என்றான் இளவரசன்.

"பழுவூர் இளையராணி நந்தினியைத் தானே குறிப்பிடுகிறாய், தம்பி!"

"ஆம், அக்கா! அவன் யார் என்பதையும் அறிவாய் அல்லவா?"

"வந்தியத்தேவர் கூறிய விவரங்களிலிருந்து அதையும் அறிந்து கொண்டேன். ஆகையினாலேயே இவ்வளவு அவசரமாக உன்னைப் பார்க்க வந்தேன்!" என்றாள் குந்தவை.

(தொடரும்)



மிதுன ராசிக் காரரான சுகன்யா வீட்டில் விசேஷம் ஏதும் நடக்குமாம்!



**மேஷம்** : (அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)

அதிக செலவுல வாங்கக்கூடிய பொருட்கள் எதையும் இப்ப வாங்காதீங்க. குறிப்பா, வீடு, கம்ப்யூட்டர், ஹோம் தியேட்டர் வகையறாக்கள். இந்த வாரம் நீங்க கடுமையா உழைக்க வேண்டி வரும். தூக்கம் இல்லாம அவஸ்தைப்படுவீங்க. ஆனா, உழைப்புக்குப் பலன் இல்லாம போகாது. ஆன்மீக நாட்டம் மேலோங்கி, சிலர் கோயில் கோயிலா போவாங்க. அரசியல்வாதிகள் விழிப்போட இருக்கணும். கூட்டணியில பல குழப்பங்கள் வர்ற வாய்ப்பு இருக்கு.



**ரிஷபம்** : (கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)

உங்க கஷ்டங்கள் கொஞ்சம் குறையும். கொஞ்ச நாளா பாடாபடுத்தி வந்த மேலதிகாரிகள் ட்ரான்ஸ்பர்ல போயிடலாம்; அல்லது சாந்த சொரூபி ஆகலாம்! மனசுல தெம்பும் உற்சாகமும் மேலோங்கும். நீண்ட நாளா பெண்டிங்ல இருக்கற முக்கிய வேலையை வெற்றிகரமா முடிப்பீங்க. பெரியவங்க ஆசியும் நண்பர்கள் சப்போர்ட்டும் கிடைக்கும். கலைத் துறையினர், பத்திரிகையாளர்களுக்குப் புகழ்கூடும். சிலருக்கு வருமானமும் கூடும். வியாபாரிகளும் விஞ்ஞானிகளும் எதிர்பாராத அதிர்ஷ்டம் ஒண்ணை எதிர்பார்க்கலாம்.



**மிதுனம்** : (மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)

செலவு தாங்க கட்டுக்கடங்காம போகும். மத்தபடி, உங்க பாதை தெளிவா இருக்கு. எடுத்த காரியம் வெற்றி. பண வரவு, நல்லவங்க சப்போர்ட்னு சக்கைப் போடு போடுவீங்க. எழுத்தாளர்களுக்கு எதிர்பாராத புகழோ பரிசோ கிடைக்கலாம். வர்த்தகத் துறையினருக்கும் வசூல் அமோகமா இருக்கும். ரேஸ், லாட்டரி வகையறாக்கள் பலன் தராது. பெண்களுக்குப் பதவி உயர்வு கிடைக்க வாய்ப்பு உண்டு. வீட்டுல விசேஷம் ஏதாவது நடக்கவுமதான்!



**கடகம்** : (புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)

சாதகமான கிரக சஞ்சாரம்தான். கவலைப்படாம நீங்க முன்னேறும் வழியைப் பாருங்க. வேலை, தொழில் மாறுதல்ல எண்ணம் இருந்தா இது சரியான நேரம். புதிய தொழில் தொடங்கறவங்களுக்கு உதவியும் ஊக்கமும் கிடைக்கும். பணப் பிரச்னை இருக்காது. சிலருக்குப் பதவி உயர்வு வரலாம். சமூகப் பணியாளர்களும் அரசியல்வாதிகளும் புகழ் உயரப் பெறுவார்கள். பொதுவாவே இது பாஸிடிவான வாரமா இருக்கும்.



**சிம்மம்** : (மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

பிராப்ளம் எதுவும் இருக்காது. மாமூலான காரியங்கள் சுமுகமா நடக்கும். ஆனா சிலருக்கு உடல்நலன் கெட்டுப் போகலாம். வெளில அலையாதீங்க. பயணத்துல எச்சரிக்கை அவசியம். பெரியவர்களை மனக்கஷ்டப் படறாப்பல பேசி வீட்டுல சில பிரச்னைகளை உண்டாக்குவீங்க. காதல் கீதல்னு திரியாம, மாணவர்கள் படிப்புல கவனமா இருக்க வேண்டியது அவசியம்.



**கன்னி** : (உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)

கொஞ்சம் போல சொத்து சேர்க்கற வாய்ப்பு வரும்ங்க. நகைகள் வாங்கறதை விட மனை வாங்கறது பெட்டர். அரசு ஊழியர்களுக்குப் பணவரவு திருப்தியா இருக்கும். போனஸ் அது இதுன்னு ஒரே ஜாலிதான். ஆனா, சிலருக்கு பிக்பாக்கெட்ல இழக்கற வாய்ப்பும் இருக்கு. உஷாரா இருங்க. இந்த வாரம் நீங்க எங்க வெளியில போறதானாலும் டூவீலர் பயணத்தைத் தவிர்க்க வேண்டியது

# அக்னிசர்மா பக்கம்

## அக்டோபர் 13 முதல் 19 வரை

அவசியம். அதே மாதிரி சிலருக்கு பஸ் பிரேக் டவுனாகி வழில நிக்கற 'யோகமும்' இருக்கும்! பெண்களுக்கு உற்சாகமான வாரம். புத்தாடை, வீட்டு உபயோகப் பொருட்கள் வாங்குவீங்க.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

திட்டமிட்டபடி காரியங்கள் நடக்கும். ஆனா, செலவு எக்கச்சக்கமா ஆகும். சில திடீர் பொருள் இழப்புகளுக்குத் தயாரா இருங்க. அரசு ஊழியர்களுக்கு இது அமோகமான வாரம். விளையாட்டு, விஞ்ஞானம், கைத்தொழில் துறையினருக்கு நல்ல லாபகரமா இருக்கும். வீட்டுல விசேஷங்கள் சில நடக்கப் போவுது. அநேகமா பையன்/பொண்ணு கல்யாணமா இருக்கலாம். சமூகப் பணியாளர்கள் சில பிரச்னைகள்ல மாட்டிக்க வாய்ப்பு இருக்கு. எச்சரிக்கையா இருங்க.

# நடக்குமென்பார், நடக்கும்



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

பிரமாதமான வாரம். எழுத்தாளர்களுக்குப் புகழும் பாராட்டும் தேடி வரும். மத்தவங்களுக்கும் அமோகமாத்தான் இருக்கும். சிலர் உபயோகமான முதலீடுகள் செய்வாங்க. தெய்வீகப் பணிகள்ல மனசு லயிக்கும். ஆன்மிக சொற்பொழிவாளர்களுக்கு வருமானம் கூடும். வீட்டுல ஒரு கல்யாணப் பேச்சு நடந்து, அநேகமா ஓர்க்-அவுட் ஆயிடும். வெளியிடங்கள்ல சாப்பிடாம இருக்கறது பல வகைல இப்ப நல்லது.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

காதல் உணர்வுகள் கொப்பளிக்குமே! ஜமாயுங்க. இந்த வாரம் உங்களுக்கு உல்லாச அனுபவங்கள் நிறைய கிடைக்கும். பார்ட்டிகள்ல கலந்துப்பீங்க. வருமானம் அமோகமா இருக்கும்; நிறைய செலவுகளும் வரும். கம்ப்யூட்டர், கணிதத் துறையினருக்குக் கல்யாணம் நடக்கும். பெண்களுக்குப் பதவி உயர்வு, ஊதிய உயர்வுக்கு வாய்ப்பு இருக்கு. சிலர் வெளிநாடு போவார்கள். வீட்டுல சில சில்லறைக் குழப்பங்களுக்கு நீங்க காரணமா இருப்பீங்க; எச்சரிக்கை!



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

வீட்டுல யாருக்கானா உடம்பு சரியில்லாம போகும். அலைச்சலும் செலவும் எக்கச்சக்கமா இருக்கும். வாரக் கடைசில சிறு விபத்துகளுக்கான வாய்ப்பு இருக்கு. யாரையும் நம்பி முக்கியப் பொறுப்புகளை விடாதீங்க. பண விஷயத்துல படு கவனமா இருக்கணும். கடன் குடுக்கறதோ, வாங்கறதோ கண்டிப்பா வேணாம். யாருக்கும் ஜாமீன் கையெழுத்தும் போடாதீங்க.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

ஆன்மீகத்துல அதிக நாட்டம் உள்ள உங்களுக்கு இந்த வாரம் உடல்நலன் கொஞ்சம் பாதிக்கப்படலாம். கண், கால், கழுத்துல வலி வரலாம். மருத்துவச் செலவுக்குத் தயாரா இருங்க. உங்க பொறுப்புகளைப் பகிர்ந்து கொடுக்கறது மூலமா நிறைய ஓய்வு கிடைக்கும். இந்த வாரம் சிலருக்கு வெளியூர்ப் பயணம் இருக்கலாம். பொன் நகை சேர்க்கையும் சாத்தியமே! பெண்களுக்கு மனக் குழப்பம் மிகுந்த வாரமா இருக்கும்.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

பணநடமாட்டம் அதிகமா இருக்கும். அதே சமயம் தண்ணியா செலவும் ஆகும். விருந்து, கேளிக்கைன்னு என்ஜாய் பண்ணுவீங்க. வெளிநாட்டுலேருந்து ஏதாவது நல்ல சேதி வரும். சிலருக்குத் திருமணம் நடக்கலாம். உறவினர்கள் வருகையால வீடு கலகலப்பாக இருக்கும். வீடு, மனை வாங்க யோசிச்சிட்டிருக்கறவங்க, அடுத்த வாரம் ஆரம்பிக்கலாம். வங்கிப் பணியாளர்களும் கம்ப்யூட்டர் விஞ்ஞானிகளும் விவசாயிகளும் தம் நிலை உயரப் பெறுவார்கள். வெளியூர்ப் பயணங்கள் – குறிப்பா பகல் நேரப் பயணங்களைத் தவிர்க்கறது நல்லது.

"முடிக்கணும். முடிச்சாகணும். இல்லேன்னா நாம என்னதுக்கு? இந்த வெல்ல மண்டில எத்தனை எம்.எல்.ஏங்க எத்தனை எம்.பிங்க கையை கட்டினு நின்னிருக்காங்க... எந்தப் பொருளுக்கு வரி குறைக்கணும். எந்தப் பொருளுக்கு வரி ஏத்தணும்னு நாமதான் கோரிக்கை வைக்கிறோம். மக்களா போய் கேட்டிருக்காங்க... மக்களுக்கு மந்திரிங்ககிட்ட போய் கேட்கத் தெரியாதுய்யா... பிரச்னையைத் தீர்க்கணும்னா சாமிகிட்ட கேட்பாங்க... இல்லேன்னா சாஸ்திரக்காரன்கிட்ட கேட்பாங்க... இதெல்லாம் மந்திரிங்ககிட்ட கேட்கணும்னு மக்களுக்குத் தெரியாது. நமக்குத்தான் தெரியும்... நாம பணம் கொடுத்தா எதிர்க் கட்சிக்காரன் ஸ்டிரைக் பண்ணுவான். இல்லைன்னா சும்மா இருப்பான். நாமதான் எப்பவும் கவிழாத கவர்மெண்ட்டு." – சுந்தரலிங்கத்திற்கு கொதிப்பு கூடிற்று. எழுபது வயது அனுபவ உரம், வார்த்தைகளின் வீச்சுகளில் தெரிந்தது.

# பிராந்தியம் 2

உதடுகள் துடித்தன. கீழுதட்டை இரண்டு தங்கப் பற்களும் கடித்தன.

ஒரு கடை இல்லை. பதினேழு கடைகள். கை மாறி விட்டன.

பிராந்திக் கடை என்பது வெறும் வியாபாரம் அல்ல. பிராந்திக்கடை என்பது அந்தஸ்து. பிராந்திக் கடை ஓனராய் இருப்பவன்தான் பெரும் புள்ளி. பிராந்திக் கடை வியாபாரத்தில் கொள்ளையாய் சம்பாதிக்க முடியும். கர்நாடகாவிலிருந்து கள்ள பாட்டில்கள் இறக்கி திருவிழா வியாபாரத்திலேயே நன்கொடை காசைப் போல் இரு மடங்கு சம்பாதிக்க முடியும். அது ஒரு கலை. அந்தக் கலையைப் பற்றி மக்களுக்குத் தெரியாது. 'பிராந்திக் கடை சதாசிவம் மட்டுமே இருபதாயிரம் நன்கொடை தந்தாராம்பா...' நகரம் வாய் பிளக்கும்.

> நாம மன்னா வம்சம். நம்ம பெரியவங்க வேட்டைக்குப் போயிருக்காங்க. யுத்தம் செஞ்சிருக்காங்க... யுத்தத்துல எதிரிகளை வெட்டிச் சாய்ச்சிருக்காங்க... ஒட்டு மொத்த கவர்மெண்ட்டை துடைக்கிறதைவிட ஒருத்தனை துடைச்சிடலாம்.

இந்த வருடம் ஏலத்தில் மோதியவர்களின் இடுப்பை இப்போதே உடைக்க வேண்டும். அடுத்த வருடம் பார்க்கலாம் என்று விட்டு விட்டால் அடுத்த வருடத்திற்குள் அவர்கள் பக்கம் செல்வாக்கு கூடி விடும். மக்கள் அவர்களின் பக்கம் போய் விடுவார்கள். கௌரவம் மரியாதை என்கிற போதை அவர்களுக்குப் போய் விடும்.

அதைத் தடுக்க வேண்டும்.

அதனால்தான் வெல்ல மண்டியில் இந்த அவசர கூட்டம்.

"எல்லாம் எம்.எல்.ஏ. சங்கரன் தூண்டற வேலை" கர்ஜித்தார் சுந்தரலிங்கம்.

"ஆமாங்க..."

"மண்டித் தெரு ஆள் ஒருத்தனை எம்.எல்.ஏவா நிக்க வைக்காம விட்டது மண்டித் தெரு தப்பு."

"எந்த எம்.எல்.ஏ, எந்த எம்.பி நம்மப் பேச்சை கேட்காம இருந்திருக்காங்க... நம்பளை எதிர்த்து யார் நின்னிருக்காங்க... நாம சொல்றதைச் செய்றவங்கதானே இது வரைக்கும் வந்திருக்காங்க...?"

"இவன் செய்வியே. நமக்கு எதிரா ஆளுங்களை தயாரிச்சு அனுப்பி ஏலம் கேட்க வைச்சிருக்கானே... கடை எடுத்திருக்கானே..."

"இதுக்கு மேல கேட்



பூான்னும் தெரியலை.''

''என்னதான் முடிவு?''

''பதவி இருந்தாத்தான ஆட்டம். அவன் கிட்டே இருந்து பதவியைப் பிடுங்கணும்.''

''அதெப்படி முடியும்? கலெக்டர் இன்ஸ்பெக்டர்னா ட்ரான்ஸ்ஃபர் கொடுக்கலாம். சஸ்பெண்டு பண்ண வைக்கலாம். வேற உப்பு சப்பில்லாத துறைக்கு மாத்தலாம். எம்.எல்.ஏ.வை என்ன செய்ய முடியும்?''

''ஏன் செய்ய முடியாது?''

''சந்தனக் கட்டை கடத்தற எம்.எல்.ஏவை ஒன்னும் செய்ய முடியறதில்லையே...''

''அது வேற விஷயம். சந்தனக் கட்டை

**நாராயணி கண்ணகி**

யில் பணம் சம்பாதிக்கிறான். கட்சிக்கும் மேலிடத்துக்கும் செலவு பண்றான். அதுல நமக்கு ஒன்னும் பாதிப்பில்லையே... இந்த எம்.எல்.ஏ.வும் அப்படிச் செய்ய வேண்டியதுதானே... பிராந்திக்கடை ஏலம் கேட்க எப்படி வரலாம்."

"சரி! அவனை என்ன செய்ய முடியும்?"

"மண்டித் தெரு எல்லாமே செய்யும். விலைவாசின்ற பேய், சட்டம் ஒழுங்குன்ற பூதம் நம்மகிட்ட இருக்கு."

"என்ன சொல்றீங்க?"

"அரிசி நம்மகிட்ட இருக்கு. பருப்பு நம்மகிட்ட இருக்கு. வெங்காயம் நம்ம கிட்ட இருக்கு."

"இருந்தால்...?"

"சொல்றதை பொறுமையா கேட்கணும். மடத்தனமா கேள்வி கேட்கக் கூடாது. விலைவாசியும் நம்ம கைல இருக்குன்னு சொன்னேனே அதைப் பறக்க விடணும். ஒரு பிராந்தி கடைக்கு பத்து ரௌடிங்களை கலாட்டா பண்ண விடணும். மண்டித் தெருவுல மூட்டை தூக்கறவங்க, வண்டி இழுக்கிறவங்க நம்ம ஆளுங்க. போதாதா இந்த கவர்மெண்ட்டை சிரச் சேதம் பண்றதுக்கு. எதிர்க் கட்சியை நம்ம பக்கம் சேத்துக்கலாம். அவங்களும் எப்போ ஆட்சி கலையும்னு பார்த்துட்டு இருக்காங்க..."

"ஒரு எம்.எல்.ஏ.வுக்காக ஒட்டு மொத்த அரசாங்கத்தையும் கவுக்கணுமா?"

"கஷ்டமாத்தான் இருக்கு. வேற வழி?"

"எம்.எல்.ஏ. சங்கரனை மட்டும் முடிச்சிட முடியாதா?"

"கொலையா?"

"மண்டித்தெரு கொலை செஞ்சதில்லை."

"நாம மன்னர் வம்சம். நம்ம பெரியவங்க வேட்டைக்குப் போயிருக்காங்க. யுத்தம் செஞ்சிருக்காங்க... யுத்தத்துல எதிரிகளை வெட்டிச் சாய்ச்சிருக்காங்க... ஒட்டு மொத்த கவர்மெண்ட்டை துடைக்கிறதைவிட ஒருத்தனைத் துடைச்சிடலாம்."

பொதுக் குழுவிற்கு வந்தவர்கள் ஆள் ஆளிற்குப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

விவாதத்தைத் தொடங்கி வைத்த சுந்தரலிங்கம் இதுவரை மௌனமாக இருந்தார். இப்போது பேசினார். "இதெல்லாம் சரிதான். அதுக்கு முன்ன சுலபமா சாதிக்க முடிஞ்சதை விட்டுட்டீங்களே..."

அனைவரும் சுந்தரலிங்கத்தைக் கேள்வியாய் பார்த்தார்கள்.

"... கடையை ஏலம் கேட்டு எடுத்துட்டா போதுமா? கடை எங்கே வைப்பானுங்க... நடு ரோட்லயா வைப்பானுங்க...? பில்டிங் வேணுமில்லை. பில்டிங் யார் கைல இருக்கு. நம்ம ஆளுங்க கைலதான் இருக்கு. அவனுங்களுக்கு பில்டிங் கிடைக்கக் கூடாது. நம்ம ஆளுங்க மொத்த பேருக்கும் சொல்லி வைச்சிடுங்க. யாரும் கடை வாடகைக்கு விடக் கூடாதுன்னு. சும்மா மூடி வைச்சாலும் வாடகை நாம கட்டிடலாம். அவனுங்க பில்டிங் கிடைக்காம நம்மகிட்டேயே திரும்பவும் வித்துட்டு ஓடணும்."

எல்லோர் முகமும் மலர்ந்தது.

அப்படியே செயல் படுத்தினார்கள்.

இடித்த இடியில் அலறி அடித்துக் கொண்டு அந்த பதினேழு பேரும், பதினேழு பேரின் கூட்டாளிகளும் சங்கரனைப் பார்க்க ஓடி வந்தார்கள்.

எல்லோரின் கண்களிலும் கலக்கம்.

"கடை யாரும் வாடகைக்குத் தரவில்லை."

"கடை இல்லாம எப்படி?"

எம்.எல்.ஏ. சங்கரன் வருகைக்காகக் காத்திருந்தார்கள்.

அந்த இடம் குட்டி ரைஸ் மில், எம்.எல்.ஏவிற்கு சொந்தமானது.

மண்டித் தெருவிற்கு பக்கத்துத் தெரு. தெரு என்பதை விட சந்து. ஏழடி அகல சந்து. இடது பக்கம் வரிசையாக ஏழு கடைகளாய் ஏழு அறைகள். மூன்று அறைகளில் ஃபைனான்ஸ் நிறுவனங்கள் நடக்கிறது. இரண்டில் சைக்கிள் ஸீட் கவர் தைக்கும் கடை. ஒன்றில் தையல் மெஷின் பழுது பார்க்கும் கடை. இரண்டு அறைகள் ரைஸ் மில்லின் தேவைக்காக இருக்கிறது. ஏழு கடைகளுக்கு அடுத்து பெரிதாய் களம் இருக்கிறது. களம் முன்பு தானியங்கள் உலர்த்துவதற்காகப் பயன்படுத்தப்பட்டது. சங்கரன் தேர்தலில் நின்றபோது ஆஸ்பெஸ்டாஸ் கூரை போட்டு நிழல் ஏற்படுத்தி விட்டார்கள். அலுவலகமாகி விட்டது. ஏழடி வழி போக மீதி அனைத்தும் அலுவலகம். அதை யொட்டி அரிசி ஆலை.

அங்கேதான் காத்திருந்தார்கள்.

ஏழு மணி பத்து நிமிடத்திற்கு சலசலப்பும், ஒருவித பரபரப்பும் உண்டாயிற்று.

எம்.எல்.ஏ. சங்கரனின் கார் உள்ளே நுழைந்தது.

காரிலிருந்து இறங்கும்போதே எல்லோரும் மாறி மாறி கும்பிட்டார்கள்.

எல்லோருக்கும் பொதுவாய் கை குவித்தான் சங்கரன்.

இளைஞன். எழுச்சி மிக்க பார்வை. கதர்

உடையோ, கட்சி வேட்டியோ இல்லாமல் எளிமையான, சாதாரண உடையில் இருந்தான். கதர் அணிபவர்கள் அதுதான் எளிமை என்று சொல்வார்கள். ஆனால் அதை அழுக்குப் படாமல் பாதுகாக்க எடுக்கிற சிரமம், அலுங்காமல் குலுங்காமல் பொம்மை மாதிரி இருக்கிற நிலைமை, எளிமையானதெனச் சொல்ல முடியாது. ஒருநாள் உபயோகித்ததை மறுநாள் உபயோகிக்க முடியாது.

சங்கரனின் மனதிற்கு சந்தோஷம். தனக்கொரு கூட்டம் இருக்கிறதென்று. இதற்குத்தானே ஆசைப்பட்டுக் கிடந்தான். தனியாய், ஒத்தையாய் நிற்பவனை கலபத்தில் தோற்கடிக்க முடியும். கூட்டத்தோடு நிற்பவனை ஜெயிக்க முடியாது.

– இது சங்கரன் அனுபவத்தில் உணர்ந்த பாடம்.

பல நாள் தனக்கு துணை இல்லை துணை இல்லை என ஏங்கி இருக்கிறான்.

நீண்ட வருடங்கள் குழந்தையின்றி அப்பாவின் ஐம்பத்தைந்தாவது வயதில் தாமதமாகப் பிறந்தவன் சங்கரன். அப்பாவோடு மார்க்கெட் போனபோது 'உங்க பேரனா?' என்று கேட்டிருக்கிறார்கள். பிறர் மனம் நோவதைப் பற்றி மனிதர்களுக்குக் கவலை இல்லை. தன் மனதில் தோன்றும் கேள்வியைக் கேட்டேயாக வேண்டும் என கேட்டு விடுகிறார்கள். அப்பா சங்கரனை துணைக்கு அழைத்துப் போவதை விட்டு விட்டார்.

சங்கரனுக்கு பதிமூணு வயது. எட்டாம் வகுப்பு படிக்கும்போது அப்பா இறந்து போனார். பிஞ்சுக் கரத்தில் கொள்ளி போட்டு, பால் விட்டு, பிண்டம் கரைத்து, முடித்த கையோடு அப்பாவின் உறவுக்காரர்கள் அம்மாவைத் துரத்தினார்கள். சொத்தில் உரிமை இல்லை என்றார்கள். சங்கரனை வாரிசு இல்லையென்று வார்த்தையில் சுட்டார்கள். முப்பது வருடமா இல்லாத குழந்தை இப்போ எப்படி வரும்? நீ அவருக்குப் பெத்துக்கலை, எவனுக்கு பெத்தையோ அவன்கிட்டே போய் சொத்து கேளு. இங்கே வராதே... என்று கூறி அம்மாவையும், சங்கரனையும் துரத்தினார்கள். அம்மா தனி மனுஷி. சங்கரன் சிறுபிள்ளை. அப்பாவின் சொந்தக்காரர்கள் பெரும் படை. பெரும் படையை எதிர்த்து அம்மா என்ன செய்ய முடியும்?

செய்தாள்!

தனி மனுஷி. சிறுவனாக இருந்த சங்கரனைக் கையில் பிடித்துக் கொண்டு



***''தலைவர் இருந்தாலும் அநியாயத்துக்கு சகுனம் பார்க்கறாரு...''***

***''எப்படி?''***

***''அவரோட பாதுகாப்புக்கு இருந்த கறுப்புப்பூனை வீரர், குறுக்கே போனாக் கூட அப்செட் ஆகறாரு!''***

– பா. ஜெயக்குமார்

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

கோர்ட்டிற்கும், காவல் நிலையத்திற்கும் சார்பதிவாளர் அலுவலகத்திற்கும் அலைந்தாள். சொத்தை மீட்டாள்.

ஏழு கடைகளும், ரைஸ் மில்லும் கைக்கு வந்தன.

மண்டித் தெரு மகாராஜாக்கள், அப்பாவின் சொந்தம். சங்கரனின் எதிரிகள்.

சங்கரன் வளர்ந்தான். ஆளானான்.

கல்யாணம் செய்து முடித்து விட்டு அம்மா செத்து போனாள்.

அப்பா செத்தபோது ஆயிரக்கணக்கில் குவிந்த கூட்டம். அம்மா செத்தபோது சுத்தமாக இல்லை. அம்மாவும் சங்கரனைப் போல் ஒண்டி. அம்மாவின் சொந்தம் யாருமில்லை. இருந்தாலும் இருக்கலாம். அது சங்கரனுக்குத் தெரியவில்லை.

பக்கத்து வீடு, பழகியவர்களென்று இருபது, இருபத்தைந்து பேர்தான் இறப்புக்கு வந்தார்கள். மனைவி வகை உறவு அதில் ஐந்து பேர். பாடை கட்டினால் நான்கு புறம் தூக்குவதற்கு நான்கு பேர் கிடைக்க மாட்டார்கள் என்று கார்ப்பரேஷனில் அமரர் ஊர்தியை வாடகைக்கு எடுத்து வந்தான்.

அது பெரும் ரணம்.

ஆள் வேண்டும். ஜனம் வேண்டும். படை வேண்டும். உள்ளே வெறி கிளம்பிற்று.

வேண்டும் வேண்டும் என வேண்டுவது கிடைக்குமென்றால், என்ன செய்வது? பெரிதாய் தவிப்புடன் யோசிக்க, கிடைத்த பாதை அரசியல்.

பெரிய அரசியல் கட்சியிலிருந்து ஒரு தலைவர் பிரிந்து வந்து ஆரம்பித்த புதுகட்சியில் நுழைவது சுலபமாக இருந்தது. கொஞ்சம் பணம் செலவழித்ததும் மாவட்ட அளவில் கட்சியில் பொறுப்பு கிடைத்து. கட்சித் தலைவரின் பார்வையில் படும்படி பணியாற்ற எம்.எல்.ஏ ஸீட் கிடைத்தது. கட்சிக்குள்ளும் ஆள், படை என்று கோஷ்டி



## கிரிக்கெட் வீரர் நவாஸ் ஷரீப்!

**பாகிஸ்தானின் ஊடுருவல்காரர்கள் கார்கிலில் இந்திய ராணுவத்தைச் சமாளிக்க முடியாமல் திணறிக் கொண்டிருந்த போது கூட பாக். பிரதமர் நவாஸ் ஷரீப், கிரிக்கெட் ஆடிக் கொண்டிருந்தார் என்றால் ஆச்சரியமாக இருக்கும். பெரும்பாலும் சனிக்கிழமை பிற்பகலில், லாகூரிலுள்ள ஜின்னா மைதானத்தில் ஷரீப் கிரிக்கெட் ஆடுவதைப் பார்க்கலாம். தமது பங்களாவில் வேலைக்காரர்களுடனும் அலுவலர்களுடனும் ஷரீப் பல சமயங்களில் கிரிக்கெட் ஆடியதுண்டாம்.**

**ஷரீப், பிரதமரானவுடன் தமது பங்களாவையொட்டி இருந்த காஃல்ப் மைதானத்தை கிரிக்கெட் கிரவுண்டாக மாற்றிவிட்டார்.**

**இன்னொரு விஷயம் தெரியுமா? நவாஸ் ஷரீப் பாக். கிரிக்கெட் அணியில் இடம் பெற்றும் ஆடியதுண்டு. அப்போது ஷரீப், மேற்கிந்தியத் தீவுகளுக்கு எதிரான மாட்சில் ஆடியபோது ரன் ஏதும் எடுக்காமல் அவுட் ஆக்கப்பட்டார்.**

**சிறுவயதிலிருந்தே தீவிர கிரிக்கெட் விசிறியான நவாஸ் ஷரீப், ஒரு சமயம், பாக். ரயில்வேயில், தன்னை ஒரு சுமை தூக்கும் தொழிலாளியாக பதிவு செய்து கொண்டு அதன் மூலம் பாக். ரயில்வே கிரிக்கெட் அணியில் ஆடியதுண்டாம்.**

**– சி.எம்.**

பிரச்னை இருந்தது. புது கட்சி ஆட்சியைப் பிடிக்கிற அளவிற்கு ஜெயித்தபோது கோஷ்டி வைத்திருந்தவன் மந்திரி ஆனான்.

சங்கரன் வெறும் எம்.எல்.ஏ.

தனக்கும் படை இருந்திருந்தால் மந்திரி.

தன் பின்னாலும் ஒரு படை இருக்க வேண்டுமானால் அதற்கு சாராயம், பிராந்தி, திருவிழா முக்கியம் என்பது புரிந்து போனது. இல்லையென்றால் கல்வி வியாபாரம். கல்வியைக் காட்டி கொள்ளையடித்துத் தின்பதை விட பிராந்தி பரவாயில்லை என முடிவெடுத்தான். ஒரு பிராந்தி கடைக்காரன் நூறு உறவுக்காரர்களுக்குச் சமம். தன் நகரில் உள்ள பதினேழு பிராந்தி கடைக்காரர்களும் தன் ஆளாய் இருக்க எண்ணினான். 'நானிருக்கேன் ஏலம் கேளுங்கள்' என்று தூண்டி விட்டான்.

பணத்திலிருந்து எல்லா உதவிகளையும் செய்கிறேன் என்றான், உத்திரவாதமாய்...

குடும்ப எதிரிகளான மண்டித் தெருக்காரர்கள் மண்ணைக் கவ்வ வைக்க வேண்டும் என்கிற குரூரம் மனதில்.

ஏலம் எடுத்தாயிற்று.

பிராந்தி விற்கும் உரிமம் மட்டும் பெற்றால் போதாது. விற்பனைக் கூடம் அவசியம் வேண்டும்.

ஏலம் எடுத்தவர்கள் வந்து உட்கார்ந்து விட்டார்கள்.

எம்.எல்.ஏ. சங்கரன் அவர்கள் மத்தியில் வந்து உட்கார்ந்தான்.

"பெரிய இடங்கல்ல மோதக் கூடாதுங்க மண்டித்தெரு வியாபாரிங்க பிராந்தியில, பழம் தின்னு கொட்டை போட்டவங்க" ஒருவர் ஆரம்பித்தார்.

"நாமும் பழம் தின்னலாமே, கொட்டை போடலாமே. ருசி பார்க்கலாமே..."

மௌனமாயிருந்தார்கள்.

"என்ன பிரச்னைன்னு சொல்லுங்க..."

"வாடகைக்குக் கடை கிடைக்கலைங்க. ஒரு கடையும் கிடைக்கலை. காலியா வைச்சிருக்கிறவங்க கூட நாம போய் கேட்டா கடை வாடகைக்கு இல்லைன்னு கை விரிக்கிறாங்க..."

"அவ்ளோதானே பிரச்னை. கடைதானே பிரச்னை. நம்ம நகரத்துல கடை இல்லையா? நானே வந்து கேட்கிறேன்" சாதாரண விஷயமாய் எடுத்துக் கொண்டு சாதாரணமாய்ச் சொன்னான்.

தான் ஒரு எம்.எல்.ஏ - மக்கள் பிரதிநிதி என்கிற மிதப்பில் இருந்தான். இருபத்தஞ்சாயிரம் வோட்டு வித்தியாசத்தில் ஜெயித்தவன் என்கிற உறுதியில் சொன்னான். வோட்டு போடுவதற்கென்று இருக்கும் கூட்டம் வேறு. அந்தக் கூட்டம் அப்பாவிக் கூட்டம். தேர்தல் நேரத்தில் வீசுகிற காற்றைப் பொருத்து அந்தத் திசையில் போகிறவர்கள். அதன் பிறகு முகத்தை மறந்து விடுவார்கள்.

சங்கரனே புறப்பட்டான். நகரமே மண்டித் தெருவின் ஆளுமைக்குள் இருப்பது அப்போதுதான் புரிந்தது. இன்னொன்றும் புரிந்தது, எம்.எல்.ஏ என்பது வெற்றுப் பதவி என்பது.

வெறித்தனம் ஒன்று உள்ளுக்குள் நுழைந்து சிவந்தது. முறியடிப்பதற்கு பெரிய வியூகம் வகுத்தான்.

(தொடரும்)

# கொசுப் பொறுக்குப் புறப்பட்ட அமைச்சர்!

**மாதுரி**

ஆட்சியில் அதே பழைய கட்சி; ஆனால் புதிய சந்தோஷத்துடன். புத்தம் புதிய சுகாதார அமைச்சர் ராஜேந்திர குப்தா, நடுத்தர வயது நடுநிலையாளர். டாப்டு பாட்டம் அப்பழுக்கற்ற சுத்தமானவர்.

நாட்டிற்கு ஏதாவது நன்மை செய்தாக வேண்டும். நிலைத்து நீடித்திருக்கும்படியான நன்மை. பதவிப் பிரமாணம் எடுத்த நெஞ்சோடு ஓடிய முதல் எண்ணம்.

"ஆகாரத்தை விட முக்கியமானது சுகாதாரம். நம்ப நாட்டைச் சுத்தமா சுத்தப் படுத்த வேண்டும்" என்று தமது பிரதான செயலாளர் ஜில்லு பிரகாஷிடம் சொன்னார். ஜில்லு, எள் என்றால் எண்ணெய்யாக நிற்பேன் என்று இறுமாப்பு பேசும் பவர்ஃபுல் செயலாளர்.

மறுநாள் காலை ஒன்பது மணி, டாணென்று ஆபிசிலிருந்தார் குப்தா. லேட்டாக வந்த ஜில்லு, "சார், உங்களைப் பார்க்க பல தொழிலதிபர்கள் வந்திருக்காங்க" என்றான்.

"தொழிலதிபர்களா? யாரு?"

"வாஷிங் பவுடர், ப்ளீச்சிங் பவுடர், ஃபீனைல், ஆசிட், பூச்சி மருந்து, ஒட்டடைக் கொம்பு... இதெல்லாம் தயாரிக்கிற முதலாளிகள்" - கபடமாகச் சிரித்தான்.

"தொழில் துறை மந்திரின்னு என்னைத் தப்பா நினைச்சிருப்பாங்க. நீ சொல்லி அனுப்பிடு!"

"இல்ல சார் நான்தான் வரச் சொன்னேன்!"

"நீ வரச் சொன்னியா?"

"யெஸ் சார். முதல் வேலையா நாட்டைச் சுத்தப்படுத்தணும்னு நீங்க சொன்னீங்களா, எள்ளுன்னா எண்ணெய்யா நிப்பேனா நான்."

"மிஸ்டர் ஜில்லு! நாடென்ன பாத்ரூமா நீங்க நினைக்கிற மாதிரி க்ளீன் பண்ண?" பொறிந்தார். "அவங்கள உடனே அனுப்பிட்டு நீங்களும் போயிடுங்க!"

"சார்?"

"யெஸ், அவுட்!"

இதுபோன்ற அரைகுறை அதிகாரிகளை வெளியேற்றி முதலில் நம் அலுவலகத்தை சுத்தப்படுத்த வேண்டும். அதே சமயம் எதையும் சிராக சாதிக்க நல்ல டீம் (அணி) வேண்டும், பக்கத் துணை புத்திசாலியாக இருத்தல் அவசியமென நினைத்தார்.

உடனே பளிச்சென்று மனத்தில் தோன்றினான் மனோஜ் குப்தாவின் பள்ளிக்காலத்து நண்பன். மேல்நாட்டு எம்.பி.ஏ. உள்நாட்டில் ப்ரொபசர்.

அடுத்தகணம் பிரதான செயலாளராக பதவியுமேற்றார்.

"ராஜ், நம்ம கஸ்டமர் மக்கள். அவங்க திருப்தியடைஞ்சா உனக்கு வெற்றி. அதனால பர்ஸ்ட் அவங்களோட பிரச்னைகளை கேட்டு அறியணும். நேரா நீ அவங்கள சந்திக்கணும். 'மீட் மக்கள்' ஷுட் பி தி பர்ஸ்ட் ஸ்டெப்."

உழைக்கும் மந்திரியைக் கண்டு மக்கள் வியந்தனர். ஒரே மாதத்தில் 'மீட் மக்கள்' நிறைவேறியது.

பிரச்னைகள், குறைபாடுகள் கம்ப்யூட்டரில் க்யூவில் நின்றன. நாடெங்கிலும் தலையாய பத்து பிரச்னையில், "கொசுக்கள் - அதன் கொட்டங்கள்" ஜாதி, மத, பாஷை, ஏழை, பணக்கார வேறுபாடுகளைக் கடந்து முதலிடத்தைப் பிடித்தது. பாகிஸ்தானை சேர்ந்த ஐ.எஸ்.ஐ.யை ஒழித்தால் உண்டாகும் நன்மையை விட பன்மடங்கு நன்மை, கொசுக்களை ஒழித்தால் கிடைக்கும் என்று கம்ப்யூட்டர் கண் சிமிட்டியது.



"ராஜ், முதல் ப்ராப்ளம் identified. இதுல நாம ரும்ப விட்டு வாலை பிடிக்கக் கூடாது. கொசுக்களை பறக்க விட்டு விரட்டறது முட்டாள்தனம். அவைகளை பூண்டோடு ஒழிக்கணும்" என்றார் மனோஜ்.

ஆமோதித்த குப்தா இந்தத் துறையில் ரீங்காரமில்லாமல் ஆராய்ச்சி செய்யும் விஞ்ஞானிகளில் நான்கு பேரைக் கொண்ட கமிட்டி அமைக்க ஏற்பாடு செய்தார். தாமதமின்றி சுறுசுறுப்பாக முதல் கூட்டம் தொடங்கியது.

"மிஸ்டர் மனோஜ், தண்ணீர் குட்டை குட்டையா தேங்கக் கூடாது, கழிவுநீர்க் கால்வாய்கள் மூடியிருக்க வேண்டும்'' என ஆரம்பித்தனர் கமிட்டி மெம்பர்ஸ்.

''இது எல்லாருக்கும் தெரியும். ஒவ்வொரு இடமா போய் செக் பண்ண ஆட்சியில் இருக்கிற அஞ்சு வருஷம் போதாது. I want quick results! நம்ம நாட்டோட கொசுத் தொகை 98765432123456789! சராசரியா ஒரு மனிதனுக்கு எழுநூற்றி நாற்பத்தெழு கொசு இருக்கு. ஒரு மாசத்தில இத அஞ்சா குறைக்கணும்."

"அஞ்சு ஏன்?"

"அப்ப ஒருத்தர் அத கையாலயே அடிச்சு கொன்னுடலாம்."

"க்ரேட்."

"ஓகே! வழி சொல்லுங்க."

சற்று நேரம் அமைதி நிலவியது. ஒருவர் ஆரம்பித்தார்.

"Mass Destruction முறைகள்ள பெயர் பெற்ற சைன்டிஸ்ட் டாக்டர் ரேங்க்னு அமெரிக்காவில் இருக்கிறார்... அவர்..."

முடிப்பதற்குள் போன் பறந்தது.

"டாக்டர் ராங்க்?"

"யியா!"

''குட்மார்னிங்! திஸ் இஸ் மனோஜ், பி.ஏ. டு ஹெல்த் மினிஸ்டர் ஃப்ரம் இண்டியா."

''இண்டியா! ரியலி? கடவுளே வாட் எ ப்ளசண்ட் சர்ப்ரைஸ்?" குதூகலித்தார் ராங்க்.

"நீங்க இண்டியனா?"

"யியா யியா! இந்தியத் தமிழன். டாக்டர் ரங்காச்சாரி சடகோபன்..."

''டாக்டர் ரேங்க்னு

> "மகாத்மா காந்தி அஹிம்சையை போதித்தார். கையாண்டார். அவர் பேர் கொண்ட காந்திபுரத்தில் அப்பாவிக் கொசுக்களை கோடிக்கணக்கில் அழிப்பதா? அதுவும் அணுசக்தியாலா? அலறியது"

எப்படி?"

"யு.எஸ்.லதான் எல்லாத்தையும் சுருக்கிடுவாங்களே. ரொம்ப நாள் என்னை டாக்டர் சடைன்னு கூப்பிட்டு வந்தாங்க, நல்லா வாயிருக்கு? நான்தான் அப்புறம் ரேங்க்னு மாத்திட்டேன். லீவ் தட் அசைட், உங்க சமாச்சாரம்?"

"யெஸ். இந்தியால ஒரே கொசுத் தொல்லை. நீங்க கொசுக்களை ஒட்டு மொத்தமா அழிக்க நூதன முறை கண்டு பிடிச்சதா கேள்விப்பட்டோம்."

"ய்யா! பேடண்ட் இருக்கு. உலகப் போர்ல அமெரிக்கா ஜப்பான் மேல அணு குண்டு போட்டாங்க பாருங்க, அதோட பவரை $10^{16}$ முறை குறைச்சு கையால ஸ்ப்ரே செய்யற மாதிரி மினி சக்தி! ஒரு



"மனைவி ஊருக்குப் போனதுல உங்களுக்கு என்ன சார் இவ்வளவு சந்தோஷம்?"

"அவ இஷ்டத்துக்கு சமைக்காமல் எனக்குப் பிடிச்சதை சமைச்சுக்கலாமே!"

– சீர்காழி வி. ரேவதி

கொசுவும் தேறாது!"

"அணுசக்தியா? கொசுவ கொல்ல அணுசக்தியா?"

"ஒய் நாட்? அணுசக்தி இஸ் எ க்யூட் பவர். எதற்கு வேணாலும் பயன்படுத்தலாம். மின்சாரம் தயாரிக்கலாம், மக்களை அழிக்கலாம், சாட்டிலைட் விடலாம், சமையல் செய்யலாம்... ஆனா ரொம்ப ஜாக்கிரதையா கையாளணும். கிட்டத்தட்ட பெண்களைப் போல!"

"அற்புதமான கம்பாரிஸன்!"

"எதுவுமே புதுசில்ல மிஸ்டர் மனோஜ். புராண காலத்து ரிஷிகள் இந்தச் சக்தியத் தான் வைச்சிருந்தாங்க. கோபம் வந்தா சாபம் கொடுத்து ஆளப் பொசுக்கிடுவாங்க, சந்தோஷப்பட்டா ஃபவர்புல் ஆயுதங்க வரவழைப்பாங்க, திடீர்னு பறப்பாங்க..."

"உண்மை டாக்டர். உங்க மினி அணுசக்தி விவரங்களை ஈமெயில்ல உடனே அனுப்பி வைக்கறீங்களா?"

"கொசுவ அழிக்க ஈமெயிலா? குட்" சிரித்தபடி விடைபெற்றார்.

வெற்றிகரமாகச் செயல்படும் வரை 'War on Mosquitos" (WOM) திட்டம் ரகசியமாக இருக்க வேண்டுமென்பது ராஜேந்திர குப்தாவின் கட்டளை. ஆனால் விஷயம் மெதுவாகக் காற்றில் பரவத் தொடங்கியது.

நாட்டில் கொசுக்கள் மிக அதிகமாயிருப்பது ஒரிஸ்ஸாவில் காந்திபுரமென்பதால் அது பரிசோதனைக் கூடமாகத் தேர்வு செய்யப்பட்டது. ஆளை தூக்கிச் செல்லும் அளவிற்கு ஒருத்தருக்கு 8475 கொசு என்ற விகிதம் இப் பெருமையை காந்திபுரத்திற்கு வாங்கித் தந்தது.

விவரம் கொசுவர்த்திச் சுருள், மேட், ஆயின்ட்மென்ட் தயாரிப்பாளர்களுக்கு எட்ட, விரைவில் தங்கள் பல நூறு கோடி வியாபாரம் பஸ்மமாகி விடும் என்ற பீதியில் உட்பூசல், போட்டி மறந்து ஒன்றுசேர்ந்தனர்.

சூட்கேஸ்கள் சகிதம் எதிர்க்கட்சியிடம் தஞ்சம் புகுந்தனர். அந்தக்கணமே கொசுப் போர் கொரில்லா போரானது!

"மகாத்மா காந்தி அஹிம்சையை போதித்தார், கையாண்டார். அவர் பேர் கொண்ட காந்திபுரத்தில் அப்பாவிக் கொசுக்களை கோடிக்கணக்கில் அழிப்பதா? அதுவும் அணுசக்தியாலா?" அலறியது எதிர்க்கட்சி.

"காந்திபுரத்து மக்கள் யார்? மாமன்னன் சாலமன் வழிமுறை. எறும்பிற்குக் கூடத் தீங்கிழைக்காதவர். எறும்புச் சாரி மிதிபட்டு சாகக் கூடாதென்று படையையே வேறு வழியில் நடத்திச் சென்ற மாமன்னன். இவர்கள் சிறுபான்மை மக்களென்பதால் இங்கு கொசுக் கொலை சதியா?" அவர்கள் பங்கிற்குக் கொதித்தெழுந்தனர் மதகுருக்கள்.

"அணுசக்தியைக் கையாளும் தொழிலாளர் கதியென்ன, அணு அணுவாக சித்திரவதைப்பட்டு சாக வேண்டியதுதான்" என்று முழங்கின தொழிற்சங்கங்கள்.

மக்களுக்கு நல்லது செய்ய வேண்டுமென்று நினைப்பது தவறா? இந்த புல்லுருவிகளை ஒருகை பார்க்கிறேன் பார் என வெகுண்டார் குப்தா.

மனோஜ் அவர் கோபத்தைக் குறைத்தான்.

"ராஜ், இன்னும் யார் யார் எதிர்ப்பு தெரிவிக்கிறாங்க பார்ப்போம். அப்புறம் பதிலடி பத்தி யோசிப்போம்" என்றார். எதிர்பார்த்தது வீண் போகவில்லை.

"கொசுக்களுக்கு ஆஜராக யாருமில்லே

என்ற திமிரா? ஆனந்தமாப் பாடிப் பறந்து திரியும் கொசுக்களை அழிக்க மனிதனுக்கு என்ன உரிமை இருக்கு? அவை அழிந்தால் ஏழை எளியவர்க்கு இரவு நேரம் இன்னிசை யற்ற நரகமாகி விடும்!'' கர்ஜித்தார் முன்னாள் வனவிலங்கமைச்சர்.

''ராட்சஸக் கொசுவை தெய்வமாக வணங்குகிறார்கள் பேக்கா எனும் காட்டு ஜாதி மக்கள். அவர்கள் நம்பிக்கையில் ஈட்டி பாய்ச்சலாமா?''

நடக்கும் கூத்தைக் கவனித்த பிரதமர் குப்தாவை அழைத்தார்.

''ராஜேந்தர், சிறுபான்மை மக்கள் மனசு நோகக் கூடாது, வனவிலங்கு சட்டத்தை மீறக் கூடாது, தொழிலாளர் நலம் மிக முக்கியம். தப்பித் தவறி காந்தி சொன்னதிற்கு எதிராக போயிடக் கூடாது. எல்லாத்துக்கும் மேலா கொசுக்களால நம்ம ஆட்சி கவிழக் கூடாது. என்ன செய்வியோ, பார்த்துச் செய். எல்லாரையும் கலந்து செய்!'' குப்தா பேச விழையும் முன் மீட்டிங் முடிந்தது.

திட்டத்தை எப்பாடுபட்டாவது நிறை வேற்ற வேண்டுமென பதறியது குப்தாவின் நெஞ்சம்.

''மனோஜ் இதுக்கு நிச்சயமா ஏதாவது வழி இருக்கும். கூப்பிடு கமிட்டியை'' என்றார்.

கூடியது கமிட்டி. விவாதித்தது.

மிஸ்டர் மினிஸ்டர், கொசுக்களை சாகடிக்காமல் செயலிழக்கச் செய்ய இரண்டு வழி இருக்கு. ஒண்ணு கொசுக் களுக்கு கருத்தடை செய்யலாம்!''

''என்ன கருத்தடையா?''

''ப்ளீஸ், முழுக்கக் கேளுங்க. சமீபத்தில ஓர் அமெரிக்க நிறுவனம் நம்ம நாட்டில, பயிர்கள் மேல ஓர் ஆராய்ச்சி நடத்தி னாங்க. அவங்க தயாரிச்ச உபயோகிக்கற உரத்தினால் செடிகள் விதை விடும். ஆனா அவை மலடாயிருக்கும். மலட்டு விதைகள் மறுபடியும் நாற்று தர முடியாது. இதே முறையைப் பயன்படுத்தினால் மெதுவாகக் கொசு வர்க்கமே அழிந்து விடும்.''

''அடுத்த வழி?''

''பாம்போட வாயைக் கட்டற மாதிரி, கொசு கடிச்சு இரத்தம் உறிஞ்சும் குழாயை அடைச்சிடலாம். அதற்கப்புறம் கொசு கடித்தாலும் நோய் பரவாது. வீட்டு விலங்கு போல கொசு நம்ம மேல உருண்டு புரளும். ஆனா எந்தத் தீமையும் விளைவிக்காது.''

பிரதமர் கட்டளைப்படி எதிர்க்கட்சி, கூச்சலிட்ட கோஷ்டி அனைவரையும் கலந்து ஆலோசித்தார்.

கொசுக்களின் ஒப்புதல் இல்லாமல் அவற்றை மலடாக்கி, இறைவனின் படைப்பில் ஒன்றை ஒழிக்க யாரும் இணங்க வில்லை. மாறாக,

வாயைக் கட்டுவது பிடித்த தொழிலென் பதால் கொசுக்களின் வாயை அடைக்க சம் மதித்தனர்.

பச்சைக் கொடி காட்டிய மாத்திரம் ஆயத்த வேலையில் இறங்கினார் மனோஜ். ப்ளான் தயாரானது. திட்டச் செலவு கணக் கிற்கு வந்த போது கம்ப்யூட்டர் அதிர்ச் சியை அள்ளித் தெறித்தது.

இந்தச் செலவிற்கு பல நூறு ஜென்மம் கொசுக்களோடு கூட்டுக் குடும்பமே நடத்தலாம் என்ற முடிவிற்கு வந்தார். சே! எல்லா முயற்சியும் விழலுக்கிறைத்த நீரா?

''கொசுக்களைக் கூட அழிக்க வக்கில் லாத ஆளுங்கட்சி நாட்டை எப்படி பாதுகாக்க முடியும்?'' என்ற எதிர்க்கட்சியின் கோஷம் குப்தாவிற்கு கேட்டது.

ஏதோ எழுதிக் கொண்டிருந்தார். ஒரே ஒரு கொசு அவர் முகத்தை வட்டமிட்டு எரிச்சலூட்டியது. கடுப்பில் பட்டென்று அதை அடித்துக் கொன்றார்.

''என்னால் முடிந்தது!'' என்று தனக்குத் தானே கூறிச் சிரித்தபடி ராஜினாமாவில் கையெழுத்திட்டார்.

''விஞ்ஞானம் வளர்ந்திருக்கிறது. ஆனால் அரசியலை வெல்லுமளவிற்கில்லை'' என்று எழுதிவிட்டு இறுதியாக ஒருமுறை தன் அறையைப் பார்த்துவிட்டு வெளியேறி னார். ●



''எதுக்கு தயாரிப்பாளர் கதாசிரியரிடம் கோபமா இருக்கார்?''

''தான் எடுக்கப்போற அஞ்சு படங்களுக்கு நல்ல 'டைட்டில்' கேட்டப்போ, ''என் வீட்டுத் தோட்டத்தில்'', ''என் வீட்டு ஜன்னல் கம்பி'', ''என் வீட்டுத் தென்னங்கீற்று'' ''இப்போதே கேட்டுப்பார்'' ''எல்லாமே கேட்டுப்பார்'' என அஞ்சு டைட்டில்ஸ் கொடுத்திருக்கிறார்!''

—ஓம்பிரகாஷ்

● எஸ். கதிரேசன், பேரணாம்பட்டு.

? *வோட்டுப் போடாதவர்களுக்குச் சட்டப்படி ஏதேனும் ஒரு சிறிய தண்டனை வழங்க இந்திய அரசியல் சட்டத்தை மாற்றி அமைக்கலாமே?*

! முதலில், லஞ்சம் வாங்கும் அரசியல்வாதிகள் தண்டனை பெற்று அனுபவிக்கிற அதிசயம் நடக்கட்டும். வோட்டுப் போடுபவர்களே இந்த விஷயத்தில் சறுக்குகிறார்களே!

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

? *கேப்டன் பதவிக்கு டெண்டுல்கரை விட ஜடேஜா பொருத்தமானவர் என்று மாதவராவ் சிந்தியா கூறியுள்ளாரே?*

! கடந்த கால அனுபவங்களின் அடிப்படையில் பார்த்தால் அப்படித்தான் தோன்றுகிறது.

● சூர்யநிலா, சேலம் – 2.

? *'பாரதியார், பாரதிதாசன், உடுமலை நாராயணகவி, பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், கண்ணதாசன் ஆகிய ஐவரின் ஒட்டுமொத்த உருவம்தான் வைரமுத்து' என புகழ்கிறாரே சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி கற்பக விநாயகம்?*

! நீதிபதி சற்று தாராளமாகவே புகழுரைகளை வழங்கக்கூடியவர் – கற்பகம் அல்லவா! அது போக, வைரமுத்து மற்றவர்கள் போலன்றி வைரமுத்துவாக இருப்பதுதான் அவரது தனிச்சிறப்பு என்று நான் கருதுகிறேன்.

● கே. வி. ராமன், சென்னை – 73.

? *திருப்பதி லாடுகள் திருட்டாமே? தேவஸ்தானத்துக்குப் பதினெட்டு லட்சம் நஷ்டமாமே?*

! இறைவனுக்கு இதைவிடப் பெரிய அபகாரம், தரிசனத்துக்குச் சென்ற பக்தர்களை விரைவில் வெளியேற்றுகிறேன் பேர்வழி என்று சிப்பந்திகளே தள்ளிக் காயப்படுத்தியது. ஒருத்தர் இறந்தே விட்டார்.

● பி. பத்மாவதி, கோவை – 9.

? *முடி வெட்டுதல், குளித்து விடுதல், என்று லாலு வேடிக்கை காட்டினார். குடிசையில் கஞ்சி குடித்தல், தெருக்கடையில் இனிப்பு சாப்பிடுவது என்று ப்ரியங்கா நாடகம் ஆடினார். இந்த ஏழை பங்காளர்களுக்குத் தேர்தல் முடிந்ததும் எல்லாம் மறந்து போகிறதே?*

! மறந்து போவதுடன் நின்றால் பரவாயில்லையே! ஆட்சி அமைக்கப்பட்ட பிறகு, இந்த ஏழைகளின் வயிற்றில் அடிக்கும் ஊழலில் ஈடுபடுகிறார்களே, அதைத்தான் மன்னிக்க முடியாது!

● கு. நா. இராஜேஸ்வரன், மொரட்டுப் பாளையம்.

? *மரண வாக்கு மூலம் மட்டுமே வலுவான சாட்சியமாகாது என்று உச்சநீதிமன்றம் கூறியுள்ளது குறித்து?*

! உண்மைதான். முன்பெல்லாம் சாகும் தருவாயில் இருக்கும் ஒருவன் செத்த பிறகு நல்ல கதியடைய வேண்டும் என்பதால் பொய் சொல்லமாட்டான் என்ற நம்பிக்கை பலருக்கும் இருந்தது. இப்போது அந்த நம்பிக்கைக்குக்கூட இடமில்லாத வகையில் தார்மிகச் சீர்குலைவு ஏற்பட்டு விட்டது!

• தலைமைத்...



• ...தகுதி



• வேடிக்கை;



• நாடகம்!



**கே. ஆர். உதயகுமார், சென்னை – 1.**

? ***'அ.தி.மு.க.வினர் கோர்ட் படி ஏறுவது சின்ன வீடு மாதிரி' என்று நடிகர் ராதா ரவி பேசியிருப்பதைக் கவனித்தீரா?***

! கட்சிக்கென்று மிச்சமுள்ள கொஞ்சநஞ்ச கௌரவத்தையும் குழிதோண்டிப் புதைக்க முடிவு செய்து விட்டனர் போலிருக்கிறது.

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் : பி. பத்மாவதி,
கதவிலக்கம் 165, சாஸ்திரி வீதி, ராம் நகர், கோவை - 641 009.


• தனியானவர்


• 'முத்து'வின் காந்தம்!


• மமியார் பிரதமர்!


• குழி தோண்டுபவர்!

● வி. சிவா, மதுரை.
? 'ரஜினியின் 'முத்து' பட சாதனையால் பல மடங்கு சுற்றுலாப் பயணிகள் இந்தியா வரத் துவங்கியுள்ளனர்' என்ற செய்தி பற்றி...?
! ஜப்பானிய பயணிகள் மட்டும்தானே? மற்ற நாடுகளிலிருந்தும் வரவழைக்க சுற்றுலாத் துறை சுறுசுறுப்பாக உழைக்கத்தான் வேண்டும்.

● சு. சாந்தி, காட்பாடி.
? கிராமத்து மாமியாரைப் போல் மேனகாவை இந்திரா காந்தி கொடுமைப்படுத்தியதாக குஷ்வந்த் சிங் கூறியிருப்பது பற்றி...?
! நாட்டையே எமர்ஜென்ஸி கொடுங்கோன்மைக்கு உட்படுத்தியவருக்கு அது ஒன்றும் பெரிய விஷயமில்லை.

● கே. ஆர். உதயகுமார், சென்னை - 1.
தொலைபேசி எண்ணையும் வைக்கப் போவதாக கேரள அரசு அறிவித்துள்ளது. தமிழகத்திலும் இந்த முறையைப் பின்பற்றலாமே?
! போர்டு எழுதி வைப்பதில் லஞ்சம் புகாமலிருந்தால் சரி.

● எஸ். வெங்கடேசன், கிருஷ்ணகிரி.
? டில்லியில் எம்.பிக்கள் தத்தமது வீடுகளிலிருந்து பாராளுமன்றம் வருவதற்கு எட்டு ஏ.ஸி. பஸ்கள் வாங்கப்பட்டுள்ளது பற்றி...?
! டெல்லியில் வெயில் கொடுமை அதிகம். எனவே எம்.பிக்களுக்கு ஏ.ஸி. பஸ் என்பது சொகுசு அல்ல. அவர்கள் பாராளுமன்றத்துக்குப் பாதி சமயம் வருவதில்லை; வந்தாலும் உபயோகமாய் எதுவும் பேசுவதில்லை என்பதுதான் குறை.

● வி. பி. மகராசி, மதுரை - 16.
? நம் நாட்டில் வறுமை ஒழிப்புத் திட்டங்கள் படுதோல்வியடைந்து விட்டதாக உலக வங்கி ஆய்வறிக்கையில் தெரிவித்துள்ளது பற்றி?
! வறுமை ஒழிப்பு என்றால் இலவசங்களை அள்ளித் தருவதுதான் என்ற ஆட்சியாளரின் அறியாமை ஒழியும்போது தான் இங்கே வறுமையும் குறையும்.

# எம்.பிக்களுக்கு 8 ஏ.ஸி. பஸ்கள் வாங்கியது பற்றி?

? 'அ.தி.மு.க.வினர் கோர்ட் படி ஏறுவது சின்ன வீடு மாதிரி' என்று நடிகர் ராதா ரவி பேசியிருப்பதைக் கவனித்தீரா?
! கட்சிக்கென்று மிச்சமுள்ள கொஞ்சநஞ்ச கௌரவத்தையும் குழிதோண்டிப் புதைக்க முடிவு செய்து விட்டனர் போலிருக்கிறது.

● ஜெ. கண்ணன், சென்னை - 101.
? அரசு அலுவலகங்களில் லஞ்ச எதிர்ப்பு வாசகங்களையும் லஞ்ச ஒழிப்புத் துறை

! பொருளாதார மேதைகள் கவனிக்க வேண்டிய விஷயம். சுயநலமிகள் கையில் சிக்கியிருக்கும் போது விடிவு காலம் ஏது?

● ஆர். மாதவராமன், கிருஷ்ணகிரி.
? அரசியல் துறையில் பெண்களை அனுமதித்தபின் அவர்கள் செய்கின்ற ஊழல்களை எதிர்ப்பது எவ்வகையில் நியாயம் தராசாரே?
! நன்றாயிருக்குதே நீங்கள் சொல்வது! பெண்கள் என்பதால் ஊழல் செய்வதைக் கண்டு பூரிக்கவா முடியும்!

# பிதர்களுக்கு சிராத்தம்



# ஏன்? அவசியம் செய்ய வேண்டும்

சிராத்தம் போன்ற சடங்குகள் உண்மையில் பிராண ஜீவனுக்காகவே செய்யப்படுகின்றன. ஜீவனுடைய பிராண அதிர்வுகள் அதைப் பிராண லோகங்களுடன் அல்லது பூலோகத்துடன் தளைப்படுத்துகின்றன. அந்த அதிர்வுகளை நீக்குவதற்கு இந்த சடங்குகள் ஜீவனுக்கு உதவுகின்றன. இதனால் ஜீவன் சைத்திய சாந்தத்தில் ஓய்வெடுக்க விரைவாகச் செல்வது இயலும்.

—ஆதாரம் வைகறை 1991-92



# லிங்தோ மீடியாக்கள் கண்டுகொள்ளாததேன்?



**ஜே.**எம். லிங்தோ. இவர் இந்தியாவின் தேர்தல் கமிஷனர் என்பது இந்திய வாக்காளர்கள் எத்தனை பேருக்குத் தெரியும்?

தலைமைத் தேர்தல் கமிஷனர் எம்.எஸ். கில்லுக்குக் கீழே இரண்டு தேர்தல் கமிஷனர்கள் உண்டு. அவர்களுள் ஒருவர் செப். முப்பதாம் தேதியுடன் ரிடையர் ஆன ஜி.வி.ஜி. கிருஷ்ணமூர்த்தி என்பது அனைவருக்கும் தெரியும். இன்னொரு தேர்தல் கமிஷனர்தான் ஜே.எம். லிங்தோ. ஓய்வுபெற்ற ஐ.ஏ.எஸ். அதிகாரி. மேகாலயாவைச் சேர்ந்தவர். அரசியல்வாதிகளின் பிரஷர்களுக்கு வளைந்து கொடுக்காத மிக நேர்மையான அதிகாரி என்று பெயரெடுத்தவர்.

இவர் தேர்தல் கமிஷனர் ஆனது கூட சுவாரசியமான கதைதான். தேவேகௌடா பிரதமராக இருந்த சமயம், வங்கிகளில் நடக்கும் ஊழல்கள் பற்றி விசாரிக்கும் அமைப்பின் தலைவர் பதவிக்கு, அப்பழுக்கில்லாத, நேர்மையான அதிகாரி ஒருவரை, நிதி அமைச்சகம் தேடிக் கொண்டிருந்தது. ஒருவழியாக ஜே.எம். லிங்தோவைக் கண்டுபிடித்தனர். ஆனால், அவரை அனுப்புவதற்கில்லை என்று மத்திய அரசு கூறிவிட்டது. அடுத்த சில தினங்களில் லிங்தோ, ஓய்வுபெற, அவரைப் பிடித்து, தேர்தல் கமிஷனராக நியமித்து விட்டது.

இவர், தேர்தல் கமிஷனர் பதவிக்கு முற்றிலும் தகுதியானவர்தான் என்றாலும், இவரைத் தேர்தல் கமிஷனராக நியமித்ததில் அரசியல் காரணமும் உண்டு என்பது பலரும் அறியாத ரகசியம். அது என்ன?

தேவேகௌடா தமது அமைச்சரவை விஸ்தரிப்பின் போது, பேராசிரியர் ஜி.ஜி. ஸ்வெல் என்ற மேகாலயா அரசியல் தலைவரை அமைச்சராக்கப் போவதாகத் தெரிவித்தார். அதனைத் தொடர்ந்து பேராசிரியர் ஸ்வெல், தமது நெருங்கிய நண்பர்களை அழைத்து, ஒரு விருந்தும் அளித்து மகிழ்ந்தார். ஆனால் காற்று திசை மாறியது. திசை மாற்றத்துக்குப் பின்னணியில் இருந்தவர் அப்போதைய லோக் சபாவின் சபாநாயகரான பி.ஏ. சங்மா. தமது மாநிலத்தைச் சேர்ந்த இன்னொரு அரசியல்வாதி முக்கியத்துவம் பெறுவதை சங்மா விரும்பவில்லை.

> **“அப்போதைய லோக் சபாவின் சபாநாயகரான பி.ஏ. சங்மா, தமது மாநிலத்தைச் சேர்ந்த இன்னொரு அரசியல்வாதி முக்கியத்துவம் பெறுவதை விரும்பவில்லை.”**

இதன் பிறகுதான் மேகாலயா மக்களையும் சங்மாவையும் ஒரே சமயத்தில் திருப்திப்படுத்தும் வகையில், லிங்தோவை தேர்தல் கமிஷனராக்கி விட்டார்கள்!

**அ**ரசு அதிகாரிகளிலேயே லிங்தோ மிகவும் வித்தியாசமானவர். ஆபீஸ் டெலிபோனை சொந்த உபயோகத்துக்காகப் பயன்படுத்தினால், உடனே அதற்கான கட்டணத்தைச் செலுத்தி விடுவார் திருமதி லிங்தோ. ஒரு தடவை கூட கணவரது அலுவலக காரை ஷாப்பிங் பண்ண எடுத்துக் கொண்டு போனது கிடையாது. இவர் சுற்றுலாத் துறைச் செயலாளராக இருந்த போது, சுற்றுலா வளர்ச்சி என்ற பெயரில் அரசாங்க வருவாயைத் தடுத்து நிறுத்திவிட்டு, தனியார்கள் லாபம் பெற வழி செய்யும் பல திட்டங்களுக்கு அனுமதி மறுத்தவர்.

டி.என். சேஷன் தலைமைத் தேர்தல் கமிஷனராக இருந்த போது, அவருக்குக் கீழ் இருந்த எம்.எஸ். கில், ஜி.வி.ஜி. கிருஷ்ணமூர்த்தி இருவருமே மீடியாவின் வெளிச்சத்தில் இருந்தனர். ஆனால், கில், த.தே. கமிஷனரான பிறகு ஜி.வி.ஜி. போல, லிங்தோ மீது மீடியா வெளிச்சம்படவில்லையே! இது ஏன்?

— கௌதம்

பல நாட்கள் பள்ளிக்கூடத்துக்கு மட்டம் போட்டுவிட்டு மேஜிக்கே கதி என்று இருந்து விட்டதன் விளைவு, போதிய அளவு அட்டன்டென்ஸ் இல்லை என்று கூறி, மெட்ரிக் பரீட்சை எழுதுவதற்கு எனக்கு அனுமதி மறுக்கப்பட்டது. விஷயம் என் வீட்டுக்குத் தெரிந்தபோது என் அப்பாவுக்கு ஒரே கோபம். "என்மீது எனக்கு நம்பிக்கை இருக்கிறது. இதுவரை நான் எந்தப் பாடத்திலாவது பெயில் ஆகியிருக்கிறேனா? நீங்கள் தலைமை ஆசிரியரிடம் சொல்லி, நான் பரீட்சை எழுதுவதற்கு ஸ்பெஷல் அனுமதி வாங்கிக் கொடுத்து விடுங்கள். நான் பள்ளிக்கூடம் போகாமல் விட்டது தவறுதான். ஆனால் இப்படி ஒரு பெரிய பிரச்னை வரும் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை. என் தவறைப் பொறுத்துக் கொண்டு, தலைமை ஆசிரியரிடம் நீங்கள் ஒரு தடவை பேசினால், அவர் அனுமதி கொடுத்து விடுவார். தயவு செய்து பேசுங்கள்" என்று கெஞ்சினேன்.

நான் இவ்வளவு தூரம் கெஞ்சியதற்குக் காரணம் இல்லாமல் இல்லை. நான் படித்த ஆங்கிலோ-குஜராத்தி பள்ளிக்கூடத்தின் நிர்வாக போர்டில் என் அப்பா ஒரு முக்கிய பொறுப்பில் இருந்தார். நிர்வாக போர்டு முக்கியஸ்தர் ஒருவர் சொல்லுகிற போது, தலைமை ஆசிரியர் மறுப்புச் சொல்லுவாரா? அதுவுமில்லாமல், என்னைப் பற்றியும் தலைமை ஆசிரியருக்கு நன்கு தெரியுமல்லவா?

# படிப்புக்கு முழுக்குப் போட்டேன்!

ஆனால் என்னுடைய கெஞ்சல் எல்லாம் நேர்மையான மனிதரான என் அப்பாவிடம் எடுபடவில்லை. கண்டிப்பான குரலில் பின்வருமாறு கூறிவிட்டார்: "நிர்வாக போர்டில் எனக்கு இருக்கும் பொறுப்பை துஷ்பிரயோகம் செய்து, விதிகளுக்கு மாறாக உனக்கு சிறப்பு அனுமதி கோரி தலைமை ஆசிரியரிடம் ஒரு போதும் பேசமாட்டேன். போனால் போகிறது இந்த வருடம். கவலைப்படாதே! அடுத்த வருடம் பரீட்சை எழுதிக் கொள்ளலாம். இன்னும் ஒரு வருடம், ஒழுங்காக ஸ்கூலுக்குப் போ... படித்து பாஸ் பண்ணு."

என் சார்பில், என் அம்மாகூட, அப்பாவிடம் பேசிப் பார்த்தார். பலன் பூஜ்ஜியம் தான். ஆனால், பள்ளிக்கூட மாணவனாக இருந்தாலும், வியாபார அனுபவம், மேஜிக் மூலம் பள்ளிக் கூடத்தில் கிடைத்த பாபுலாரிடி இவை காரணமாக எனக்கும் ஈகோ இருந்தது. போதிய அளவு அட்டன்டென்ஸ் இல்லாமல் பரீட்சை எழுத அனுமதி மறுக்



• 'என்ன மேஜிக் செய்தாலும் இவர் குரல் எனக்கு வருமா?' - லதா மங்கேஷ்கருடன் லால், இளம் வயதில்

கப்பட்டதால், அடுத்த வருடம், ஜூனியர் மாணவர்களுடன் படிப்பதை என்னால் ஜீரணித்துக் கொள்ள முடியவில்லை. என் அப்பா மனது வைத்திருந்தால், இதைத் தவிர்த்திருக்க முடியும். ஆனால் அவர் அதைச் செய்யாததால் எனக்கு ஏற்பட்ட கோபம்



இரண்டும் சேர்ந்து என்னை ஒரு முடிவுக்கு வரவைத்தன.

'இனி மெட்ரிக் பரீட்சை எழுதவே வேண்டாம். மெட்ரிக்குலேஷன் முடிக்காவிட்டால் என்ன முழுகிப் போய்விட்டது? நம் குடும்பத்தில் எல்லாம் படித்த, பட்டதாரிகளா என்ன? வியாபாரம் இருக்கிறது. உபரியாக மேஜிக் இருக்கிறது. இனி நமக்கு எதற்குப் படிப்பு?' என்று நான் தீர்மானித்தேன். குடும்பத்தினரிடம், என் முடிவைச் சொன்னபோது, என்னை யாரும் கடிந்து கொள்ளவில்லை. ஆக, என் படிப்புக்கு முற்றுப் புள்ளி விழுந்தது.

இன்றைக்கு, உலக அளவில் புகழ் பெற்று விளங்கினாலும், என் மனதின் ஒரு மூலையில், பெரிய அளவில் படிக்கவில்லையே என்று ஒரு ஏக்கம் இருக்கவே செய்கிறது. என்னால் சரளமாக ஆங்கிலம் பேச

## மேஜிக் நிபுணர் கே. லால்

முடியாது. ஆனாலும் என்னுடைய மேடைக் காட்சிகளில், சரளமாக நான் ஆங்கிலத்திலும் இந்தியிலும் பேசுவதை நீங்கள் பார்த்திருக்கலாம். இது எப்படி எனக்கு சாத்தியமானது?

மேடையில் நான் இன்னின்ன மேஜிக் ஐட்டங்களை செய்து காட்டப்போகிறேன் என்று விளக்கமாக, எனக்கு நண்பர்களான ஆங்கிலப் பேராசிரியர்களிடம் சொல்லி அவற்றை ஆங்கிலத்தில் எப்படிச் சொல்ல வேண்டும் என்று பாடம் கற்றுக் கொண்டேன். முழுக்க ஆங்கிலத்தில் சொல்ல வேண்டும் என்றால் எப்படிச் சொல்லுவது, ஆங்கிலமும், இந்தியும் கலந்து பேசுகிறபோது எப்படிச் சொல்லுவது என்று அவர்கள் எனக்குச் சொல்லிக் கொடுத்தார்கள். நான் மேடையில் பேசுகிறபோது ஆங்கில வார்த்தைகளை எப்படி உச்சரிக்க வேண்டும் என்று மட்டுமல்லாமல், நிகழ்ச்சிக்கு ஏற்ப குரலில் எப்படி ஏற்ற இறக்கம் கொடுத்துப் பேச வேண்டும் என்று கூட அவர்கள் சொல்லிக் கொடுத்தார்கள். இதுதான் நான் மேடையில் மட்டும் சுமாராகவாவது ஆங்கிலம் பேசுவதன் ரகசியம்.

என் மகன் ஜூனியர் லாலுக்கு ஜப்பானிய மொழி நன்றாகத் தெரியும். ஜப்பானில் புரோகிராம் என்றால், ஜப்பானிய மொழியிலேயே முழுக்கப் பேசி ஜப்பானிய ரசிகர்களை அசத்தி விடுவான் அவன். இது தவிர, இந்தியாவின் தென் மாநிலங்களில் நிகழ்ச்சி நடத்தினால், தமிழ், தெலுங்கு, கன்னடம்,

> **"என்னால் சரளமாக ஆங்கிலம் பேச முடியாது. ஆனாலும் என்னுடைய மேடைக் காட்சிகளில், சரளமாக நான் ஆங்கிலத்திலும் இந்தியிலும் பேசுவதை நீங்கள் பார்த்திருக்கலாம். இது எப்படி எனக்கு சாத்தியமானது?"**

மலையாளம் போன்ற மொழிகளில் அவ்வப்போது சில வாக்கியங்களைப் பேசுவது எனக்கு சிரமமான காரியமில்லை. இது எனது அயல்நாட்டுப் பயணங்களுக்கும்

பொருந்தும்.

மறுபடி கல்கத்தாவுக்குப் போகலாமா?

**ப**ள்ளிக் கூடம்தான் இனிமேல் இல்லை என்று ஆகிவிட்ட பிறகு, வியாபாரத்துக்கு என்னால் குந்தகம் வரக் கூடாது என்பதில் கண்டிப்பாக இருந்தார் என் அப்பா. எனவே என்னவானாலும் காலையில் கரெக்டாக எட்டுமணிக்குக் கடையைத் திறக்கிற வேலை என்னிடம் ஒப்படைக்கப்பட்டது. அதே போல், இரவு எட்டு மணிக்கு, கடையை மூடிப் பூட்டிவிட்டு, சாவியை அவரிடம் ஒப்படைக்கும் வேலையும் எனக்குத்தான்.

நான் அதிகாலையிலேயே எழுந்து, ரெடியாகி, என் மேஜிக் குருநாதரான கோபாபு வீட்டுக்குப் புறப்பட்டுப் போய்விடுவேன். அங்கே மேஜிக் பயிற்சி, பாடம் முடித்துவிட்டு, எட்டுமணிக்கு கடையைத் திறந்து விடுவேன்.

நான் முழுநேரமும் கடையில் இருந்ததை என் அப்பா மிகவும் உபயோகமாகக் கருதினார். காரணம், நான் தலையெடுத்தபிறகு சோட்டாலால் அண்டு கம்பெனி என்கிற எங்கள் கடையின் வியாபாரம் பலமடங்கு பெருகியது. அதற்கு முக்கியமான காரணம் என்னுடைய பேச்சுத்திறன். வருகிறவர்களிடம் நட்புடன் பேசி, ஐந்நூறு ரூபாய்க்குத் துணி வாங்கும் எண்ணத்துடன் வருகிறவர்களைக் கூட ஆயிரம் ரூபாய்க்கு வாங்க வைத்துவிடும் என் சாமர்த்தியம், பிசினஸ் பெருக பெருமளவு உதவி புரிந்தது.

இரவு எட்டு மணிக்குக் கடையைப் பூட்டி, சாவியைக் கொடுத்துவிட்டு, குருநாதர் வீட்டுக்குப் போனால், எத்தனை மணிக்கு வீடு திரும்புவேன் என்று திட்டவட்டமாய்ச் சொல்ல முடியாது. நடு நிசி தாண்டி வீடு திரும்பிய நாட்கள் பல உண்டு.

கோ பாபு மேஜிக்கில் மிகத் திறமைசாலி என்றாலும், தமது மேஜிக் திறமை மூலமாக, பெருமளவு பணமும், புகழும் சம்பாதிக்கும் திறமை அவருக்கு இல்லை என்றுதான் கூற வேண்டும். எனவே அவரது வாழ்க்கை மிக வசதியாக அமையவில்லை. திருமண நிகழ்ச்சிகள், பள்ளிக் கூட ஆண்டு விழாக்கள் போன்ற விசேஷ தினங்களில் மேஜிக் நிகழ்ச்சி நடத்தி, அதன் மூலமாகக் கிடைக்கிற வருமானத்தில் தான் அவர் வாழ்ந்து வந்தார். பணம் முதலீடு செய்து, ஒரு மேஜிக் குழுவை ஆரம்பித்து, மேடை நிகழ்ச்சிகள் நடத்தும் அளவுக்கு அவருக்கு வசதியுமில்லை; தன்னம்பிக்கையும் இல்லை. ஆனால், எனக்குத் தெரிந்ததை மேலும் மெருகூட்டிக் கொள்ள வழி வகுப்பார்.

அவரே "நீ இந்தக் கலையில் கைதேர்ந்தவனாகிவிட்டாய். உன்னுடைய திறமையை மக்களறிய மேடை ஏற்றும் காலம் வந்து விட்டது. அதற்கான ஏற்பாடுகளில் நீ இறங்கு" என்று ஆசீர்வதித்து, பச்சைக் கொடி காட்டினார்.

நான் அப்போது எந்த மாதிரி மேஜிக் ஷோ நடத்தப்பட்டு வந்ததோ அதிலிருந்து முற்றிலும் மாறுபட்டதாக என்னுடைய ஷோ அமைய வேண்டும் என்று தீர்மானித்தேன். அதற்கேற்ப ஒவ்வொரு விஷயத்திலும் என் கற்பனா சக்தியைப் பயன்படுத்தி, புதுமைகளைப் புகுத்தினேன். (அதைப் பற்றி விவரமாக பின்னர் கூறுகிறேன்) ஒவ்வொரு விஷயத்துக்கும் பக்காவாக ஒத்திகை நடத்தினேன்.

கல்கத்தாவின் பெருமைக்குரிய அரங்குகளில் ஒன்று ராக்சி அரங்கம். அங்குதான் என் நிகழ்ச்சி நடைபெற ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. என் அம்மா, "உன்னுடைய இத்தனை கால கடும் உழைப்பு வீண் போகாது. ஆண்டவன் அருளால் நீ பேரும், புகழும் பெறுவாய்" என்று என்னை உச்சி மோந்து, வாழ்த்துச் சொல்லி, மேடைக்கு அனுப்பி வைத்தார்.

சிறு பிசகு கூட இல்லாமல், திட்டமிட்டபடியே அற்புதமாக நிகழ்ச்சி நடந்து முடிந்தது. என் குரு கோபாபு, மற்ற மேஜிக் நிபுணர்கள், கல்கத்தா நகரத்துப் பிரமுகர்கள், நான் சார்ந்த குஜராத்தி இனத்துப் பெரியவர்கள், நண்பர்கள், பத்திரிகையாளர்கள் என்று அன்று என் நிகழ்ச்சியைக் கண்ட அனைவரும் மேஜிக் நிகழ்ச்சி என்றால், இப்படியல்லவா இருக்க வேண்டும் என்று ஏகோபித்துப் பாராட்டினார்கள்.

மறுநாள் பத்திரிகைகள் பாராட்டுமழை பொழிந்தன. 'லாலின் மேஜிக் நிகழ்ச்சியின் போது கண்களை இமைக்கவே கூடாது. கண்ணிமைக்கிற நேரத்தில் சுவாரசியமான மேஜிக்கை மிஸ் பண்ணிவிடுவீர்கள்' என்று ஒரு பத்திரிகை பாராட்டியது.

மறுநாள் காலை. அத்தனை பாராட்டுகளையும் தாற்காலிகமாக மறந்து விட்டு, வழக்கம்போல், காலைஎட்டு மணிக்கு எங்கள் கடையைத் திறந்து, வியாபாரத்தை கவனிக்க ஆரம்பித்தேன். அதற்குக் காரணம், என் அப்பாவுக்கு நான் அளித்த உறுதி மொழிதான்.

(தொடரும்)





# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்

16, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர், (வழி) தாம்பரம், சென்னை-63.
Tel & FAX: 2376129, Cell Ph: 98410-53309
E.mail: sspeetam@md3.vsnl.net.in, sspeetam@hotmail.com
Please visit our website at: www.intamm.com/sspeetam

## தீபாவளி நல்வாழ்த்துக்கள்

பேரன்புடையீர் ! வணக்கம், வரும் தீபாவளி திருநாளில் தங்களுக்கு அனைத்து நலன்களும் உண்டாக பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் பிரார்த்திக்கின்றோம்.

தங்களின் அன்பினாலும், ஆதரவினாலும், குருகுலத்தில் 137 மாணவ, மாணவியர்கள் நல்ல முறையில் படித்து வருகின்றார்கள். குருகுல மாணவர்களின் முன்னேற்றத்தைக் கருத்தில் கொண்டு ஒரு உயர்நிலைப்பள்ளியும் மற்றும் 13/09/99 விநாயக சதுர்த்தி அன்று கம்ப்யூட்டர் பயிற்சி மையமும் துவக்கப்பட்டுள்ளது.

## தீபாவளி திருநாளில்

* குருகுல மாணவர்களோடு உங்களுடைய மகிழ்ச்சியை பகிர்ந்து கொள்ளுங்கள்.
* குருகுல மாணவர்களின், உணவு மற்றும் இதர செலவுகளுக்கு, கல்வி கற்பதற்கு கம்ப்யூட்டர் பயிற்சி பெறுவதற்கு, கட்டிடம் கட்டுவதற்கு, மற்றும் நிரந்திர வைப்பு திட்டத்திற்கு தங்களின் மேலான நன்கொடைகளை அளிக்கும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (137 பேருக்கு) | ரூ | 750/- |
| • மதிய உணவு (இனிப்புடன்) | ரூ | 1,500/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ | 500/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு கம்ப்யூட்டர் பயிற்சி (ஓராண்டிற்கு) | ரூ | 3,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ | 6,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ | 1,50,000/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம்.

தங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு Cheque/ DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

நன்கொடைகளுக்கு 80 G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்

# இறையொன்றுமில்லை

எப்படி ராமாயணத்தையெல்லாம் பாராயணம் பண்ணுகிறோமோ, எப்படி பாகவதத்தைப் பாராயணம் பண்ணுகிறோமோ, அந்த மாதிரி பிரும்ம சூத்ர பாஷ்யத்தை ஒரு தடவை கிருஹத்திலே பாராயணம் பண்ண வேண்டும். அந்த மாதிரி யார் பாராயணம் பண்ணி முடிக்கிறார்களோ அவர்களுக்கு நல்ல பலன்கள் ஏற்படும். பரீக்ஷை பண்ணிக் கூட பார்க்கலாம்.... அதற்கு முன்பு அவர்களுடைய வாக்கிலே காடின்யம் இருந்திருக்கும். கடுவான பல வார்த்தைகள் பேசியிருப்பார்கள். ஸ்ரீ பாஷ்யத்தைப் படித்த பிற்பாடு பவ்யமான, எளிமையான, வணக்கத்துடன் இருக்கிற பேச்சு வரும். ஸ்ரீ பாஷ்யம் அப்படி நம்மை மாற்றி விடுகிறது.

ஆகையினாலே, ஸ்ரீ பாஷ்யம் என்ற அந்த உயர்ந்த பாஷ்யம், அனுபவிக்க அனுபவிக்க தெவிட்டாத தெள்ளமுதாய் இருக்கக் கூடியது.

பிரும்ம சூத்ர பாஷ்யத்தை பண்டிதர்கள் உட்கார்ந்து சொல்கிறபோது கேள்விகள் கேட்பதுண்டு. கேள்விக்குப் பதில் அளிப்பதற்கு வியாக்யார்த்தம் என்று பெயர். உபன்யாசம் என்பது வேறு; வியாக்கியார்த்தம் என்பது வேறு.

சில பேர் வியாக்கியார்த்தத்திலே ரொம்ப நிபுணர்களாய் இருப்பார்கள். ஆனால் உபன்யாசம் பண்ண வராது அவர்களுக்கு! சில பேர் உபன்யாசம் ரொம்ப நன்றாகப் பண்ணுவார்கள்; வியாக்கியார்த்தம் ஓரிடத்திலே பண்ணத் தெரியாது!

சில மகான்கள் மட்டுமே உபன்யாசமும் பண்ணுவார்கள், வியாக்கியார்த்தமும் சொல்வார்கள்.

நரசிம்ஹ ஆராதனம் பண்ணக்கூடிய பல பெரியவர்களுக்கு இது கைகூடும்.

நம்மாழ்வார் திருவாய்மொழியிலே சொல்லும்படியான விஷயமிது :

திருவனந்தபுரத்தில் பக்கத்திலே திருவட்டாறு என்கிற க்ஷேத்திரம் இருக்கிறது. எல்லோரும் சேவிக்கக்கூடிய ஊர்.

அந்தத் திருப்பதியைப் பற்றிச் சொல்கையில் 'என் பிறப்பை அறுத்து **அவன்** திருவடியிலே சேர்த்துக் கொண்டான்' என்று பாடுகிறார் ஆழ்வார்.

'ஜீவியமாய் இருக்கிற ஒருவர் எவ்வாறு இப்படிச் சொல்லலாம்? அது எப்படிப் பொருந்தும்?' என்றால், 'அவனுக்குத் தொண்டு செய்வதற்காகவே சன்னியாசாசிரமத்தைக் கொடுத்து அருகிலே சேர்த்துக் கொண்டான்' என்று ஆகிறது.

ஹிரண்யனை வதம் பண்ணியவனுடைய திருவடியிலே விசேஷமான கைங்கர்யம் பண்ணக் கொடுத்து வைத்தானே, அது எதனால் கிடைத்தது?

மகா பாகவதோத்தமர்களுடைய, ஆசார்யர்களுடைய திருவடியை ஆச்ரயித்ததனாலே கிடைத்த பலன் இது – இப்படியெல்லாம் நரசிம்ஹ ஆராதனத்தைக் கொண்டாடுகிறார் ஆழ்வார்.

'அப்படிப்பட்ட நரசிம்ஹன்தான் திருவட்டாறு க்ஷேத்திரத்திலே படுத்திருக்கிறான்' என்கிறார் நம்மாழ்வார். 'மகான்களுடைய திருவடியை ஆச்ரயிப்பவர்களுக்குக் கிடையாத பேறு கொடுக்கிறான்.'

உபன்யாசம் வியாக்யார்த்தி இரண்டும் செய்யும் ஆற்றல் அருள்கிறான்.

ஆகையினாலே தினமும் பிரும்ம சூத்ர பாஷ்ய வியாக்யானம் பண்ண வேண்டும். பத்து நிமிடங்களாவது அதைப் பண்ண வேண்டும். இல்லையானால் இந்தப் பிறவி எடுத்ததற்கான பிரயோஜனமேயில்லை.

சூத்ரம் என்பது காட்டிக் கொடுத்தல். பிரும்மத்தைக் காட்டிக் கொடுப்பது பிரும்ம சூத்ரம். 'சூத்ர பிராயமாகச் சொல்கிறீர்களே?' என்றால், 'சுருக்கமாகச் சொல்கிறீர்களே' என்று அர்த்தம்.

**முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்**

ஆகையினால், அவனை நமக்குக் காட்டித் தருவது, ரொம்ப சுருக்கமாக, அழகாகக் காட்டித் தருவது ஸ்ரீ பாஷ்யம். அந்த ஸ்ரீ பாஷ்யத்தை வாசிப்பது உத்தம தர்மம்.

ஸ்ரீ பாஷ்யத்தை அனுக்கிரஹம் பண்ணிய ராமானுஜர், ஆதிசேஷனுடைய அம்ச பூதராய், – ஆதிசேஷன் அவதாரமாய் – ஆருத்ரா நக்ஷத்திரத்திலே, சித்திரையிலே தோன்றினார்.

இவர் ஸ்ரீ பாஷ்யத்தையடுத்து, கீதா பாஷ்யம் – ரொம்ப ரமணீயமான பாஷ்யம் படைத்தார். அதையடுத்து வேதார்த்த சங்கிரஹத்திலே திவ்யமான கிரந்தம், அதையடுத்து சரணாகதி கத்யம், அதையடுத்து ஸ்ரீரங்க கத்யம், அதையடுத்து ரங்கநாதன் விஷயமாக அழகான கத்யம்; அதையடுத்து ஸ்ரீவைகுண்ட கத்யம் என்று வைகுண்டத்தையே அழகாக நமக்கு எடுத்துக்காட்டுகிறார். அதையெல்லாம் அடுத்து, நித்யம் நாம் செய்யக்கூடிய கடமைகளை எடுத்துக் காட்டுகிற ஒரு கிரந்தம்.

ஸ்ரீபாஷ்யம், கீதா பாஷ்யம், வேதார்த்த சங்கிரஹம், வேதார்த்த தீபம், வேதாந்த சாரம், சரணாகதி கத்யம், ஸ்ரீரங்க கத்யம், வைகுண்ட கத்யம், நித்யம் – இந்த ஒன்பது நவரத்தினங்களைக் கொடுத்த மகான் ராமானுஜர்.

ஒரு மகான் ஒரு கிரந்தத்தை ஆரம்பிப்பதற்கு முன்னால் மங்கள ஸ்லோகம் என்று எழுதுவார்கள். மங்கள ஸ்லோகம் எழுதாமல் கிரந்தம் முழுமையடையாது.

இந்த மங்கள சுலோகம் எப்படி இருக்கும் என்றால், நம்முடைய ஆராத்ய தேவதையை துதிப்பதாக இருக்கும். அந்த தேவதையினுடைய ஸ்தோத்திர ரூபமாகவே இருக்கும்.

சுவாமி தேசிகன் யாதவாப்யுதயம் எழுதினார் அல்லவா, அதிலே மங்கள ஸ்லோகம் 'த்வம்' என்று ஆரம்பிக்கிறது.

அதிலே அவர் யாரை வந்திக்கிறார்?

ரோஹிணி நக்ஷத்திரமும் அஷ்டமி திதியும் சேர்ந்த நன்னாளுக்கு ஜெயந்தி என்று பெயர். அந்த ஜெயந்தியில் அவதரித்தவனை வந்திக்கிறார்.

ஸ்ரீ பாஷ்யம் என்பது போல் கிருஷ்ணனின் அவதார தினத்துக்கு- ஜெயந்திக்கு ஸ்ரீஜெயந்தி என்றே பெயர்.

இந்த ஜெயந்தி மட்டும்தான் ஜெயந்தியாகும். ஆனால் நாம் மகான்களுடைய அவதார தினத்தையே (மற்ற நாட்களில் கூட) ஜெயந்தி என்று சொல்லி வருகிறோம்.

சுவாமி தேசிகன் என்ன சொல்லி ஆரம்பிக்கிறார் யாதவாப்யுதயத்தை...?

'வைஜயந்தி மாலையை அணிந்தவன், கிருஷ்ணனை வணங்குகிறேன்' என்று ஆரம்பிக்கிறார்.

ஆரம்பித்த வேகத்தில் யாதவாப்யுதயத்தைப் பூரணமாக முடித்து விட்டார்.

இதே மாதிரி காளிதாஸன் ரகுவம்சம் எழுதினான் பாருங்கள்.... அப்போது அவனுக்கு ஆராத்ய தேவதை யாரென்றால், பார்வதி பரமேச்வரர்கள்.

ஆரம்ப சுலோகத்திலே என்ன எழுதினான் காளிதாஸன்?

'வந்தே' – வணங்குகிறேன். யாரை வணங்குகிறேன்?

சொல்லும் பொருளும் போலே சேர்ந்து நிற்கக்கூடிய பார்வதி பரமேச்வரர்களை வணங்குகிறேன்.

சொல்லும் பொருளும் போலே என்று காளிதாஸன் சொன்னதற்கு மூலம் எது என்று பார்த்தோமானால், விஷ்ணு புராணத்திலேதான் பார்க்க வேண்டும்.

பராசர மஹரிஷி மைத்ரேயருக்குச் சொல்கிற போது, இந்த லக்ஷ்மி நாராயண தத்வம், இந்த லக்ஷ்மிபதித்வம், லக்ஷ்மியும் நாராயணனும் எப்படி இருக்கிறார்கள் என்பதைப் பல விஷயம் கொண்டு சொல்லி வருகிறார். அதிலே சொல்லும்போது, 'மஹாலக்ஷ்மி இருக்கிறாளே, அவள் சொல் வடிவமானவள்; அந்தச் சொல்லுக்குப் பொருள் போன்றவன் விஷ்ணு'என்கிறார்.

யக்ஞத்திலே 'ஸ்வாஹா' என்ற சப்தம் வருகிறது. இந்தச் சப்தமாக இருப்பவள் மஹாலக்ஷ்மி. அதற்குப் பொருளாக இருக்கக்கூடியவன் பரமாத்மா.

'ஸ்வாஹா' என்றால் அக்னியினுடைய தர்மபத்னியின் பெயர். ஆகையினாலே, அக்னியில் நாம் ஹவிஸைச் சேர்க்கிறபோது, அக்னியினுடைய தர்மபத்னியின் பெயரைச்

---

**''நீ எழுதின புத்தகத்துக்கு அந்த ஆபீஸ்லே பயங்கர வரவேற்பா, என்ன தலைப்பு?''**

**''பகல் கனவுப் பலன்கள்!''**

**– வெ. ராஜாராமன்**



சொல்லிச் சேர்க்க வேண்டும் என்பது சாஸ்திரம்.

ஆனால் 'ஸ்வாஹா' என்பதற்குச் சரியாக அர்த்தம் புரிந்துகொள்ளாத நிலையில் லோகத்திலே ஒரு விவகாரம் வந்து விடுகிறது.

சாமான்யமாகப் பேசுகிறபோது எல்லோரும் என்ன பண்ணுவார்கள்? ஒருத்தர் ஏமாற்றி விட்டார் என்பதைக் குறிக்க 'எல்லாத்தையும் ஸ்வாஹா பண்ணிட்டுப் போய்ட்டான்' என்பாரகள.

அப்படியானால் அக்னியிலே எல்லாம் பஸ்மமாகவா போய் விடுகிறது? அப்படியில்லை... லக்ஷ்மியுடன் நாராயணன் எப்படி சேர்ந்திருக்கிறானோ, உமாமகேச்வரர்கள் எப்படி சேர்ந்திருக்கிறார்களோ, வாணி - ஹிரண்யகர்பர் எப்படி சேர்ந்திருக்கிறார்களோ, இந்திரனும் இந்திராணியும் எப்படி சேர்ந்திருக்கிறார்களோ, அப்படி அக்னியும் ஸ்வாஹாவும் சேர்ந்தே இருக்கிறார்கள். ஆகையினாலே இந்த சப்தத்தைச் சொன்னால், அக்னி பகவானுக்குப் பிடிக்கும்; பரம சந்தோஷம் உண்டாகும்.

'ஸ்வாஹா' என்று பத்னியின் பெயரைச் சொல்லக் கேட்டதுமே அக்னி இன்னும் கொழுந்து விட்டு எரிவான். ஆகையினால் அந்த தம்பதியை நாம் மனத்தால் நினைக்கிறோம்.

அதே போல்தான் சொற்களுக்கெல்லாம் பொருளாயிருக்கக்கூடியவன் விஷ்ணு. சொல்லும் பொருளும் போலே அவர்கள். சொல்லை விட்டுப் பொருள் விலகுமோ? விஷ்ணுவை விட்டு லக்ஷ்மி விலகுவாளோ?

பராசர மஹரிஷி இவ்வாறு மஹா விஷ்ணு - லக்ஷ்மிக்குப் பொருளும் சொல்லும் உபமானம் சொல்ல, அதை அப்படியே சொன்னான் காளிதாஸன் :

சொல்லும் பொருளும் போல் சேர்ந்து இழைந்து நிற்கிறார்களாம் பார்வதி - பரமேச்வரர்.

'அப்படிப்பட்டவர்களை வணங்குகிறேன்' என்றான் அவன்; ரகுவம்சம் முடிந்து போய்விட்டது!

மங்கள ச்லோகம் இயற்றினால் கிரந்தம் முடிகிறது என்பது இப்போது நன்றாகத் தெரிகிறதல்லவா?

(தொடரும்)

## அருள்வாக்கு

விலையுயர்ந்த ரத்னமொன்று நம்மிடமிருந்தால் வீட்டிலே எங்கே வைப்போம்? வாசல் புற ரூமில் வைப்போமா? தோட்டத்தைச் சேர உள்ள ரூமில் வைப்போமா? ரொம்பவும் காபந்தாக மத்தியில் இருக்கிற ரூமில் இரும்புப் பெட்டியில்தான் வைப்போம். அப்படியே வேதத்தில் ஜீவரத்னமான சிவநாமத்தை ரொம்பவும் ஜாக்ரதைப்படுத்தி வைத்திருக்கிறது. நாலில் மத்தி இரண்டாவது. நாலு வேதங்களில் இரண்டாவது யஜுர். (தைத்திரீய க்ருஷ்ண) யஜுர் வேதத்தில் மத்ய பாகம் அதன் நாலாவது காண்டம். அந்தக் காண்டத்தில் மத்யம் ஐந்தாவது ப்ரச்னம். இதிலேதான் நடுவில் ஸ்ரீருத்ர ஸூக்தம் எனப்படுவதில் நடுநாயகமாக பஞ்சாக்ஷரம் வருகிறது. பஞ்சாக்ஷரத்துக்கும் மையமாக 'சிவ' என்ற த்வயக்ஷரம் இருக்கிறது.



உடம்பை மெய் என்கிறோம். அதிலே இருக்கிற பரமாத்மாவை மெய்ப்பொருள் என்பார்கள். ஸத்வஸ்து என்று வேதாந்தத்தில் சொல்வதைத் திருவள்ளுவர் அப்படியே தமிழில் 'மெய்ப்பொருள்' என்கிறார். வேதங்களையெல்லாம் ஒரு சரீரமாக-மெய்யாக-வைத்துக் கொண்டால் அதில் உயிராக, மெய்ப்பொருளாக இருப்பது சிவநாமா. உயிர், பரமாத்மா உள்ளது ஹ்ருதயம் என்றால், அந்த ஹ்ருதயம் சரீர மத்தியில்தான் இருக்கிறது. இதைத்தான் ஞானஸம்பந்தரும் சொல்கிறார்.

வேத நான்கினும் மெய்ப்பொருளாவது
நாத(ன்) நாமம் நமச்சிவாயவே

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.

**போட்டிக் கதை – 8**

**தொ**ழிலதிபர் சோப்ரா இந்தச் சமயத்தில் இப்படி ஒரு சிக்கலை எதிர்பார்க்கவில்லை.

அதிநவீன தொழில்நுட்பத்துடன் கூடிய சாயத் தொழிற்சாலை தொடங்க 'லொகேஷன்' தேடிய சோப்ராவுக்கு அந்தக் கிராமம் மிகவும் பிடித்துப் போயிற்று.

கிராம முக்கியஸ்தர்களை அணுகி நோக்கம் விளக்கி நிலம் கேட்டபோது, ஊர் கூடி முடிவு செய்து, பல பேருக்கு வேலை வாய்ப்பைத் தரும் பெரிய தொழிற்சாலை தொடங்குவதை வரவேற்று நியாயமான விலையில் நிலம் தர முன்வந்தனர்.

தேவைக்கு மேல் ஒரு பங்கு அதிகமாகவே நிலங்களை வாங்கி வளைத்துப் போட்டு ஆறு மாதத்திற்கும் மேல் ஆகிவிட்டது.

மொத்த நிலத்தையும் சர்வே செய்து அயல் நாட்டுப் பொறியாளர்களையும் வரவழைத்து கம்பெனி நிர்மாணிக்கப் 'பிளான்' போடப்பட்டு முறைப்படி 'அப்ரூவல்' வாங்கியாகி விட்டது.

இன்னும் இரண்டு நாட்களில் அடிக்கல் நாட்டு விழா.

ஆயத்தப் பணிகளுக்கான ஏற்பாடுகளை தொடங்கப் போன சோப்ரா, இந்த நேரத்தில் இப்படி ஒரு சிக்கலை எதிர்பார்க்கவில்லை.

"ஏழைகள் வாழ்வைக் கெடுக்காதே... எங்கள் கிராமத்தைக் கெடுக்காதே... காற்றையும் நீரையும் கெடுக்காதே... எங்கள் உயிரைக் குலைக்காதே..." என்ற கோஷத்தை இந்த நேரத்தில் சோப்ரா நிச்சயமாக எதிர்பார்க்காததால் ஒரு நொடி நிலைகுலைந்துதான் போனார். அடுத்த நொடி தம்மை சுதாரித்துக் கொண்டார்.

"அடிக்கல்நாட்டறதை நிறுத்தக் காரணம் என்னன்னு தெரிஞ்சுக்கலாமா?" கூட்டத்தை நோக்கி சோப்ரா கேட்க,

"....... ..... ......" கூட்டத்தில் சிறிது நேரம் மௌனம்.

ஓர் இளைஞன் முன்வந்து சோப்ராவிடம் பேசினான். "ஐ'யாம் சத்யம். நான் எம்.எஸ்ஸி., கெமிஸ்ட்ரி ஸ்டூடண்ட்..." என்று தன்னை அறிமுகம் செய்து கொண்டான்.

"கிளாட் டு மீட் யூ மிஸ்டர் சத்யம். தொழிற்சாலை ஆரம்பிச்ச உடனே நம்ப தொழிற்சாலைலயே நீங்க கெமிஸ்ட் ஆயிடுங்க..."

"சாரி சார். வேலை கேட்டு இப்போ நாங்க உங்க முன்னால போராட்டம் நடத்தலை. இந்தக் கிராமத்துல இந்தச் சாயத் தொழிற்சாலை ஆரம்பிக்கறதை நாங்க விரும்பலை..."

"காரணம்?"

"எங்க கிராமத்தை நாங்க பாதுகாக்க விரும்பறோம். தலைமுறை தலைமுறையா நாங்க சுவாசிக்கிற நல்ல காத்தையும் குடிக்கற நல்ல தண்ணியையும் வரப்போற சந்ததிகளும் அனுபவிக்கணும்னு ஆசைப்படறோம்..."

"ஓக்கே... இந்த இடத்தை இந்த நோக்கத்துக்காகத்தான் நான் வாங்கறேன்னு ஊர் ஜனங்க முன்னே எடுத்துச் சொல்லிட்டு, ஊர் மக்கள் ஒத்துழைப்போடுதானே வாங்கினேன்? இப்போ சொல்ற அந்தக் கருத்தை அப்பவே நீங்க சொல்லியிருக்கலாமே?"

"சாரி சார். நான் 'நார்த்'ல ஒரு கம்பெனில கெமிஸ்டா இருக்கேன். லாங் லீவுல நேத்திக்குத்தான் இந்த ஊருக்கு வந்தேன். விஷயம் தெரிஞ்சுக்கிட்டேன். சாயத்

தொழிற்சாலை ஏற்படுத்தினா ஏற்படப் போற பின்விளைவுகளைப் பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்தினேன்..."

''மிஸ்டர் சத்யம்... நீங்க ஒரு "லேமேனா'' இருந்தா உங்ககிட்ட விளக்கலாம். நீங்களே ஒரு கெமிஸ்ட். உங்களுக்கு 'பொல்யூஷன் கண்ட்ரோல் பத்தி நான் விளக்க வேண்டியதில்லை. இந்தக் கிராமத்துல எத்தனை பேருக்கு இந்தத் தொழிற்சாலை வேலை கொடுக்கும்னு நீங்க யோசிச்சிப் பார்த்தீங்களா மிஸ்டர் சத்யம்..."

"சாரி சார். நோ கம்ப்ரமைஸ். இந்தக் கிராமத்துல தொழிற்சாலை தொடங்க நாங்க அனுமதிக்கப் போவதில்லை...'' என்று உறுதியாகச் சொன்னான் சத்யம்.

சோப்ராவை மேலே பேச விடாமல் கையமர்த்தினான் சத்யம்.



சத்யம் அவ்வாறு கூறியதும், "தொடங்காதே.. தொடங்காதே... சாயச் சாலை தொடங்காதே... கெடுக்காதே கெடுக்காதே மண்ணையும் நீரையும் கெடுக்காதே..." என்று கூட்டம் முழங்கியது.

அதற்கு மேல் சோப்ரா எதுவும் பேசவில்லை. 'ஜீப்'பில் ஏறித் திரும்பினார். அவரைத் தொடர்ந்து வந்த லாரிகளும் வேன்களும் திரும்பின.

சோப்ராவுக்கு எதிர்ப்போ, ஏமாற்றமோ புதிதல்ல. அடுத்து ஆகவேண்டியதைப் பற்றி யோசிக்கலானார் சோப்ரா.

தம் அலுவலம் வந்தவுடன் உடனடியாக அமைச்சருக்கு தொலைபேசினார். அமைச்சர் திறப்பு விழாவுக்கு வருவதாக இருந்த திட்டத்தை ரத்து செய்தார்.

## ஜூனியர் தேஜ்

"தம்பி சத்யம் மட்டும் இந்தச் சமயத்துல வந்து நமக்குச் சொல்லலேன்னா நம்ம கிராமமே வீணாயிருக்கும்."

"சத்தியம் தம்பியால நம்ம கிராமமே ஒரு பெரிய கண்டத்துலேர்ந்து தப்பிச்சிது."

"நம்ம கிராமம் முன்னேற முட்டுக் கட்டை போட்டுட்டானே பாவிப்பய..."

"அவனுக்கென்ன, வடக்கே போயி மாசம் பத்தாயிரத்துக்கு மேல சம்பாரிக் கறான். இந்தக் கம்பெனி ஆரம்பிச்சி உள்ளூர்ல நாலு பேர் நல்லா இருந்துட்டா அவனை யாரும் மதிக்க மாட்டாங்க பாரு... அதான் இப்படி கிருத்துருவம் பண்ணிட் டான்..."

"டிகிரி டிப்ளமான்னு படிச்சிட்டு வேலை கிடைக்காம சுத்திக்கிட்டிருந்த நமக்கு ஏதோ வழி பொறக்கும்னு கனாக் கண்டுக்கிட்டிருந்த நேரத்துல இப்படித் திடீர்னு வந்தவன் கெடுத்துப்புட்டானே? ஏழெட்டு வருசமா இந்த ஊர்ப் பக்கமே தலைவெச்சிப் படுக்காதவன் திடீர்னு ஊருக்குள்ளே நுழைஞ்சதுமே நினைச்சேன். நினைச்ச மாதிரியே குடி கெடுத்துட்டான்."

"இவனும் இந்த மாதிரி கம்பெனிலதானே வேலை பார்க்கறான். அந்த ஊர்ல மட்டும் ஊரைச் சுத்தியிருக்கற இடம் நாசமானா பரவாயில்லியாமா?"

"எப்படியாவது கம்பெனி ஆரம்பிக்க வெச்சிடணும்டா. அதுக்கு என்னடா வழி?"

"ஊர் ஜனங்கள்ல முக்காவாசிப்பேரு அந்த சத்தியம் பய பக்கம் சப்போர்ட்டா இருக்காங்க. முதலில் ஊர் ஜனங்களை எப்படியாவது 'காம்ப்ரமைஸ்' பண்ண ணும்மா..."

இப்படி வாய் புளித்ததோ மாங்காய் புளித்ததோ என்கிற வகையில் ஊரில் பேச் சுக்கள். சுற்று வட்டாரம் முழுவதும் பர வலாகப் பேசப்பட்டன.

அன்று...

சலசலத்துப் பாயும் ஆற்றங்கரைத் திடலில் சத்யத்தின் தலைமையில் ஊர்க் கூட்டம் கூடியது.

"கம்பெனி தொடங்கக் கூடாதுன்னு நாம போராட்டம் நடத்தின பிறகு ஒரு மாசமா அது அமுங்கிக் கிடக்குது. திட் டத்தை கைவிட்டுட்டாங்கன்னு நினைச்சி நாம சும்மா இருந்துட முடியாது. திடீர்னு ஒருநாள் அரசியல்வாதிங்களை துணைக்கு வெச்சிக்கிட்டு நம்மைப் போல கிராம மக் களை வாய் அடைச்சிட்டு சாயத் தொழிற் சாலையைத் தொடங்கிடுவாங்க. புலி பதுங்குதுன்னா அது பாயறதுக்குத் தன்னை ஆயத்தப்படுத்திக்குதுன்னு நாம புரிஞ்சிக் கணும். எந்தத் தடை வந்தாலும் நம்ம கிராமத்துக்காக, நம்ம ஊர் நலனுக்காக, இப்போ நாம பார்க்கறோமே... சலசலத்து ஓடற ஆறு, அந்த ஆற்றின் தூய்மையைக் காப்பாத்தறதுக்காக, இப்போ நாம சுவாசிக்கற காத்தை அடுத்தடுத்து வரப் போற சந்ததிகளும் சுவாசிக்கணும்கறதுக் காக நாம எதிர்த்து நின்னு போராடணும். நம்ம உயிரைக் கொடுக்கவும் தயாராயிருக் கணும். செய்வீங்களா...?" என்று சத்யம் முழங்க,

"போராடுவோம்! போராடுவோம்!" என்று கூட்டம் முழங்கியது.

அப்போதுதான் சத்தியத்தின் முன் முதல் வரிசையில் அமர்ந்திருந்த ஒரு முதி யவர் எழுந்தார்.

"எல்லோரும் கொஞ்சம் அமைதியா இருக்கணும்..." என்று கேட்டுக் கொண் டான் சத்யம். ஊர் அமைதி காத்து 'சத்தி யத்திற்கு' கட்டுப்பட்டது.

எழுந்து நின்ற எழுபது வயதைத் தாண் டிய அமாவாசைக் கிழவர் சத்தியமூர்த்தியை நோக்கிப் பேச ஆரம்பித்தார்.

"சத்தியம் தம்பி" எனக்குச் சில சந்தே கங்க இருக்கு. அதான் கேக்கலாம்னு..."

"கேளுங்க பெரியவரே... கேளுங்க..."

"தம்பி, நான் படிக்காதவன். நான் கேக் கற கேள்வில ஏதாச்சும் தப்பு இருந்தா மன்னிக்கணும். நான் கேட்க வர்றது என் னன்னா... ஊர் உலகத்துல எத்தனையோ இடங்கள்ல எத்தனையெத்தனையோ இடங்கள்ல இது போல தொழிற்சாலைக இருக்குது. அந்த ஊருங்க எல்லாத்துலயும் காத்து கெட்டுப் போய் தண்ணி கெட்டுப் போய் ஜனங்க வாழ முடியாமத்தான் இருக் குதா?"

"பெருசு... முக்கால்வாசி இடங்கள்ல இந்த மாதிரி ஆபத்தான நிலைலதான் தத்தளிச்சிட்டுக்கிட்டிருக்கு..."

"முக்கால்வாசி ஊருங்க அப்படியிருக் குங்கறியே... அப்போ கால்வாசி ஊர்கள் அப்படி இல்லேங்கறியா தம்பி..."

"ஆமாம். அந்த கால்வாசி இடங்களில் மக்கள் விழிப்புணர்வோட இருக்கறதுனால ஊர் காக்கப்படுது. கம்பெனியை தொடங்க விடாம இருக்கறதுதான் புத்திசாலித்தனம் பெருசு..."

"அப்போ கம்பெனியும் நடத்தி ஊர் நாசமாகாமயும் இருக்க வழியிருக்குன்னு சொல்லு...."

"இருக்கு. தொழிற்சாலைல இருந்து வர்ற

## அன்பான வேண்டுகோள்




இவ்வாதரவற்ற குழந்தைகள் தங்களாலும், இறைவனாலும் ஆசீர்வதிக்கப் பட்டவர்கள். இக் குழந்தைகளும், குருகுலத்தில் உள்ள முதியோர்களும் வரும் தீபாவளி திருநாளை நம் வீட்டில் உள்ளவர்கள் மகிழ்ச்சியாகக் கொண்டாடுவது போல் குருகுலத்திலுள்ள அனைவரும் கொண்டாட தங்கள் உதவியை நாடுகிறோம்.

தாங்கள் பணமாகவோ, காசோலையாகவோ, பட்டாசுகளாகவோ, இனிப்பு களாகவோ, துணிமணிகளாகவோ அல்லது அரிசி, கோதுமை, எண்ணெய் போன்ற பொருட்களாகவோ இத் தீபாவளி திருநாளை கொண்டாட மனமுவந்து தாராளமாக உதவிக்கரம் நீட்டுமாறு அன்புடன் வேண்டிக் கேட்டுக் கொள்கிறோம்.

தாங்கள் 350 ஆதரவற்ற குழந்தைகளுக்கும், முதியோர்களுக்கும் அனுப்ப வேண்டிய நிதியுதவியினை,

நிர்வாகி,
"சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்"
நெ. 20, கம்பர் தெரு,
கிழக்கு தாம்பரம்,
சென்னை - 600 059.
தொலைபேசி எண்கள் :
2369 078, 2369 444.

சென்னையில் நன்கொடை கொடுக்க
வேண்டிய முகவரி :
மெஸர்ஸ். பிரகாஷ் டிரேடிங் கம்பெனி,
நெ. 156, தம்பு செட்டி தெரு,
சென்னை - 600 001.
தொலைபேசி எண்கள் :
5342 428, 5342 803

E-mail : sivanand@md2.vsnl.net.in

**FOR MORE DETAILS ABOUT OUR ASHRAM VISIT OUR WEBSITE:**

http: www.indiadirect.com/sivananda-ashram





–ஆத்மாஸ்

கழிவுநீரை அப்படியே ஆத்துல கலக்காம அதைச் சுத்தம் பண்ணி விட்டாக்கா, ஆற்று நீர் கெடாம இருக்கும். ஆனா 'ஈடீபீ'னு சொல்ற அந்தச் சுத்தம் செய்யற வேலையை பொதுவா கம்பெனிங்க செய்யறதே யில்லை."

நிறைய நிறைய விஷயங்கள் சொன்னான் சத்யம். ஊர் மக்கள் வாய்பிளந்து கொண்டு கேட்டனர்.

படிப்பறிவில்லாத அமாவாசைக் கிழவருக்கு சத்யம் சொன்னதில் பல புரியா விட்டாலும் சில விஷயங்கள் மட்டும் ஆணித்தரமாகப் புரிந்தன.

'காற்றும் நீரும், நிலமும் மாசுபடாமல் கம்பெனியையும் நடத்த முடியும்...' என்ற விஷயம் அவரின் நம்பிக்கையை விதைத்தது.

தொழிற்சாலை தொடங்குவது தடைபட்டபோது அது தாற்காலிகத் தடையாகத் தான் இருக்கும் என நினைத்தார் சோப்ரா. ஆனால் ஆற்றங்கரைத் திடலில் சத்யத்தின் தலைமையில் கூட்டம் நடந்ததைப் பற்றிக் கேள்விப்பட்ட சோப்ரா, 'இந்தச் சிக்கலை விளக்கி தொழிற்சாலையைத் தொடங்க சத்யத்தை 'கன்வின்ஸ்' செய்வது ஒன்றே வழி எனப்பட்டது சோப்ராவிற்கு.

'சத்யத்தை பேச்சு வார்த்தைக்கு அழைத்தால் வருவதற்கு முரண்டு பிடிக்கலாம். விவரமாகப் புள்ளி விவரங்களை குறித்து சத்யத்தின் பார்வைக்கு அனுப்பினால் என்ன?' என்று தோன்ற, உடனடியாக அதைச் செயல்படுத்தினார் சோப்ரா.

சோப்ரா அனுப்பிய பல புள்ளி விவரங்கள் சத்யத்திற்கு ஓரளவு திருப்தி அளித்தாலும் தனி ஒருவனாக எந்த முடிவையும் எடுக்க முடியாத நிலையில் சத்யம், "ஊர் கூடித்தான் எந்த ஒரு முடிவும் எடுக்க முடியும்" என்று சொல்லி அனுப்பி விட்டான்.

அன்று கிராமம் விழாக் கோலம் பூண்டது.

பேண்டும் சூட்டுமாய் பலப்பல ஆபீசர்கள்.

எதிர்ப்பை உமிழும் கிராமத்து ஜனங்கள்.

சோப்ரா எளிமையாகவும் பொறுமையாகவும் பல விஷயங்களை விளக்கிக் கொண்டிருந்தார். "இந்த ஊர்க் காற்றையும் நீரையும் மாசுபடாமல் பாதுகாப்பது தம் கடமை என சூளுரைத்தார். சுத்திகரிப்பு பிளாண்ட் பற்றி அக்குவேறு ஆணிவேறாக அலசினார்.



"போலீசுக்கா சார் ஃபோன் பண்றீங்க? வேஸ்ட் சார், ஃபோன் செலவு! வரும்போது இன்ஸ்பெக்டர்கிட்ட நான் சொல்லிட்டுத்தான் வந்தேன்!"

– சீர்காழி வி.ரேவதி

அப்பொழுதுதான் அமாவாசைக் கிழவர் எழுந்தார். "அய்யா எனக்கு ஒரு சந்தேகம். கேக்கலாமுங்களா?"

"ஓ... கேளுங்க..." என்றார் சோப்ரா.

இந்தக் கிழவர் என்னதான் கேட்கப் போகிறார் என்பதைக் கேட்க ஊர்க் கூட்டம் வாய் பொத்தி காது தீட்டிக் காத்திருந்தது.

"ஐயா நீங்க காத்தையும், தண்ணியையும் கெடுக்காம கம்பெனி நடத்துவோம்னு சொல்றீங்க. அதுக்கு இது இது இப்படிச் செய்வோம்னு பட்டியல் போடறீங்க. அதோட இந்த ஊர் சத்தியத்துக்கு கம்பெனி நிர்வாகத்தைப் பார்க்கற அதிகாரத்தையும் கொடுக்கறதாச் சொல்றீங்க. அதெல்லாம் உங்க நேர்மையைக் காட்டுது. நான் கேட்க நினைச்சது என்னன்னா.... ஒவ்வொரு நாளும் இந்தச் சுத்திகரிக்கற வேலைக்கு எவ்வளவு செலவு செய்வீங்கன்னு சொல்ல முடியுமா?"

கோப்பை புரட்டிய சோப்ரா, "ஒரு நாளைக்கு உத்தேசமா இருபதினாயிரம் ரூபாய் ஆகும் பெரியவரே..." என்றார் சோப்ரா.

"அந்தச் செலவு இருபதினாயிரம், கம்பெனியைப் பொறுத்தவரை லாபமா நட்டமா?"

சோப்ரா வியந்தார். 'சத்தியம் கிராம மக்களை நன்றாகத்தான் விழிப்புணர்வூட்டியிருக்கிறான்' என நினைத்துக் கொண்டார்.

அமாவாசைக் கிழவரே தொடர்ந்தார். "நீங்க சுத்திகரிப்புக்காகச் செய்யற செலவு கம்பெனியைப் பொறுத்தவரை நட்டம் தான். அந்தச் செலவு செய்வதை ஒருநாள் ஒரே ஒருநாள் நிறுத்திக்கிட்டா கூட கம்பெனிக்கு இருபதினாயிரம் லாபம் அப்

## நூல் வெளியீட்டிலும் ஒரு பரபரப்பா?

**நூ**ல் வெளியீட்டு விழா கூட பரபரப்பை உண்டாக்க முடியுமா? முடிந்திருக்கிறது கேரளாவில். ஓய்வு பெற்ற நீதிபதி சுகுமாரன் 'வாழ்க்கையும் சட்டங்களும்' என்றொரு மலையாள நூலை எழுதினார். அதை இப்போதைய கேரள உயர்நீதி மன்றத்தின் தலைமை நீதிபதியாகப் பொறுப்பு வகிக்கும் நீதிபதி லட்சுமணன் வெளியிட்டு, சிறப்புரையாற்றினார். இதுதான் பரபரப்பாகிவிட்டது. காரணம், அந்த நூலில் பொது இடங்களில் புகை பிடிப்பதற்கு எதிராக கேரள உயர்நீதி மன்றம் உத்தரவு பிறப்பித்ததை எதிர்த்து ஒரு கட்டுரை உள்ளது. அந்த உத்தரவைப் பிறப்பித்த நீதிபதிகளில் லட்சுமணனும் ஒருவர். நீதிபதி லட்சுமணனுக்கு மலையாளம் தெரியாது. எனவே, அவர் வெளியிடப் போகும் நூலில் உள்ள விஷயங்களை அவருக்கு விளக்கிச் சொல்லியிருக்க வேண்டாமா? அப்படிச் சொல்லாமல் அவரது உத்தரவுக்கெதிரான கட்டுரையுள்ள ஒரு நூலை அவரைக் கொண்டே வெளியிட வைத்ததுதான் பரபரப்பை உண்டாக்கிவிட்டது.



– எஸ். எஸ். மணி

படித்தானே..."

"பெரியவரே... இப்படிச் சுத்தம் செய்யாம ஆத்துல கலந்தா சுற்றுச்சூழல் அதிகாரிகள் வந்து கம்பெனியை மூடி சீல் வெச்சிட்டு போயிடுவாங்க பெருசு..."

"ஒருநாளைக்கு இருபதினாயிரம்னா... மாசத்துக்கு கிட்டத்தட்ட ஆறு லட்சம் ரூபாய் இதுக்காகச் செலவு பண்ணப் போறீங்க. இந்த ஆறு லட்சத்துல ஒரு லட்சமோ இல்லே ரெண்டு லட்சமோ நீங்க சொல்ற அந்த அதிகாரிகளுக்குக் கொடுத்தாக்கூட கம்பெனிக்கு மீதி நாலு லட்சம் லாபம்தானுங்களே... அதனால..."

"அதனால தொழிற்சாலை தொடங்க வேணாம்னு சொல்றீங்களா பெருசு..."

"ஐயா நான் படிக்காதவன், கைநாட்டு. எங்களைப் போல உள்ளவங்களுக்கெல்லாம் தெரிஞ்சது இந்த ஊர் மண்ணும் காத்தும் தண்ணியும்தான். இதுங்களை மாசுபடாம பாதுகாக்க மனுசனோட சுயநலம் ஒண்ணுதான் வழின்னு எனக்குத் தோணுது..."

"நீங்க என்னதான் சொல்ல வர்றீங்க பெரியவரே...?"

"ஐயா! நீங்க மனச்சாட்சிக்குக் கட்டுப்பட்டு கம்பெனி நடத்துவேன்னு சொல்றீங்க. இந்த ஊர் சத்தியத்தையே ஆலை நிர்வாகத்தை கவனிக்கச் சொல்றதா சொல்றீங்க. நீங்களும் சத்தியமும் இருக்கற வரைதான் இந்தக் கம்பெனி நடக்கப் போறதில்லை. உங்களுக்குப் பிறகும் கம்பெனி நடந்துக்கிட்டுத்தான் இருக்கும். உங்களுக்குப் பிறகு நிர்வாகத்துக்கு வர்றவங்க உங்களைப் போலவே நேர்மையானவங்களா இருப்பாங்கங்கறதுக்கு என்ன உத்தரவாதம் இருக்கு...?

".... .... ...."

"அதனால நான் சொல்றபடி அக்ரிமெண்ட் போட்டுக்கிட்டு கம்பெனியை தாராளமா தொடங்கி நடத்தலாம்..." என்ற அமாவாசைக் கிழவரின் யோசனை என்னவாக இருக்கும் என்பதை அறிய சோப்ரா முதல் ஊர் கூட்டம் வரை காது தீட்டிக் கேட்டுக் கொண்டிருந்தது.

"ஐயா நீங்க கம்பெனி கட்டறதுக்கு தேவையான இடத்தைப் போல இரண்டு மடங்கு நிலங்களை வளைச்சிப் போட்டு இருக்கீங்கல்ல. கம்பெனி இடம் போக மீதி இடத்துல கம்பெனில வேலை செய்யற அத்தனை ஊழியர்களுக்கும் முதல்ல குடியிருப்புக் கட்டுங்க..."

"குடியிருப்புக் கட்டறதுனால..."

"குடியிருப்புக் கட்டறது முக்கியமில்லை. எல்லா ஊழியர்களும் கண்டிப்பாக அந்தக் குடியிருப்புலதான் குடும்பத்தோட தங்கியாகணும்னு கண்டிஷன் போட்டுடுங்க. அதோட முக்கியமான ஒண்ணு செய்யணும். அந்தக் குடியிருப்புல தங்கறவங்களுக்கு இந்த ஊர் ஆத்து தண்ணியைத் தவிர வேற தண்ணி வசதியே செய்து தரப்படாதுன்னு கண்டிஷன் போட்டுட்டா பொதுநலம் கருத வேண்ணாலும் சுயநலத்துக்காகவாவது ஆத்துத் தண்ணியைக் கெடுக்காம காலம் முழுக்க கம்பெனி நல்லா நடக்கும். ஏதோ எனக்குத் தெரிஞ்சதைச் சொல்லிப்புட்டேன். நீங்க முடிவு பண்ணிக்கங்க..." என்று சொல்லிவிட்டு கிழவர் அமர, சோப்ரா அமாவாசைக் கிழவர் பாதம் தொட்டு வணங்கினார்.

முந்நூறு குடும்பங்கள் குடியிருக்கும் அளவிற்கு குடியிருப்புகள் கட்டப்பட அடுத்த வாரம் அடிக்கல் நாட்டப்படும் என அறிவித்தார்.

அதோடு அந்த ஊர்ப் பெரியவர் அமாவாசை அவர்கள்தான் வந்து திறப்பு விழா செய்ய வேண்டும் என்றபோது, அமாவாசைக கிழவரின் கண்கள் இரண்டு நிலவுகளைப் போல் பிரகாசித்துக் கொண்டிருந்தன. ●

# உயிர்களைத் தேடித் தேடி

**செய்யாறு தி. தா. நாராயணன்**

> **"மிஸ்டர் தாமு! பிஹேவ் யுவர் செல்ஃப். தலைவரிடம் பேசுகிறோம் என்பதை நினைவில் கொள்ளுங்கள்."**

"மூன்று நாட்களுக்கு முன்பு சூர்யா, ஜானா என்ற இரண்டு பேருக்கு ஏர் பஸ் டிக்கெட் எடுக்கப்பட்டிருக்கிறது. டிக்கெட் தமிழ் கண்டம் பார்டரில் கலாஷி எனும் கிராமத்திற்கு எடுக்கப்பட்டிருக்கிறது. அது மலையடிவாரத்திலுள்ள பசுமையான கிராமம். தொழிற்சாலை நாற்றங்கள் நுழையாமல் பராமரிக்கப்படும் மாதிரி கிராமங்களில் இதுவும் ஒன்று." ஏ.எஸ். கமான்டர் விவரமாய்ச் சொல்ல,

"ஸ்...ஸ்...ஸ்... கதையெல்லாம் கேட்டேனா?"

"சாரி... சா..ரி... சாரி சார்! ஏர் பஸ் போயிருக்கிறது. இன்னும் ஒரு மணி நேரத்தில் அவர்களை உங்கள் முன் நிறுத்தி விடுவேன் சார்!"

"டாமிட்! ஒரு மணி நேரமா? இங்கே வழி தெரியாமல் எல்லோரும் துடிச்சிக்கிட்டிருக்கோம். லிஸன்! ஒன்லி, ஒன்லி ஹாஃப் அன் அவர். க்விக்!" – நெர்வஸாகக் கத்தினார்.

"வாட் அபௌட் தாமு?"

"முழிச்சிக்கிட்டார் சார்!"

மயனும் சில விஞ்ஞானிகளும் முன்னால் ஓட, தலைவர் விரைந்தார். தாமு முகத்தை முழங்கால்களில் புதைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார்.

"சார்! தாமு சார்! கலங்காதீர்கள் ப்ளீஸ்!"

"மயன்! சூர்யா எங்கே? அவளிடம் நான் பேச வேண்டும். ப்ளீஸ் கூப்பிடுங்கள்."

"சார்! சூர்யா கலாஷி எனும் கிராமத்திற்கு ரெஸ்டுக்காகப் போயிருக்கிறாள். தகவல் போயிருக்கிறது. சீக்கிரம் வந்து விடுவாள். இதோ தலைவரிடம் பேசுங்கள்."

"தாமு! உன் நண்பனாக உரிமையுடன் பேசுகிறேன். டோன்ட் கெட் எக்ஸைட்டட். ஒரு தலைமை விஞ்ஞானி தூண் போல நிற்க வேண்டும். கலக்கம் கூடாது."

விலுக்கென்று எழுந்து கொண்டார். கண்கள் சிவந்து போய் உதடுகள் துடித்தன.

"போய் விட்டது என் பிள்ளை, ஒரே மகன். ரஷ்ஷு!"

உதடுகள் கோணிக் கொண்டு, அழுகை வரும் போலிருந்தது.

"உன் பதவியைக் காப்பாற்றிக் கொள்ள, சாதனை என்று தம்பட்டம் அடிக்க, இந்தப் பயணம். அதற்கு என் மகன் முதல் பலி. எப்படிக் கெஞ்சினேன்? பாவி!"

"தாமு ரிலாக்ஸ் ப்ளீஸ்! ஒன்றுமாகி விடவில்லை. டெலஸ்கோப் இமேஜைப் பார்த்து விட்டேன். நீயும் பாரு. தொடர்பு விட்டுப் போயிருக்கு. ஈஸியாக சரிபண்ணி விடலாம்."

அவருக்கு மேலும் கோபம் ஏறிப்போக, "எனக்கு மெக்கானிஸத்தைச் சொல்லித் தர்றியா? நீங்களெல்லாம் பொய்யர்கள். ரஷ்ஷு! உன்னை எங்கே என்று தேட முடியும்?" – அறிவுக்கான, பதவிக்கான, குணாதிசயங்களேதுமின்றி உடைந்து போய் சாதாரண மனிதனாய், உணர்ச்சிகளும் பாசங்களும் மிகுந்த சராசரி மனிதனாய் லேசாய் விசும்பினார்.

"மிஸ்டர் தாமு! பிஹேவ் யுவர் செல்ஃப். தலைவரிடம் பேசுகிறோம் என்பதை நினைவில் கொள்ளுங்கள்."

"ஹூ கேர்ஸ்?" திட்டினதுக்காக சமூக விரோதின்னு முத்திரை குத்தி என்னைத் தூக்கில் போடச் சொல்லு உன் தலைவனை. அதுதான் செய்ய முடியும். ரஷ்ஷுவே போய் விட்டான். நான் சாகத் தயார். உம்



# 6

போடச் சொல்லு.”

இன்னும் சப்தம் போட்டு திட்ட ஆரம்பித்தார். அவரை டாக்டர்கள் பொறுப்பில் விட்டு விட்டு அவர்கள் நகர்ந்தனர்.

“சார்! தப்பா நினைக்காதீங்க. வந்து... வந்து... மிஸ்டர் தாமு சார் அப்படி ரியாக்ட் பண்ணுவார்னு எதிர்பார்க்கவில்லை.”

''பரவாயில்லை மயன்! தாமுவின் டெம்ப்ரமெண்ட் எனக்குத் தெரியும். இப்ப பேசினது அவருக்குள் இதுவரையிலும் உறங்கிக் கொண்டிருந்த குழந்தை மனசு. மென்மையான பகுதி. நினைத்தது கிடைக்கவில்லையானால், கிடைத்ததை அடித்து நொறுக்கும் சீற்றம். இப்படி ஒரு பகுதி எல்லா மனிதர்களிடமும்தான் இருக்கிறது. நான் அறிவேன். அவருக்கு ஏற்பட்டது ஆறுதல் சொல்ல முடியாத இழப்புதானே? ஒரே மகன். ஆல்ரைட் உங்க அபிப்ராயம் என்ன? எப்படித்தான் இந்த விபத்து ஏற்பட்டிருக்க முடியும்.''

“யோசிக்கிறேன் சார்! இரண்டு சாத்தியங்கள்! ஒன்று, யாராலோ எஸ்.ச கடத்தப்படுகிறது. அது நம் எதிரிகளாக இருக்கலாம். இரண்டு, நாம் யூகிக்க முடியாதபடி வேற்று கிரகவாசிகளின் ஆக்ரமிப்பில் எஸ்.ச. சிக்கிக் கொண்டிருக்கலாம்!”

“வேற்று கிரகவாசிகளா? நீங்கள்லாம்கூட நம்ப ஆரம்பிச்சுட்டீங்களா?”

“எஸ். அஃப்கோர்ஸ் சார்! சமீபத்தில் வேற்று கிரகவாசி ஒன்றை ரகசியமாக ட்ராக் பண்ணிப் பிடிச்சிட்டாங்களே! வித்தியாசமான ஸ்பீஷீஸ். பெரிய தலையும், குச்சி குச்சியாய் கால்களுமாக, பச்சை நிறத்தில் இருக்கிறது. இன்னும் விஷயம் வெளிவரவில்லை. விஞ்ஞானிகள் மட்டத்தில் ரகசியம் காக்கப் படுகிறது. அண்டர் அப்ஸர்வேஷன்.”

அப்போது செகண்ட் போர்டிலிருந்து மிஸ்டர் யாக்ஷி. குரல் அலறலாய்க் குறுக்கிட்டது.

“சார்...! சார்...! எஸ்.ச.யிலிருந்து சிக்னல்கள் கிடைக்கிறது.”

“பீப்... பீப்... பீப்...பீப்.”

அந்தப் பெரிய ஹாலிலிருந்த அத்தனை விஞ்ஞானிகளும் திபு திபுவென்று ஓடி வந்து செகண்ட் போர்ட்டைச் சுற்றிச் சூழ்ந்து கொண்டது திரையில் தெரிந்தது.

"பீப்...பீப்...ஷ்....ஷ்....ஹலோ...பீப்...பீப்."

"ஹலோ...ஹலோ...த்சு...வீக் சிக்னல்ஸ்...ஒருவேளை ஆன்டெனாவில்தான் ப்ராப்ளமா? ஹலோ...ஹலோ...ஆ...ம்... எஸ்...எஸ்.ஈ?"

"................?"

"எஸ்! கேட்குது...சார்! ஆடியோ லைன் மட்டும் கிடைக்குது...ஹலோ...ஹலோ...நீங்க யார்?"

"எஸ். யார் வேணும்? யார்?... தாமு... மிஸ்டர் தாமுவா?"

ஒரு பத்து பேர் தபதபவென்று ஓடி தாமுவிடம் சுருக்கமாய்ச் சொல்லி, சற்றேரக் குறைய இழுத்துக் கொண்டு, இல்லை தூக்கிக் கொண்டு ஓடி வந்தார்கள். தலைவர் வறுக் வறுக்கென்று நகத்தை மென்று துப்பிக் கொண்டிருந்தார்.

"நான்... நான் தாமு பேசறேன்!" - எல்லோரும் அவரைச் சூழ்ந்து கொண்டு ஆசுவாசப் படுத்தினார்கள்.

"ஹலோ! ரஷ்ஷு! கண்ணா?" - அவருக்குக் கண்ணீர் பொத்துக் கொண்டு வர, வார்த்தை தடுமாறியது.

"அப்பா! ஸ்பேஸ் ஈகிளிலிருந்து நான் சூர்யா பேசுகிறேன்" - அந்த விஞ்ஞானக் கூடமே ஓவென்று கூக்குரல் போட்டு விட்டது. ஹால் முழுக்க சளசளவென்று பேச்சு கிளம்பியது.

சூர்யா... சூர்யாவா? மிஸ்டர் தாமுவின் மகளா? இது எப்படி நடக்கும்? செக்யூரிட்டி என்ன பண்ணியது? எத்தனை கம்ப்யூட்டர்கள்? அவைகளிடமிருந்து எப்படி தப்ப முடிந்தது? சூர்யா, ஜானா, கலாஷி கிராமம், ரெஸ்ட் இதுக்கெல்லாம் என்ன அர்த்தம்?

"சூர்யா... சூர்யா! எஸ்.ஈ.யிலிருந்தா? ஒன்றுமே புரியலையே. என்னம்மா இதெல்லாம்? ஐயோ எனக்கு மயக்கமாக வருதே. ரஷ்ஷு எங்கேம்மா?"

"இருக்கிறேன்பா! என்ன செய்யறதுன்னு தெரியல."

இப்போது தரைக்கும் எஸ்.ஈ.க்குமிருந்த தொடர்புகள் சீராகிவிட, திரையில் சூர்யா தெரிந்தாள். அந்தரத்தில் மிதந்தபடி பேசிக் கொண்டிருந்தாள். பக்கத்தில் ரஷ்ஷு. படுத்தபடி மிதந்து கொண்டிருந்தான்.

"அப்பா! என் வேண்டுகோளுக்கு நீங்களோ இந்த அரசோ செவி சாய்க்கவில்லை. என்ன செய்ய? இது என் குறுக்கு வழி. உங்களனைவரின் கண்களிலும் மண்ணைத் தூவினேன். கம்ப்யூட்டர்களையெல்லாம் என் பொருட்டு பொய் பேச வைத்தேன். எவ்விதத்திலேனும் நான் நினைத்ததை அடைந்தே தீருவேன்."

"ஓ...ஹௌ ஃபூலிஷ்! இது எப்படி சாத்தியம்? சூர்யா! ரஷ்ஷுவின் ஐம்பத்தெட்டு கிலோ எடைக்குத்தான் எல்லாமே சரி செய்யப்பட்டிருக்கிறது. வெலாசிட்டி, எஃப்.சி. ரேட், ஸ்பெஸிபிக் இம்பல்ஸஸ்... எவ்ரிதிங். பேலோடு மாறினால் இந்தப் பயணம் முழுத் தோல்வி. செவ்வாய்க்குப் போய்ச் சேர முடியாது. இடையில் எரிபொருள் தீர்ந்து விடும். அப்படியே போய்ச் சேர்ந்தாலும் எரிபொருளின்றி சரியாக 'லேண்ட்' ஆக முடியாது தரையில் மோதிச் சிதற வேண்டியது தான். ஐயோ! உங்க இரண்டு பேரையும் மொத்தமாக இழந்து விட்டேன்!" - அவர் தலையைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்து விட்டார்.

"சூர்யா! தேச துரோகக் குற்றம் இது. தண்டனை என்ன தெரியுமல்லவா?" - இது தலைவர்.

"எதுவாயிருந்தாலும் நான் ஏற்றுக் கொள்கிறேன் தலைவரே! சற்று நேரம் குறுக்கிடாமல் நான் சொல்வதைக் கவனியுங்கள் இந்தப் பயணம் எவ்விதத்திலும் தோல்வியில் முடியாது. லிஸன் ப்ளீஸ்! என் எடை 46.5 கிலோ ப்ளஸ் என் லக்கேஜ் 132.75 கிலோ. இந்த எக்ஸ்ட்ரா எடையுடன் எஸ்.ஈ. தன் எஸ்கேப்பிங் லெவாசிட்டியின் வேகம் செல்ல மொத்தம் 115.61 கி.கி. ஹீலியமும், 42.120 கி.கி. ட்யூட்ரியமும் தேவை. எல்லாவற்றையும் கம்ப்யூட்டரில் கணக்கிட்டு, உத்தரவுகளை கடைசி நேரத்தில் மானிட்டரில் ஃபீட் பண்ணி விட்டேன். மொத்த பயணக் காலத்தில் ஒரு மாதம், எட்டு நாள், ஐந்து மணி நேரத்தைக் குறைத்து விட்டால் போதுமானது. எனவே டையமோஸுக்குச் சென்று ஆராய்ச்சி செய்ய திட்டமிடப்பட்டிருந்ததை கேன்ஸல் செய்து விடுகிறோம். அத்துடன் செவ்வாயில் தரையிறங்கும்போது எஜெக்டர்களை உபயோகித்து எரிபொருளை வீணாக்கப் போவதில்லை. அங்கு காற்று மண்டலம் ஒத்துழைக்குமானால் பாரசூட்டில் தரையிறங்கப் போகிறோம். ரஷ்ஷுவின் ஸ்பேர் ஸ்பேஸ் சூட்டை அணிந்து கொண்டிருக்கிறேன். எப்படியும் சமாளிப்போம் கவலைப்படாதீர்கள் டாட்!"

"என்ன காரியம் செய்து விட்டாய் சூர்யா? ஒரு பயிற்சியுமில்லாமல் சூன்யத்தில் எப்படி சமாளிக்கப் போகிறாய்?" என்றார் தலைவர்.

"இதில் நான் செத்தாலும் சந்தோஷம்

தலைவரே!"

இனி செய்வதற்கு யாதொன்றுமில்லை என்று தாமு இடத்துக்குப் போய் உட்கார்ந்து விட்டார். 25.48 மில்லியன் கிலோமீட்டர்கள் தூர பயணம்! பயமில்லாமல் எவ்வளவு கலபமாக விளையாடுகிறாள்?

"அப்பா! என்னைப் பற்றிக் கவலைப் படாதீர்கள். நான் கொடுத்த தகவல்களை Ind. 2000ல் கொடுத்துப் பாருங்கள். என் மூளை புரியும். ஒரு வாரமாய் தூங்காமல் சாதித்தேன். இதில் என் தவறு எதுவுமில்லை. கடைசி நேரத்தில்கூட உங்கள் அனுமதி யைக் கேட்டுப் பார்த்தேன்!"

தாமுவுக்கு வாய் உலர்ந்து போயிருந்தது. பைத்தியக்காரப் பெண்ணே! உனக்கு எப்படி விஷயத்தைப் புரிய வைப்பேன்? அங்கே காத்திருக்கும் ஆபத்துகள் புரியுமா உனக்கு? ஏன் ரஷ்ஷுவை அனுப்ப பயந்தேன் என்று தெரியுமா?

"சரி. சூர்யா! நான் சொல்லும் இது ஒன் றையாவது கேள். ராக்கெட்டின் முழுக் கட்டுப்பாடும் கோபக்ஸிடம் இருக்கட்டும். அதன் ப்ரோக்ராமிங்கில் இஷ்டத்திற்கு விளையாடலாம் என்று நினைக்காதே."

"அது யார் கோபக்ஸ்?"

"அங்கிருக்கும் ரோபோவுக்கு அதுதான் பெயர். ரோபோவின் விஷயங்கள் சில வற்றை உன்னிடம் மறைத்து விட்டோம், ஒரு காரணத்திற்காக. அதை நேரில் சொல் கிறேன். மாடல் RD 5885. PN என்று அதை எண்ணிக் கொண்டிருக்கின்றாய். இல்லை! அது யாரும் பார்க்காத புது மாடல். இன் னும் வெளியுலகத்திற்குத் தெரியாத ஒரு சில புதிய சித்தாந்தங்கள் அதில் பரீட்சித்துப் பார்க்கப்பட்டிருக்கிறது. தைவானில் வடி வமைத்தது. நீ போற்றும் மிஸ்டர் ஷாங்க் ருவால் வடிவமைக்கப்பட்டது. ஆராய்ச்சி என்று அதனிடம் எதுவும் முயற்சிக்காதே டேஞ்சரஸ் டிவைஸ். வேகமாய் முடிவெடுக் கும். ரஷ்ஷுவின் துணைக்காக அனுப்பப் பட்டிருக்கிறது!"

"ஓகே டாட்!" - திரும்பி அதைக் கண் கொட்டாமல் அளவிட்டாள். அது சாது வாய் நான்கு நொடிக்கொருமுறை கண்களை மூடித் திறந்து கொண்டு உட்கார்ந்திருந்தது.

"கிளாட்டு டு மீ யூ கோபக்ஸ்!"

"வெரி கிளாட். ஒரு உண்மையைச் சொல்லட்டுமா?"

"என்ன?"

"யாருக்கும் தெரியாமல் ராக்கெட்டில் நீங்கள் பண்ணிய தப்பு வேலைகள் எனக்கு அப்போதே தெரியும்."

"ஈஸ் இட்? எப்படி? உன்னை ஆஃப் பண்ணி விட்டுத்தானே ஆரம்பித்தேன்."

"அது போலி ஸ்விட்ச், எதிரிகளை ஏமாற்ற. உண்மையில் நான் அட்டானமஸ். சோலார் பேனல்களிலிருந்தும் ஏ.பியுஷன் ஜெனரேட்டர்களிலிருந்தும் எனக்குச் சக்தி கிடைக்கிறது. சில மாதங்களுக்குக் கூட சேமித்து வைத்துக் கொள்ள முடியும். என் விஷயம் முழுவதும் ரகசியம். எனக்கு எவ்வளவு தெரியும்? என்பது மிஸ்டர் தாமு ஒருவருக்குத்தான் தெரியும்."

"ப்பூ... இப்போதே தெரிந்து கொள் கிறேன். கிட்ட வா உன் மண்டையைத் திறந்து பார்க்க வேண்டும். அப்புறம்



**"உங்களுக்கு டைவர்ஸ் ஆன விஷயத்தை எல்லா பத்திரிகை நிருபர் களையும் கூப்பிட்டுச் சொல்றீங்களே ஏன்?"**

**"மேரேஜ் ஆனப்ப சொல்லலைன்னு எல்லாரும் வருத்தப்பட்டாங்க... அதான்...!"**

**— சீர்காழி ரேவதி**

இரண்டே இரண்டு கேள்வி போதும். சரி உன் ஐக்யூ எத்தனை ஐம்பதுக்கு மேலேயே இருக்குமா?"

"வேண்டாம் சூர்யா! திறந்தவுடன் நான் இறந்து போவேன். என் ப்ரோக்ராமிங் அப்படி. என் ஐக்யு பற்றி... ஊஹூம்."

"சரி... சரி... தெரிந்தும் ஏன் என்னைத் தடுக்கவில்லை?"

"லாசர் பீம் உங்களை இந் நேரம் அழித்து விட்டிருக்கும். ஆனால் நண்பராக என் மூளையில் அடையாளம் காட்டப்பட் டிருக்கிறீர்கள். நண்பர்களை துவம்சம் செய்ய ஆணையில்லை."

எழுந்தாள்.

"நாம் மூவரும் இந்த நீண்ட ஆபத்துக்கள் நிறைந்த பயணத்தின் சக பயணிகள். சந் தோஷமாயிருக்கிறது."

(தொடரும்)

எங்கே போறே....

மொட்டை மாடியில துணி நனையுது...

போகாதே! நீயும் சேர்ந்து நனையுவே...

குடை எதுக்கு...?

மேல் மாடிக்குப் போய்...

வேணாம்! அடிக்கற காத்துல குடை பிஞ்சுடும்!

# டுப்பியின் குடும்பம்

அலமு: அரஸ்

புது ரெயின் கோட் நாசமாயிடும், போகாதே!

மொட்டை மாடிக்குத்தான்...

வேண்டாம்!

டுப்பி! என்னதிது!

நீயும் வா! குடைக்கும் ஒரு சான்ஸ் கிடைக்கும்...

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN/MS (S) M4392/99* Licensed to post without prepayment under PMG's Licence No. TN/MS/(S) 161 * Registered as a Newspaper in Srilanka

# வெண்மையின் புதிய நிறம் உஜாலா




**உஜாலா**

உஜாலாவின் துரித செயல்திறன் தண்ணீரில் உடனடியாக கரைகிறது மற்றும் துணிகளின் மீது ஆழமாக செயல்பட்டு பளபளக்கும் வெண்மையை சீராக தருகிறது. துணிகளை மீண்டும் துவைக்கும் போது உடனடியாக அழுக்குடன் வெளியே தள்ளப்பட்டு விடப்படுகிறது. உஜாலாவை திரும்ப உபயோகிக்கும் போது புதுப்பித்த வெளிச்சம் பரவுகிறது. ஓரல்-டாக்ஸிஸிடி, சரும அரிப்பு ஆகிய டெஸ்டுகளில் தீங்கற்றது மற்றும் சருமத்திற்கு ஹானியற்றது என சர்ட்டிபிகேட் பெற்ற விஞ்ஞான ரீதியான தயாரிப்பு ஆகும் உஜாலா.

எல்லாவற்றிற்கும் மேல், ஜோதி லேபாரட்டரீஸின் தயாரிப்பு அல்லவா உஜாலா!

**உஜாலா**

கேட்டு வாங்கும் போது உஜாலாவைப் போல் தோற்றமளிக்கும் மற்றொன்றுமல்ல தருகிறார்கள் என்பதை உறுதிக் கொள்ளுங்கள்

A Product of JYOTHY LABORATORIES, Mumbai.